# சந்திர குமார்

(இன்பமளிக்கும் இலக்கிய நாவல்)




*

ஆசிரியர் :

**பெ. கே. வேணுகோபாலன்,**

[பச்சையப்பன் கல்லூரி கலைமணி (B.A.) வகுப்பு மாணவர்]



*

பதிப்பாசிரியர் :

**வித்துவான், மு. குப்புசாமி அவர்கள்,**

தமிழாசிரியர், போர்டு உயர்நிலைப் பள்ளி,

களம்பூர், வடார்க்காடு மாவட்டம்.



*

மதிப்புரை வழங்கிய சான்றோர்கள் :

உயர்திரு,

**அ. மு. பரமசிவானந்தனார்,** எம். ஏ., எம். லிட். அவர்கள்

துணைத் தமிழ்ப் பேராசிரியர்,

பச்சையப்பன் கல்லூரி, சென்னை.

உயர்திரு. **வித்துவான், பெ. அண்ணாமலையார்,** அவர்கள்

தலைமைத் தமிழாசிரியர்,

அர்ச், கேபிரியல் உயர்நிலைப் பள்ளி, சென்னை.

*




**செல்வமணி நிலையம்**

எண் 6, செல்லம்மாள் தெரு.

இலக்குமிபுரம் :: சென்னை-30.

# முன்னுரை

1197

"தமிழ் மொழி வளர்ச்சிக்கு நாம் என்ன செய்யக் கூடும்?" என்று என் உள்ளத்தில் எழுந்த கேள்வியே இப்புனைந்துரை கதையாம் "சந்திரகுமார்" தோன்றிய தற்குக் காரணம். "முயற்சி திருவினையாக்கும்", "முயன்றால் முடியாத தொன்றில்லை," என்ற குறிக்கோளின் படி ஒரு ஏழைக் குடும்பத்தில் தோன்றிய சிறுவன் கல்வியில் உயர்ந்து வாழ்க்கையிலும் வெற்றிச் சிகர மடையும் அவனது முயற்சி படிப்பவருள்ளத்தைக் கவரும் என்பது உண்மை. இந்தக் கதாநாயகனாகிய சந்திரனும் கதாநாயகியான மோகனாவும் தம் காதல் வாழ்வுக்குற்ற கடும் சோதனைகளை யெல்லாம் கடந்து இறுதியில் வெற்றியின்ப வளங் காண்கின்றனர். இயற்கையின் அங்கமாய் இலங்கும் இல்லற வாழ்வு—காதல் வாழ்வு ஏற்றமுற இளங்காதலர்களின் இயல்புகளை அறநெறியி னின்றும் பிறழாது விளக்கிச் செல்வதே என் குறிக்கோள். சந்திரனின் நண்பன் சேகரன் நாகர் நாட்டில் கமலாசனி என்ற நங்கையை மணக்கின்ற தன்மை எதிர்பாரா இன்ப நிகழ்ச்சியாக அமைந்துள்ளது.

ஆழி சூழ் உலகெங்கும் அன்பர்கள் அகங்குளிர வர வழைத்துத் தம் தம் மொழியில் மொழி பெயர்த்துக் கற்றுணர்ந்து உயர்ந்து வரும் ஒரு அறநூல்—நம் தண்ட மிழ்க்கே தனிச் சிறப்பளிக்கும் ஒரு திரு நூல்— "திருக் குறள்". இத்தமிழ் மறையின் கருத்துக்கள் இடத்திற் கேற்ப பல இடங்களில் சேர்த்துள்ளேன். இவ்வுலகத்து நற்பண்புடையாரின் நற்செயல்கள், அவையல்லாதாரின் இழி செயல்கள், உள்ள உறுதியின் வெற்றி இவையனைத் தையும் சித்தரிக்கும் ஒரு இலக்கிய நாவல். படிப்போர் பலவகையில் பயன்பெறுவர் என்பது திண்ணம்.

"இளமையிற் கல்" என்றாங்கு "திருக்குறள்"போன்ற அறநூல்கள்–இலக்கியங்கள், பலவற்றைக் கற்றுச் சிறக்க

வேண்டும். இத்தகைய நூல்கள் பலவற்றை வரைந்து குவிக்க வேண்டும்— என்று என்னைத் தட்டியெழுப்பி, நல்லதொரு துறையிலே கொண்டு செலுத்திய எனது, அருணை, நகராண்மைக்கழக உயர் நிலைப்பள்ளி—தமிழ் ஆசிரியர் "திருக்குறள் மணி"—வித்வான் திரு. தா. நடேசப் பிள்ளை அவர்களுக்கு முதற்கண் என் மனமார்ந்த நன்றி உரித்தாகுக.

இதனை அச்சிடுங்கால் வேண்டிய திருத்தங்கள் செய்து உதவிய வித்வான் திரு. மு. குப்புசாமி அவர்கட்கு என் அன்பு கலந்த நன்றி.

முகமலர்ந்து, ஆசி கூறி, எதிர்காலத்தில் தமிழ் நாட்டில்—இன்புடன் நற்பணிகள் பலவும் செயலாற்றிடுக என்று தெரிவித்து, மதிப்புரை தந்துதவிய எம் பச்சையப்பன கல்லூரி துணைத் தமிழ்ப்பேராசிரியர் அவர்கட்கும், சென்னை அர்ச் கேபிரியல் உயர்நிலைப்பள்ளி, தலைமைத் தமிழாசிரியர் அவர்கட்கும் என் வணக்கத்துடன் கலந்த நன்றி என்றும் உரித்தாகுக.

இதனை அச்சிடத் தூண்டியும் அவ்வப்பொழுது ஊக்கம் உண்டாக்கியும் வந்த என் அன்பிற்குரிய நண்பர்கள் அனைவர்க்கும்—குறிப்பாக திரு. மு. மு. பால கிருட்டினன், திரு. மு. இராமு அவர்கட்கும் சித்திரம் வரைந்துதவிய 'கல்பனு' புனைபெயர் கொண்ட திரு. D. திருநாவுக்கரசு அவர்கட்கும் என் அன்பு கலந்த நன்றி.

இந்நூலை அச்சிட்டுதவிய விநோதன் அச்சகத் தார்க்கும், குறிப்பாக ஆசிரியர் திரு ரவி அவர்களுக்கும் என்றென்றும் என் நன்றி உரித்தாகுக.

வணக்கம்.

பெ. கே. வேணுகோபாலன்

15—8—1956

# மதிப்புரை

உயர்திரு, **அ. மு. பரமசிவானந்தனார்**, M. A., M. Litt.,
தமிழ்த் துணைப் பேராசிரியர்,
பச்சையப்பன் கல்லூரி,
சென்னை.

சென்னை,
10-8-1956.

திரு. பெ. கே. வேணுகோபாலரது புத்தம் புது முயற்சியாக—முதல் முயற்சியாக—வெளிவரும் சந்திர குமார் என்னும் புதினத்தைக் கண்டேன். அவருடைய தமிழ் ஆர்வமும், தமிழ் நூல்களைக் கதையின் வாயிலாகக் கற்பவர்களுக்கு அறிமுகம் செய்விக்க வேண்டுமென்ற விழைவும் நன்கு புலனாகின்றன. கதைப் போக்கு புதினத்திற்கு ஏற்ற வகையில் அமைந்துள்ளது. இடையிடையே நாடக அமைப்பினைப்போல் பாடல்களும் உரையாடல்களும் இடம் பெற்றுள்ளன. இது ஆசிரியர்தம் முதல் முயற்சி. இவர் இன்னும் முயன்று நாட்டுக்கு நல்ல பணியினை எதிர் காலத்தில் செய்வார் என நம்புகிறேன். வெல்க அவர்தம் அரு முயற்சி.

(Sd.) அ. மு. ப.
10-8-'56

# மதிப்புரை

உயர்திரு, **வித்துவான் பெ. அண்ணுமலேயார்**

*தலேமைத் தமிழாசிரியர்,*
*தூய கேபிரியல் உயர்நிலேப் பள்ளி,*
*சென்னே–1.*

*சென்னே–1.*
*15–8–'56.*

'சந்திர குமார்' என்னும் புனேந்துரை கதை நூலேப் படித்துப் பார்த்தேன், பிறவற்றில் காணுத ஒரு புதுமையை இதன்கண் கண்டேன். சொல்லுக் குறுதியாம் 'திருக்குறளே' ஏற்ற விடங்களில் இட்டு அழகுற எழுதியுள்ளார். கதையுடன் நல்ல கருத் துக்களே யுணரும்பேறு இதனேப் படிப்போர்க்கு உண்டாகும் என்பது உறுதி. முதல் நூலாக வெளி யிடும் ஆசிரியரின் முயற்சியைப் பாராட்டி மேலும் ஊக்கங் கொள்ளச் செய்வது நல்லதல்லவா? இவ் வகையில் ஆவன செய்வோமாக.

(Sd.) பெ. அண்ணுமலே,
15–8–'56




# சந்திர குமார்

## முதலை வாயினின்றும்

### சான்ருேரைக் காத்தல்

கதிரவன் தன் கிரணங்களை வெளிப் படுத்திய வண்ணம் கீழ்த்திசையிலே தோன்றுகின்ருன். அழகிய நீரோடை; நீரோடையில் சலசலவென்று சத்தமிட்டுக் கொண்டு நீரோடுகின்றது. மக்கள் விழித்தெழுந்து நீரோடையை நாடுகின்றனர்; நீராடுவதற்காக.

நீரோடையின் அருகில் இருமருங்கும் அழகிய பூஞ் சோலைகள். அவை யடுத்து நெருங்கிய மரங்களடர்ந்த சாலையொன்று; அச்சாலையில் அழகிய இரு மாடுகளைப் பூட்டிய வண்டியை அவ்வதிகாலையிலே சந்திரகுமார் என்ற சிறுவன் சல் சல் என்ற இனிமை வாய்ந்த ஓசையுடன், ஓட்டிச் செல்கின்ருன்.

நீரோடையில் நீராடிக் கொண்டிருந்த சான்ருேர் ஒருவரை ஆங்கிருந்த ஒரு முதலை அவருடைய காலைப் பற்றியது. உடனே ஒரு கூக்குரல் கேட்கிறது. "அபயம், அபயம், முதலை என் காலைப் பற்றிக் கொண்டது. காப்பாற்றுங்கள்! காப்பாற்றுங்கள்!" என்றதே அக் கூக்குரல்.

அப்பொழுது அங்கே வண்டி ஓட்டிச் சென்று கொண்டிருந்த சந்திரன் அக்கூக்குரலைக் கேட்டவுடன் திடுக்கிட்டு, அக்குரல் வரும் திசையை நோக்கி ஓடுகின்ருன். நீண்டு வளைந்த ஒரு கொடுவாளுடன் சென்று பார்க்கின்ருன். அங்கே வயது முதிர்ந்த பெரியாருடைய காலை முதலையொன்று பற்றி யிழுக்கின்றது. அப்பெரியார் காலை வெளியே யிழுக்க முயற்சிக்கின்ருர். ஆனல் இழுக்க

முடியவில்லை. அவ்வான்றோரின் பரிதாப நிலையைக் கண்ட சந்திரன் துடிதுடித்து ஓடி முதலையின் பக்கமாக இறங்கி முதலையை ஒரே வெட்டாக வெட்டி எறிகின்றான். முதலை துண்டிக்கப்படுகின்றது. அவ்வான்றோர் விடுவிக்கப் பட்டு நீரோடையை விட்டு வெளியேறுகின்றார்.

"காலத்தினாற் செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது" அல்லவா?

அக்கண நேரத்தில் அச்சிறுவன் அப்பெரியாரைக் காப்பாற்றாமல் இருந்திருந்தால், அச்சான்றோர் முதலையின் வாய்ப்பட்டு உயிர் நீத்திருப்பாரன்றோ?

'தன் உயிர் நீங்கினும் நீங்குக' என்று செயல் செய்த அச் சிறுவனின் வீரத்தை மெச்சிய அவ்வான்றோர் அச்சிறுவனை அழைத்து மூன்று குறட்பாக்களை எடுத்துரைக்கின்றார்.

"ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப் புடைத்து"

என்பதே முதல் குறளாகும்.

சான்றோர்: சிறுவனே! நீ இப்போது கல்வியை நன்றாகக் கற்றுணர்ந்தால் உலகம் புகழும் தகைமை யுடையவனாவாய்.

சந்திரன்: யானோ ஏழை! யான் எங்ஙனம் உயர் கல்வியைப் பெற முடியும்?

சான்றோர்: சிறுவனே! 'முயற்சி திருவினையாக்கும்' அல்லவா? எனவே எப்படியாவது முயற்சியுடன் பயின்றால் வெற்றி பெறலாமன்றோ?

சந்திரன்: ஆமாம். முயற்சி யிருக்கின்றது. அதற்கு வேண்டிய செலவிற்காக முன் நின்று உதவி புரிபவர்கள் யாவர்? என் தந்தையோவெனில் ஏழை. எங்ஙனம் அவர் எனக்குக் கல்வி பயிற்றுவிப்பார்?

சான்றோர்: குழந்தாய்!

"தெய்வத்தா னாகா தெனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்";

ஆகவே கல்வியைப் பயின்றுதான் தீரவேண்டும் என்று ஒரே கொள்கையுடன் முயற்சித்தால் ஏன் வெற்றியுறலாகாது?

சந்திரன்: பெரியீர்! அங்ஙனம் தாழாது முயற்சித்தாலும் இடையிடையே ஏற்படும் இன்னல்களை எங்ஙனம் பொறுத்து வெற்றி காண முடியும்?

சான்றோர்: அன்பனே!

"ஊழையும் உப்பக்கங் காண்பர் உலைவின்றித்
தாழாஅது உஞற்று பவர்"

என்ற பொய்யாமொழிக் கேற்ப, தாழாது முயற்சித்தால் ஏன் உதவி கிட்டாது? ஏற்படும் இன்னல்கள் அனைத்தும் ஏன் பஞ்சாய்ப் பறந்து போகா.

சந்திரன்: அன்புக் கடலின் தலைவ! தங்கள் அறிவுரையின்படியே யான் முயற்சி செய்கின்றேன். இனி கல்வி பயில்வதே என் குறிக்கோள்' என்று சொல்லி, அவ்வான்றோரைப் பணிந்தான். பணிந்த சிறுவனை மேலும், மேலும் கல்வியில் நாட்டங் கொள்ளுமாறு பற்பல அறிவுரைகளை எடுத்துக் கூறி, மார்புறத்தழுவி, முத்தமிட்டு, வாயார வாழ்த்தி அனுப்புகின்றார் அச்சான்றோர்,

சந்திரன் தன் வண்டியைப் பழையபடி ஓட்டிச் செல்லுகின்றான்; சான்றோர் கூறிய அறிவுரையுடன் தன் சொந்த ஊராகிய மகாபலிபுரத்துக்கு.

மகாபலிபுரம் இயற்கையின் இருப்பிடம். முற்காலத்தில் துறைமுகப் பட்டினமாகத் திகழ்ந்தது. இதற்குச் சான்றாக ஆங்குள்ள கலங்கரை விளக்கத்தைக் கொண்டே அறியலாம். சிற்பங்கள் நிறைந்த நகர். எங்கு நோக்கினும் சிற்பிகளின் திறனைக் காட்டும் வண்ணம், ஆங்குள்ள சிற்பங்கள் நின்று நிலவுகின்றன.

கடலையடுத்து எழில் மிகுந்த ஏழு பெருங் கற்கோயில்கள் இருந்தனவாகவும், கடல் பொங்கிய காரணத்தினால் அவைகளுள் ஆறு கோயில்கள் மறைந்து விட்டனவாகவும் கூறப்படுகின்றது. தற்பொழுது கடற்கரை

யோரத்தில் உள்ள ஒரு கோயிலைக் கண்டால் அக்கோயில் தெய்வ சக்தியால் உண்டானதோ என்று ஐயுறத்தக்க நிலையில் உள்ளது. இது மட்டுமல்ல; மற்றோர் பக்கம் சென்று பார்த்தால் ஆங்கே ஏழு பெரும் இரதங்கள், ஒவ்வொன்றும் ஒவ்வோர் கல்லில் செதுக்கப்பட்டு, சிற்பங்கள் நிறைந்து கண்கொள்ளாக் காட்சியாகத் திகழ்கின்றன. இவை பஞ்ச பாண்டவர் இரதங்கள் என்று அழைக்கப் படுகின்றன. மற்றும் ஆங்குள்ள கல்யானை, கற்சிங்கம் ஒவ்வொன்றும் ஒவ்வொரு கல்லில் செதுக்கப்பட்டு என்றும் அழியாச் சிற்பங்களாக—காணவரும் மக்களின் மனத்தைக் கவரும் மாயச் சிற்பங்களாக-நின்று நிலவுகின்றன. ஆங்குள்ள சிற்பங்கள் அனைத்தும் திருமாலின் திரு அவதாரங்களையே விளக்குகின்றன. எனவே அங்கு வாழ்ந்த மக்கள் திருமால் பற்று மிக்கவர்கள் என்று தெரிகிறது.

பண்டைத் தமிழ் மக்கள் வீரத்திற் சிறந்திருந்ததைப் போன்றே சிற்பக் கலையிலும் வல்லுநராக இருந்திருக்கின்றனர். இப்பெருமைவாய்ந்த நகர் தற்பொழுது ஒரு சிறு சிற்றூராகக் காட்சியளிக்கின்றது. இக்கிராமத்தில் 'தனபால்' என்னும் ஏழைக் குடியானவர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் மனைவியார் தமிழரசி. தனபால் பாட்டாளி. நெற்றி வேர்வை நிலத்தில் விழ பாடுபடுபவர். இவர் குமாரனே நம் சந்திரன்.

சந்திரன் வண்டியை ஓட்டிவந்து கொட்டகையில் நிறுத்தி மாடுகளைத் தொழுவத்தில் கட்டிவிட்டு அளவில்லா ஆனந்தத்துடன் தந்தையிடம் வந்தான். அவரிடம் நிகழ்ந்தன அனைத்தையும் தெரிவித்து, கல்வி கற்பதற்காகத் தந்தையின் பதிலை எதிர்நோக்கி நின்றான். தந்தை கைவிரித்து விடுகின்றார். அவர் என் செய்வார்? பாவம்—ஏழை! செலவு செய்து படிக்க வைப்பதற்கு இயலாதவராக இருக்கின்றார்.

சந்திரன், அதே ஊரில் வாழ்ந்து வந்த அவன் மாமன் கருணாநிதியின் உதவியை நாடுகின்றான். கருணாநிதி செல்வ நிலையில் நடுத்தரமானவர். இரங்கும் உள்ளம்

படைத்தவர். சந்திரனின் வேண்டுகோளுக்கு இணங்கி உயர்நிலைப் பள்ளியில் சேர்க்கின்றார்.

சந்திரன் திருக்கழுக்குன்றத்தில் இருக்கின்ற உயர் நிலைப் பள்ளியில் சேர்ந்து கல்வி பயிலத் தொடங்கினான். வகுப்பில் முதல்வனாகவே திகழ்ந்தான். சந்திரனைக் காணும்போதெல்லாம் அவனுடன் படித்த மாணவர்கள் பொறுமை கொள்வதும் உண்டு.

உயர்நிலைப் பள்ளியில் கல்வி பயிலுங்கால் உயிர்த் தோழனாக அமைகின்றான் சேகர். இருவரின் நட்பும்

"உடுக்கை யிழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு"

என்றபடி அமைகின்றது. சேகரின் தந்தை சிறந்த செல்வந்தர். அந்நகருக்கே பெரிய குடும்பமாக அவரது குடும்பம் திகழ்ந்தது. எனவே சேகரின் தந்தை மாணிக்க வாசகனார் தம் குமாரன் விருப்பின்படியே நடந்து வந்தார். எனவே சந்திரனுக்கு ஏற்படும் இன்னல்களை யெல்லாம் கதிரவன் வர பனி நீங்குவதுபோல் நீக்கி வந்தான் சேகர். பள்ளியில் திருக்குறள் தனியாகப் போதிக்கப்பட்டு வந்தது. சந்திரனும் சேகரும் திருக்குறள் மன்றத்தில் சேர்ந்து முதல்வர்களாகத் திகழ்ந்து தேர்ச்சியும் பெற்றனர்.

சக்கரம் சுழல்வதைப்போல் நாட்கள் ஓடிக்கொண் டிருந்தன. இருவரும் உயர்நிலைப் பள்ளி இறுதி வகுப்புத் தேர்தலில் (S.S.L.C.) தேர்ச்சி பெற்றனர். சேகர் மேல் படிப்பிற்காகத் திருச்சி கல்லூரிக்குச் செல்கின்றான். நண்பன் சந்திரன் தவிக்கின்றான். உதவியில்லை. சேகரனின் மனம் வாடுகின்றது. என் செய்வான் பாவம். பிரிய மன மில்லாமல் பிரிகின்றான் சேகர். சந்திரனின் மாமா கருணாநிதி அவனை அதற்குமேல் படிக்க வைப்பதற்கு முடியாதவராகின்றார். சந்திரனின் நிலை இரங்கத் தக்கது.

இறுதியாக ஒரு யோசனை தோன்றுகின்றது. உடனே கடிதம் வரையலானான். சென்னையில் சந்திரனின் அத்தை செல்வச் சீமாட்டியாகத் திகழ்கின்றாள். அத்தை

யின் உதவியை நாடிக் கடிதம் வரைகின்றான். கடிதம் அத்தை கைவரப் பெறுகின்றாள். நீள நினைந்து ஒருவாறு மனமிரங்கி இசைந்தார் அந்த அம்மையார். அவ்வம்மையாரின் பெயர் அனுசூயா தேவியார். அவ்வம்மையின் உதவிபெற்ற சந்திரன் தோழன் சேகரனுடன் சேர்ந்து கல்லூரிக்குச் செல்லுகின்றான். திருச்சியில் இவ்விரு நண்பர்களும் கல்லூரியில் சேர்ந்து சிறப்பாகக் கல்வி பயிலலானார்கள். இவ்விருவரும் வருடாவருடம் தேர்தலில் முதல் வகுப்பிலேயே வெற்றி பெறுகின்றனர்.

## 2. சொற்போட்டி

பி. ஏ. வகுப்பில் வாசித்து வருகையில், ஓர் நாள்.

போட்டிப் பந்தயங்கள் சில நிகழ்கின்றன. அவற்றுள் ஆடவர்கட் கெனவும், பெண்டிர்க்கெனவும் தனித்தனியாகப் போட்டிகள் நிகழ்கின்றன. ஆடவர் தொகுதியில் எல்லாவகைப் போட்டியிலும் "சந்திரனே" முதல்வனாகத் திகழ்கின்றான். பெண்டிர்த் தொகுதியில் "மோகனா" என்ற இளங்கன்னிகை முதன்மையாகத் திகழ்கின்றாள். இறுதிப் போட்டி இவ்விருவர்க்கும் நிகழ்கின்றது. எல்லா வகைப் போட்டியிலும் மாறி, மாறி முதன்மையாளர்களாகத் திகழ்கின்றனர்; சந்திரனும், மோகனாவும். இவர்கட்குள் இறுதிப்போட்டி சொற்பொழிவு மன்றத்தில் "இறைவன் உண்டு" என்ற பொருளில் சந்திரனும், "இறைவன் இல்லை" என்ற பொருளில் மோகனாவும் நின்று சொற்பொழிவாற்றுகின்றனர். சந்திரனின் சொற்பொழிவு பின்வருமாறு:—

### (அ) இறைவன் உண்டு

சந்திரன்: அவைத் தலைவர் அவர்களே! ஏனைய சான்றோர்களே! தோழர் தோழியர்களே! அனைவருக்கும் என் அன்பு கலந்த வணக்கம்.

உலகினைக் காண்கின்றோம். உலகில் உள்ள இயற்கைகளைக் காண்கின்றோம். இயற்கையின் எழிலை, அதன்

அழகைக் கண்டு களிக்கின்றோம். நிலத்தையும் இதைச் சுற்றியுள்ள நீரையும் காண்கின்றோம். விண்ணினைக் காண்கின்றோம். அதில் மேகக் கூட்டங்களையும் கதிரவனையும், சந்திரனையும் எண்ணிலடங்கா நட்சத்திரக் கூட்டங்களையும் கண்ணுறுகின்றோம்.

கதிரவன் தன் இளங்கிரணங்களைப் பரப்புவதற்கு முன்னரே சேவல் எழுந்து கொக்கரக்கோ! என்று சிறகடித்துப் பலமுறை கூவி, "கதிரவன் கீழ்த் திசையில் தோன்றப் போகிருன், எனவே, மக்களே! விழித்தெழுங்கள்", என்று சொல்வதைப்போன்று கூவி எழுப்புகின்றது. பொழுது புலரும்போது மக்கள் விழித்தெழுகின்றனர். புள்ளினங்கள் இரைக்காக நாலு பக்கங்கட்கும் தத்தம் இனத்துடன் பறந்து ஓடுகின்றன. வாவிகளில் உள்ள அரும்புகள் மலர்ந்து வாவியை அழகுபடுத்துகின்றன. மலர்ந்தவுடன் இனிமையான, மணம் கமழ்கின்றது. மலர்களை நாடிய வண்டுகள் ரீங்காரமிட்டு மலர்மீதமர்ந்து தேனை உண்டவண்ணம் இருக்கின்றன. சிறுமிகள் மலர் பறிக்க ஓடுகின்றனர். பறித்த மலரைத் தம் கூந்தலில் சூடிக்கொள்ளுகின்றனர். உழவர்கள் தங்கள் புலங்களை நாடுகின்றனர். மற்றவர்களும் தங்கள் வேலையில் ஈடுபடுகின்றனர்,

கதிரவன் கீழ்த்திசையிலே தோன்றுங்காலத்தில் கடற்கரைக்குச் சென்று பார்ப்போமேயாகில் கடலலைகள் முழங்க, அவ்வலைகளின் மீது கதிரவனின் கிரணங்கள் பட, அவ்வலைகளின் வெண்ணிறக் காட்சி கண்கொள்ளாக் காட்சியாகத் திகழ்கின்றது. வனத்தைப் பாருங்கள்! ஆங்கே இடத்திற்கேற்பத் தன் உடலின் நிறத்தை மாற்றிக்கொள்ளும் பச்சோந்திகள், கண்டாலே திடுக்கிடச் செய்யும் முள்ளம்பன்றிகள், அனைவரும் வலம் வர விரும்பும் அழகுவாய்ந்த யானைகள், மூங்கிலிலையோ! வேறு என்னவோ! என்று அதிசயப்படும் நிலையில் உள்ள வண்ணங்கள் நிறைந்த புலிகள், துள்ளிக் குதித்தோடும் புள்ளி மான்கள், இணைபிரியாதிருக்கும் அன்றில் பறவைகள், பிள்ளையைப்போன்று மழலைச் சொற்கள் பேசப்

பழக்கப்படும் கிளிகள், படையும் அஞ்சும்படியான சக்தி வாய்ந்து சீறிப் படமெடுத்தாடும் நாகங்கள், ஆக இவை போன்றவைகளின் காட்சிகள் உள்ளத்தை ஊடுருவச் செய்கின்றதன்றோ! இயற்கையால் உண்டானவைகள் தாமே இவையனைத்தும்.

வானளாவிய மரங்கள், எங்கும் பரிமளிக்கச் செய்கின்ற மணம் நிறைந்த பூக்களையுடைய மரங்கள், உலகிற்கே மருந்தென்றுதவும் மரங்கள், மாதர்களின் மனத்தைக் கவரும் பூங்கொடிகள்; பூஞ்செடிகள். இவைகளனைத்தும் எங்ஙனமுண்டாயின? இவைகள் இயற்கையல்லவா? இங்ஙனம் ஒரு பக்கம் எங்குப் பார்க்கினும் நிலப்பாகம். அங்கு இயற்கையின் எழில் தாண்டவமாடுகின்றது. மற்றொரு பக்கம் பரந்த கடல். அது நீலநிற வான்போல் மின்னும் மீன்களின் ஒளிகொண்டு விளங்குகின்றது. இன்னொரு பக்கம் வானளாவிய அடுக்கடுக்காக அமைந்துள்ள மலைகள். அவற்றின் மீது வெண்ணிறப் பனிப் படலங்கள் முடிகளாகக் கவிழ்ந்துள்ளன. இவைகள் எல்லாம் நம் மனத்தைக் கவர்கின்றனவன்றோ!

கதிரவன் மேற்குத் திசையில் மறைகின்றான். கடற்கரை சென்று பார்க்கின் ஆங்கே செம்படவர்கள் பிடித்த மீன்களுடன் திரும்புகின்றனர் கரைக்கு. இவர்களுடைய இல்லக் கிழத்திகள் எதிர்கொண்டு அவர்களை அழைக்கின்றனர். இக்காட்சி மிகவும் இனிமை வாய்ந்ததாக இருக்குமன்றோ!

மாலை நேரம். இனிமையான தென்றல் வீசுகின்றது. குயில் தன் இனிமைவாய்ந்த குரலில் பாடுகின்றது. மயில் தன் தோகையை விரித்தாடுகின்றது. இந்த மாலைக்காலம் மக்களின் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் நிலையில் அமைகின்றது. இளங்காதலர்களின் இன்பப் பெருக்கை அதிகரிக்கச் செய்வது மாலைக் காலமாகும்.

"காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய்"—அல்லவா?

சிறிது நேரத்திற்கெல்லாம் இருள் சூழ்கின்றது. சூழ்ந்த இருளைத் துரத்துகின்றது சந்திரனின் இனிமையான, குளிர்ச்சிபொருந்திய கிரணங்கள். இவ்வியற்கையான காட்சி இளங்காதலர்களின் மனத்தில் இன்பப் பெருவெள்ளத்தைப் பெருக்குகின்றது.

விண்ணில் மேகம் சூழ்கின்றது. மின்னல் மின்னுகின்றது. இடி இடிக்கின்றது. சிறிது நேரத்திற்கெல்லாம் மழை கொட்டு கொட்டென்று கொட்டுகின்றது. இவ்வகையான இயற்கையின் செய்கைகள் அனைத்தையும் நிகழச் செய்வது எது? யாதாவதொரு பொருள் இருக்குமன்றோ! இல்லாமல் எங்ஙனம் மேற்கூறிய நிகழ்ச்சிகளனைத்தும் நிகழும்? எனவே இவைகள் அனைத்தையும் நோக்கினால் யாதோ ஒரு பொருள், ஒரு மெய்ப்பொருள் உள்ளதென்று நிச்சயிக்கலாமன்றோ! இதுபற்றியே வள்ளுவரும் "உலகம் ஆதிபகவன் முதற்று" என்று கூறியுள்ளார்.

மெய்ப்பொருள் எண் குணங்களை உடையது; ஆம் அழியாதது; களங்கமற்றது; ஒளியுள்ளது; எங்கும் உள்ளது; எதிலும் உள்ளது; அறிவு உள்ளது; ஆண்மை நிறைந்தது என்று குறிப்பிடலாம்.

நாம் நம் உடலைக் காண்கின்றோம். அவ்வுடலை மெய் என்றும் சொல்லிக் கொள்ளுகின்றோம். இவ்வுடல் மெய் என்று பெயர்பெறக் காரணம் என்னவென்று சிறிது நோக்குவோம். நமது உடல் மெய்ப்பொருளைக் காண, அம் மெய்ப்பொருளை வாழ்த்த, வணங்க, போற்ற உதவுவதனால் இப்பெயர் பெற்றது. இவ்வுடல் நினைத்த இடத்தில் நினைத்தபோது காலவரையறையின்றி பொய்யாய்ப் போகும் என்பதை நாம் அறிந்துள்ளோம். [நமது உடல் மெய்ப் பொருளை உணர்தற்கென்றே வந்துற்ற பிறவியாதலால், இவ்வுடலை மெய்யெனக் கொள்ளல் தகும்.]

உலகின்கண் பலவகைப்பட்ட பொருள்கள் நம்மைச் சூழ்ந்துள்ளன. இவைகளனைத்தும் பொய்ப் பொருள்கள் தான். இப் பொய்ப் பொருட்களைப்பெற நாம் விரும்புகின்றோம்; வேண்டிய முயற்சிகளையும் செய்கின்றோம்.

செய்து வெற்றியும் பெறுகின்றோம்; தோல்வியும் அடைகின்றோம். நன்கு ஆராய்ந்தால் இவை அழியக்கூடிய பொருள்கள்தான் என்பது உள்ளங்கை நெல்லிக் கனியென விளங்கும். எனவே எப்பொருளும் ஒருகாலத்தில் அழியும். இவ்வுலகம் கானல் நீர் போன்றது; இவ்வுலக வாழ்வு சொப்பன வாழ்வு போன்றது; எனவே பொய்யாயது, நிலையில்லாதது. நிலைத்த பொருள்கள் என்று நம்மால் கருதப்படும் அனைத்தும் அழியும் தன்மை வாய்ந்தவைதானே! அழியாத பொருள் ஏதாவது உண்டா? என்று நோக்கினால் உண்டு என்று தெளியலாம். காரணம், புகையைக் கண்டவுடன் நெருப்பு கட்டாயம் உண்டு என்று தெளிகின்றோம். இதைப்போன்று உலகையும், உலக இயற்கைகள் அனைத்தையும் நோக்கினால் இறைவன் ஒருவன் உள்ளான்—மெய்ப்பொருள் யாதோ ஒன்றுண்டு என்று நிச்சயிக்கலாம்.

தோழர்காள்! இறைவன் உள்ளான் என்று ஏன் நாம் சொல்லலாகாது? அறிஞர்கள் பலரும், இறை என்பது ஒன்று உண்டு, உண்டு என்று வற்புறுத்தியுள்ளனர்.

"ஒன்றென்றிரு தெய்வம் உண்டென்றிரு", என்று பல நீதி நூல்களும் கூறுகின்றன. நமக்குப் பல இன்னல்கள் ஏற்படுகின்றன. இவ்வின்னல்களனைத்தும் எங்ஙனம் நீங்கும்? இறையை வாழ்த்திச் சிந்தித்திருந்திருந்தால் நீங்கிவிடும் என்பது அனுபவ உண்மை. 'கடவுளை நம்பினோர் கைவிடப்படார்.' ஆகவே இறைவனிடம் என்றும் பற்றுள்ளம் வேண்டும். தனிப்பட்ட ஒரு அன்பு என்றும் இருத்தல் வேண்டும்.

இறையைப் பற்றிச் சிந்திக்கச் சிந்திக்க இன்னல்களனைத்தும், ஞாயிறுமுன் இருள்போன்று நீங்கும் என்பதில் சந்தேகம் வேண்டாம். இறையை வணங்கியவுடன் மனத்துன்பம் நீங்கிவிடும். உள்ளபடியே இறைவன்பால் அன்புகொள்ளல் வேண்டும்.

"மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்தது ஒழித்துவிடின்"

என்றபடி வெளிவேடம் மட்டும் பயனில்லை. இறை எங்கும் நிறைந்த பொருள். எல்லாவுயிரையும் உண்டாக்கியும், பாதுகாத்தும் மறைத்தும் வரும் உண்மைப் பொருளாகும். எனவே இறைவன் உண்டு என்பதை யுன்னி, அந்நிலைத்த உண்மைப் பொருளை அனைவரும் சிந்தித்தல் வேண்டும்.

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவனடி சேரா தார்"

அவ்விறைவன் கூத்தாட்டுவானாகவும் விளங்குகின்றான். பொம்மலாட்டத்தில் மேடையில் ஆடும் பொம்மைகளின் காட்சியைக் காண்போர் அப் பொம்மைகளையாட்டும் சூத்திரதாரியை அறியார். அதனால் சூத்திரதாரி இல்லையென்று சொல்லிவிடமுடியாது. அவ்வாறே உலக மேடையாம் அரங்கில் உயிர்களாகிய பதுமைகளை ஆட்டுவிக்கும் சூத்திரதாரியாகிய இறைவன் ஒருவன் உண்டு என்பது உண்மை. இதையே,

"வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என் சொல்லி வாழ்த்துவனே"

என்று மாணிக்கவாசகர் உள்ளம் உருகிப் பாடியுள்ளார். நண்பர்களே! "தெய்வம் இகழேல்" என்ற ஔவை வாக்கை ஞாபகப்படுத்திவிட்டு, இத்துடன் என் பேச்சை முடிக்கின்றேன். வணக்கம்!

## இறைவன் இல்லை

மோகனா: (ஆ) இவ்வாறு சந்திரன் தன் வாக்கு வன்மையால்,

"கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாஞ் சொல்"

என்றபடி சொல்மாரி பொழிந்ததைக் கேட்ட அனைவரும் ஆனந்தப் பெருக்கினால் ஆரவாரஞ் செய்து கைதட்டி

மகிழ்ந்தனர். சந்திரகுமார் தன் இருப்பிடத்தில் சென்றமர்கின்றான். அவ்வமயம் அங்கமர்ந்திருந்த அனைவரும் எதனையோ எதிர்நோக்குவதுபோல் ஆரவாரம் செய்ய லுற்றனர். குறிப்பறிந்த மோகனா தனது நிலையைச் சரிப்படுத்தித் தான் எடுத்துக்கொண்ட "இறைவன் இல்லை" என்ற பொருளை எடுத்துரைக்க முனைந்தாள். அச்சொற்பொழிவு பின் வருமாறு:—

அவையின்கண் அமர்ந்துள்ள அனைவருக்கும் என் வணக்கம்!

இதுவரை சொற்பொழிவாற்றிய நண்பர் சந்திரகுமாரின் கருத்துக்கு மாறாகப் பேசும் நிலையில் வந்துள்ளேன். இயற்கை இயற்கையென்று எடுத்துப் பேசிய தோழர் சந்திரகுமாரின் கருத்துக்களை ஆழ்ந்து யோசித்துப் பாருங்கள். அப்பொழுது நன்றாக விளங்கும் உலகமே இயற்கைதான் என்று! இதைவிட்டு இவ்வியற்கையை எங்கேயோ ஒருவன் நின்று ஆட்சி புரிகின்றான் என்று கருதுவது மிகமிகத் தவறுடையதாகும்.

மரம், செடி, கொடி, புல், பூண்டு முதலியவைகளும், எறும்புமுதல் யானை ஈறாகவுள்ள எல்லா உயிரினங்களும், மனிதவர்க்கமும் இயற்கையாகவே தோன்றுகின்றன. பாக்கு, வெற்றிலை, சுண்ணும்பு இவற்றின் சேர்க்கை செந்நிறத்தை அளிக்கின்றது. ஆயினும் செந்நிறம் என்பது தனித்தில்லை. அவ்வாறே பஞ்ச பூதங்களின் கூட்டே உயிர் சக்தியாகுமேயன்றி; உயிர் என்பது தனித்ததொன்றில்லை; அவ்வுயிர்க்குயிராய பொருளொன்றுமில்லை. இப் பஞ்சபூதங்களின் கூட்டாலாய உயிர்கள் பஞ்சபூதங்களின் சிதைவு ஏற்படும் காலத்தில் அழிகின்றன. இவ்வாறான சுழற்சியே தவிர வேறொன்றும் இருப்பதாகக் காணப்படவில்லை. அவ்வாறு அவ்விறைவன் இருந்துகொண்டு ஆட்டிக்கொண்டு இருப்பதாகவும் காணப்படவில்லை. உலகத்துயிர்கள் இயங்குவது ஒரு சாதாரணச் சுழற்சியேயன்றி வேறொன்றுமில்லை. இச் சுழற்சியும் அந்தந்த இனங்களுக்குள் ஏற்படும் அன்புதான் காரணம். அவ்வன்பினால் ஏற்படும் தோற்றங்கள், வளர்ச்சிகள், அழிவு

கள் அனைத்தும் இயற்கையே. இவ்வியற்கையுலகம் அன்பினால்தான் இயங்குகின்றது என்று கூறலாம். இதையே வள்ளுவரும், "அன்பின் வழியதுலகம்" என்று செப்புகின்றார். அன்பின் வழி தோன்றி அகிலலோகப் புகழ்பெற்று மறைந்த நம் சான்றோர்கள் புத்தர், இயேசு, நபிகள் நாயகம், மகாத்மா இன்னும் பலர் இதற்குச் சான்றாக விளங்குகின்றார்கள் என்பதை ஏன் மறந்துவிட்டீர்கள்? அன்பில்லாது போலி இறைபக்தி கொண்டுள்ளோர்க்கு இப்புகழுண்டா? இல்லை என்பதை அறிவோம். அவ்வன்பைக் கொண்டுதானே உலகப் பெரியோர்களாக, உத்தமசான்றோர்களாக, ஆகியிருக்கின்றார்கள். இவர்களை இம்மனிதர்களைத் தெய்வமாக வணங்குகின்றனர். இவ்வாறன்றி எங்கேயோ இறைவன் இருக்கின்றான் என்ற மூட நம்பிக்கையினால் வெறியாட்டத்தினால் வீணாட்டம்போட்டு வாழ்நாளை வீணாளாக ஆக்கிக்கொண்டு, கிட்டாத ஒன்றை இல்லாத ஒன்றைத்தேடித்திரிகின்றனர். இருந்தால்தானே கிடைத்துவிடும். எனவே "இறைவன் இல்லை; ஆனால் அன்பு உண்டு".

இனி உலகில் தோன்றியுள்ள இயற்கைகள் கணக்கில் அடங்கா? இவைகளைக்கொண்டு மனிதவர்க்கம் தம் வாழ்விற்கோ அல்லது தாழ்விற்கோ பயன்படுத்திக்கொண்டுள்ள பொருள்களை எண்ணத்தான் முடியுமா? அல்லது சொல்லத்தான் கூடுமா? குண்டூசிமுதல் அணு ஆயுத நாசகாரிகள்வரை மனிதனால் செய்யப்பட்டவை. நிலம் நீர், வான் ஆகிய மூன்றிலும் இயங்கும் ஊர்திகள் எத்தனை? ஊர். பேர், தெரியாதோனை உல்லாசபுரி மன்னனாக ஆக்கும் பொருள்கள் எத்தனை? இவைகள் எல்லாம் மனிதனால், மனிதனின் சக்தியால் உண்டானவையேயன்றி வேறொன்றினாலுமில்லை! அந்த அதிசய சக்தி எது? அதுவே அறிவு என்பது. இவ்வறிவினால் ஆக்கப்படும் பொருள்கள் அழிக்கப்படும் பொருள்கள் பல. அவற்றால் உண்டாகும் நன்மைகளும் தீமைகளும் முறையே பலவாகும்,

அன்பர்களே! அன்பினால் அகிலம் இயங்குகின்றது; அறிவினால் அகிலத்தில் பொருள்கள் யாவும் ஆக்கப்படு

கின்றன. இனி இவ்வாறு கிடைத்த பொருள்கள் உபயோகத்தில் வரும்பொழுதுதான் எண்ணமிடவேண்டும். எண்ணிச்செயல் செய்தல்வேண்டும். மற்றவர்களும் தாமும் வாழுமாறு செய்தல் வேண்டும். உலகில் வாழும் அனைத்தும் ஒன்றையொன்று தழுவி, ஒப்புரவோடு கலந்து, இன்புற்ற நிலையில்தான் வாழ்கின்றன. அப்படித்தான் வாழ்தலும்வேண்டும். இதைவிட்டுஅன்பற்று, அறிவற்று அவனியின் பண்பைவிட்டு, வாழ்வதால் பயன்உண்டோ? "பல்லாண்டுபல்லாண்டு; பல்லாயிரத்தாண்டு; பலகோடி நூறுயிரம்:' 'என்று பலநாட்களும் பொய்யாகப் பாடிப் பாமர மக்களை ஏமாற்றிப் பரமனுர் குறியாம் நாமமும் போட்டுப் பாட்டாளி மக்களுக்குப்பணம் கொடுத்து, வட்டிக்கு வட்டி வாங்கிப் பலகணக்குஅதில் சேர்த்துக் கொடுத்தது ஒன்ருக பெறுவது நூருக இருக்கும் அன்பற்ற இவர் செய்கை அறமாகுமா? பாடுபட்டுத் தேடிய பொருளைக் கேட்டபடியே கொடுத்துவிட்டு இல்லந்திரும்பி இல்லாளுடனும் பெற்ற பிள்ளைகளுடனும் பட்டினியால் கோவென்று கதறியழும் நிலையதாகப் பாட்டாளி வாழ்வு இருந்தால்; அந்தப் பட்டைநாமக்காரன் போடும் நாமந்தான் எதற்கு? அவன் பாடும் பல்லாண்டு எதற்கு? உலகை ஏமாற்றத் தானே? இவரிடம் இறைவன் எங்கே? எங்கே? 'அரோகரா' வென்று கோஷமிட்டு ஆயிரக்கணக்கில் கறுப்பு வழியிற் கொள்ளை லாபம் வந்தாலும் தின்று ஏப்பமிட்டு, அழுதுவரும் குழந்தைக்கோ, கெஞ்சிவரும் ஏழைக்கோ பஞ்சாய் வாடும் பாமரர்க்கோ சிறிதளவும் கொடாது வெளிவேடம் போட்டுப் பயன் என்ன? உலகை ஏமாற்றத் தானே அவன் அரோகரா போடுவது? நயவஞ்சக நாடக சிகாமணிகள் சிலர் நண்பர்கள்போல் நடித்து, நன்ருகத் தெய்வ பக்தி உடையவர்போல் காட்டி நாட்டிற்கு நலம் விளைக்க கோவில்விழா நடத்தப் போவதாகக் கூறி நண்பர்களிடம் பணம் பெற்று நன்ருகக் கொழுப்பவர்கள் எத்தனைபேர்? இன்னும் எத்தனை அக்கிரமங்கள் இறைவன் பெயரால் 'அன்னை மரியம்மையே! ஏசுகர்த்தரே! எங்களை இரட்சியுங்கள்", என்று நாடுகள் எங்கும் ஓலமிட்டழுதாலும் நயனின்றி "அணு ஆயுதப் படைகளை

உபயோகியாமல் இரோம்" என்று பயமுறுத்தும் எத்தர்கள் எத்தனைபேர்? அவர்கள்மட்டும் வாழ்ந்தால் போதுமா? அவனியெங்கும் உள்ள உயிர்வாழ் இனங்கள் வாழ்தல் வேண்டாவா? அவர்கள் அவ்வாறு செய்வது அறமா! முறையா! பண்பா! எதிர்காலத் தோன்றல்களே! இதனை எடுத்து ஆழ்ந்து யோசித்து எடையிட்டுப் பாருங்கள். குரானைத் தலைகீழாய்ப் படித்தும் பக்கிரியாயிருந்தும் சிலர் இரக்கமிலா முரடர்களாய் நடப்பது நியாயமா? இதுதான் உடன் வாழும் சோதரர்கட்குச் செய்யும் முதல் உதவியா? இவ்வாறு இறைவன்பேரால் வெளிக்கு நாடகம் உள்ளே மோசம். இறை இருக்கின்றது என்றால் அவ்வாறு செய்ய மனம் இடந்தருமா? எனவே, தோழர் சந்திரகுமார் கூறியாங்கு மழித்தலும் நீட்டலும் நீக்கி உலகம் பழித்ததை ஒழித்து வாழ வேண்டாமா? அவ்வாறு வாழ இறைவன் தானா வழிகாட்டுவான்? எங்கிருக்கின்றான் வழிகாட்ட? இருந்தால்தானே காட்டுவான். நம்மிடமே இருக்கின்றான் என்றால் நாம்தானே திருந்தவேண்டும். அத்திருத்தமே "இரக்கம்" இதையே அருள் என்றும் செப்பலாம். இதனையே வள்ளுவரும் "அன்பீன் குழவி அருள்" என்று விதந்தோதுகின்றார். இவ்வருள் எவ்வாறு உண்டாகும்? "பொருளென்னும் செல்வச் செவிலியால் உண்டு" என்றும் எடுத்தியம்புகின்றார். இத்தகைய நிலையில் இரக்க மனப்பான்மையுடன் வாழ்ந்தால்தான் நாமும் பிறரும் வாழ முடியும். இதைவிட்டு இறைவன் பெயரால் இல்லாத பொல்லாத செயல்கள் செய்துகொண்டு 'எல்லாம் இறைவன் செயல்' என்று சோம்பியும் இரக்கமின்றியும் வாழ்வது கொடுமை என்பதில் ஐயமில்லை. அனைவரும் அன்போடு அறிவு பொருந்தி என்றும் மாறா மனப்பான்மையைப் பெறவேண்டும். இம் மனப்பான்மையை இறை என்று அழைக்கின் ஏற்கத்தகும். இத்தன்மை கொண்டு ஒழுகியதால்தான் உலகப் பெரியார் எல்லாரும் வானுயர் புகழ்நாட்டிச் சென்றுள்ளனர்.

பகுத்தறிவுடைய தோழர்காள்!

இதுகாறும் கூறியவற்றால் அன்பு, அறிவு, போன்ற நற்குணங்கள் மக்கட்குத் தேவையென்றும்

அவைதான் உலகினை இயங்கச் செய்கின்றன என்றும் அறிந்தோம். இந்த அன்பையும் அறிவையும் பெறப் பாடுபடுவோமாக. இவையன்றி உருவமாகவோ, அருவ மாகவோ எப்பொருளுமில்லை, இறைவனுமில்லை. வணக்கம்.

இவ்வாறு சொற்பொழிவாற்றி முடிக்க அனைவரும் கைதட்டி ஆரவாரஞ் செய்கின்றனர். கன்னி மோகனா மகிழ்வோடு சென்று தன் ஆசனத்தில் அமர்கின்றாள்.

போட்டியின் முடிவை நிர்ணயிக்கும் சான்றோர்கள் தங்கள் முடிவைக் கல்லூரித் தலைவரிடம் தெரிவிக் கின்றனர். தலைவர் சண்முகசுந்தரனார் எழுந்து சபை யோர்க்கு வணக்கம் கூறிவிட்டுப் போட்டியின் கருத்துக் களையும் இலக்கணங்களையும் குறித்துப் பேசினார். பின் னர். போட்டியிடும் இருவரும் வெற்றி அடைவது என்பது எப்பொழுதும் இயலாததொன்று. மோகனாவின் கடைசி நேரப் பேச்சைக் கூர்ந்து கேட்ட உங்களுக்கே விளங்கும்; இறைவன் இருக்கின்றான் என்று ஒருவாறு இயம்பியது.

[அப்பொழுது மோகனாவின் முகத்தில் மின்னல் போல் கருத்தலை மோதல்கள் கணத்துக்குக் கணம் தோன்றித்தோன்றி மறைகின்றன. நிலைமையைச் சரிப் படுத்திக் கொண்டு முன்போல் இருந்தாள்.]

காரணம் அன்பு, அறிவு போன்றவைகளை இறைத் தன்மை உடையவை என்று மோகனா பேசினாள் அல்லவா? இதனையேதான் சந்திரனும் குறிப்பிட்டிருக்கின்றார். அனைவரின் விருப்பின்படிக்கும், பேசிய பொருள்களைக் கொண்டும் எப்படிப் பார்த்தாலும் "இறைவன் உள் ளான்" என்ற பொருள் குறித்துப் பேசிய சந்திரகுமாரனே இச் சொற்போரில் முதன்மையிடம் பெறுகின்றான். ஆகவே "இறைவன் உண்டு" என்று பேசிய "சந்திரகுமார் வெற்றி பெற்றதாக" அறிவிக்கின்றோம். மோகனாவின் பேச்சுத் திறமைக்காகத் தனிப் பரிசு ஒன்றும் வழங்கு கின்றோம்.

அப்பப்பா! ஆடவர்களின் மகிழ்விற்குக் கங்கு கரையில்லை. தனிப்பரிசு பெற்ற மோகனா, சந்திரன் வெற்றி பெற்றதற்கு மற்றவர்களைப் போலவே தானும் "சந்திரகுமாரின்" வெற்றியைப் புகழ்ந்து புன்னகை தோன்றக் கைகுலுக்கி வணக்கம் செலுத்திவிட்டு அப்பாற் செல்கின்றாள்.

சேகரன் தன் நண்பன் சந்திரகுமாரை ஓடோடியும் வந்து தோள்மேல் தூக்கிக்கொண்டான். சொல்லவா வேண்டும்! கல்லூரி மாணவர்களுக்கு! அனைவரும் கலந்து கொள்கின்றனர். உல்லாசமாலை அணிவித்துப் பவனி வந்தனர். அனைவரும் புகழும் நிலையில் சந்திரகுமார் திகழ்கின்றான்.

மோகனா சற்று தலைகுனிந்த நிலையில் வீட்டிற்குச் செல்கின்றாள்.

## 3. சந்திரன் மோகனா—காதல் கொள்ளல்

மோகனாவை ஒருபக்கம் மானம் பிடர் பிடித்துத் தள்ளுகின்றது; மற்றோர் பக்கம் சந்திரனின் அன்பு கனிந்த திறமை வாய்ந்த, கேட்டாரைப் பிணித்த சொற்கள், அவனின் பால் வடியும் முகத்தின் தோற்றம், அன்பு கனிந்த நிமிர்ந்த பார்வை, பீடுநடை, அவன் அழகுருவம் ஆகிய இவைகள அவளை முன் செல்ல வொண்ணாது தடுக்கின்றது. இவ்வாறு மோகனா தன் மனம் ஊசலாடிய வண்ணம் மெல்ல மெல்லச் செல்லுகின்றாள். வெளியில் தோழி வாணி மோட்டார் காரைத் தயாராக நிறுத்தியிருந்தாள். மோகனா காரில் ஏறி உட்கார்ந்ததும் கார் மோகனாவின் வீட்டை நோக்கி விரைவாக ஓடுகின்றது. என்றாலும் மோகனாவின் உள்ளம் அதற்கெதிராகச் சந்திரனையே நாடி விரைகின்றது.

கல்லூரி மாணவர்கள் அனைவரும் ஒவ்வொருவராக வெளியேறுகின்றனர். சந்திரன் மட்டும் கல்லூரித் தலைவர் சண்முகசுந்தரனாருடன் நின்று உரையாடு

இன்றான். சண்முகசுந்தரனார் சந்திரனின் வெற்றியைப் புகழ்ந்து, மீண்டும் மீண்டும் உற்சாகப் படுத்துகின்றார்.

சந்திரன் கல்லூரித் தலைவரிடம் விடைபெற்று இல்லம் நாடுகின்றான், தோழன் சேகரனும் சந்திரனை நாடுகின்றான். இவ்விரு நண்பர்களும் வழக்கப்போல அந்நகரத்தின் அருகாமையிலுள்ள ஒரு பூங்காவிற்குச் செல்கின்றனர். அப்பூங்காவின் அழகு சொல்லத்தரமன்று. அது இயற்கையோடியைந்த இளம் பூங்காவாகும். அப் பூங்காவின் பக்கத்தே அழகிய அடுக்கடுக்காக அமைந்து ஓங்கி உயர்ந்த குன்று ஒன்று. அக்குன்றினின்று அருவி ஒன்று சல, சல வென்று சத்தமிட்டுச் செல்கின்றது. அதன் இரு மருங்கிலும் அழகிய இவ்விளம் பூங்கா அமைந்திருக்க அதன் எழிலை என்னென்று கூறுவோம்!

சேகரின் மனம் இயற்கையின் எழிலை நாடுகின்றது. சந்திரனின் உள்ளம் ஏதோ ஒன்றை நினைத்து ஊசலாடுகின்றது. எனவே சந்திரன் மௌனம் சாதிக்கின்றான். சேகரன் காரணம் கேட்க, அவனையும் மீறிய வண்ணம் சில சொற்கள் வரலாயின.

"அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ ; கனங்குழை
மாதர் கொல் மாலுமென் நெஞ்சு

என்றபடி அழகே உருவாக வந்த அக்கன்னிகை தெய்வ மகளோ என்று ஐயுறும்படியுளதே? சிறப்பாகப் படைத்த மயில்தானோ! என்று என் மனம் மயங்குகின்றதே" என்று பிதற்றலானான்.

சந்திரன் இவ்வாறு பிதற்றுவதைக் கேட்டுத் திடுக்கிட்டான் சேகரன். சிறிது நேரத்திற்கெல்லாம் சந்திரன் அப்பூங்காவிலுள்ள அழகிய புன்னை மரத்தினடியில் இருந்த ஒரு பளிங்கு மேடையில் பிதற்றிய வண்ணமாகவே உறக்கங் கொள்ளலானான். நண்பன் இவ்வாறு பிதற்றியதையும், சிறிது நேரத்திற்கெல்லாம் அயர்ந்து உறங்கியதையும் சேகர் கண்டு திடுக்கிட்டுச் சந்திரனை பலவிதத்திலும் தேற்றி வீட்டிற்கு அழைக்கின்றான். ஆனால் சந்திரனோ ஏதோ பிதற்றிய வண்ணம் வீடு

திரும்பு மறுக்கின்ருன். சேகர் விடைபெற்று வீடு திரும்பு கின்ருன். சந்திரன் மீண்டும் உறங்குகின்ருன்.

இயற்கையின் எழிலை எவரால் வெல்ல முடியும். எல்லாம் இறைவனின் நியமப்படியன்ருே நிகழும். விதியின் செயல் என்று ஏன் இவ்வகைப் போன்ற இடங்களில் சொல்லக்கூடாது? சந்திரனின் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட காரிகை,

" மறப்பேன் மன் யானிஃதோர் நோயை
இறைப்பவர்க்கு
ஊற்று நீர் போல மிகும் "

என்றபடி சந்திரனின் உருவத்தையே நினைந்து, நினைந்து உருகும் இளமயிடி, அனைவரும் வியந்து கூறும் நிலையி லுள்ள அழகு வாய்ந்த கன்னியாகிய மோகனு, கல்லூரியி லிருந்து வீடு திரும்பியவள், இரவு மணி எட்டு இருக்கும். உணவருந்துகின்றனள்; என்ருலும் உணவு பிடிக்கவில்லை. மனம் புண்ணுகின்றது. உடனே அப்புண்ணை ஆற்றிக் கொள்ளும் பொருட்டுத் தன் பூங்காவை நோக்கிக் காரில் புறப்படுகின்ருள். மோகனுவின் சிற்றப்பா சிவானந்தம் "எங்கே செல்லுகின்ருய் ?" என்ற குரலுடன் மோகனு வின் முன் தோன்றுகின்ருர்.

## முதல் சந்திப்பு

மோகனு தனக்கு மனம் நிம்மதியில்லை யெனவும் அதனுல் பூங்காவிற்குச் செல்வதாகவும் கூறிவிட்டு வெளி யேறுகின்ருள். பூங்காவினுள் கார் நுழைகின்றது. அப் பூங்கா இயற்கை யழகு பல நிரம்பி இருந்ததுடன், செயற்கையழகும் கொண்டிலங்கியது. மோகனு காரை விட்டிறங்கி, தோழி வாணியுடன் பூங்காவின் அழகைச் சுற்றிப் பார்க்கின்ருள். செயற்கையாலுண்டான மின்சார விளக்குகளை இடத்திற்கேற்ப பலவித வண்ணங்களுடன் போடப்பட்டிருந்தன. மேலும் அன்று பூரண சந்திரன். கேட்கவா வேண்டும்! மோகனுவின் ஆனந்தத்திற்கு! ஒரு பக்கம் ஆனந்தம். மற்ருெரு பக்கம் சந்திரனை நினைக்கை

யில் ஏக்கம். இவ்வாறு உள்ளம் ஊசலாடியவண்ணம் மோகனு சென்றுகொண்டிருக்கின்றுள். வாணி பின் தொடருகின்றுள். மோகனு இயற்கையின் எழிலைப்பற்றிப் புகழ்ந்துகொண்டே செல்லுகையில் அங்குள்ள நாவல் மரத்தினடியில் பழங்கள் சில உதிர்ந்திருந்தனவற்றைக் காண்கின்றுள்.

ஒரு கருவண்டானது அன்று மாலையில் பூத்திருந்த மலர்களின் இனிய மதுவை உண்டு மயங்கியதின் காரணத்தினுல், அம்மரத்தினடியில் அதுவும் ஒரு நாவல் கனி போலக் கிடந்தது. அந்த வண்டைக் கனியென்றெடுத்துத் தன் உள்ளங்கையில் வைத்துப் பார்க்கின்றுள். அப்பொழுது அவ்வண்டு ரீங்காரமிட்டு 'ஙொய்' என்று பறந்து செல்கின்றது. நாவற்கனியென்றெண்ணி, வண்டை எடுத்து ஏமாந்த இளங்கன்னிகை, சந்திரன் படுத்துறங்கும் பளிங்கு மேடையின் பக்கலில் நாடுகின்றுள். தோழி வாணி கார் இருக்கும் இடத்தினை நோக்கி உண்டி, தாம்பூலம், வாசனைத் திரவியங்கள் முதலியவற்றை எடுத்து வரச் செல்கின்றுள். ஆனுல் மோகனுமட்டும் பளிங்கு மேடையில் அமரலாமென எண்ணிச் செல்கின்றுள்.

பளிங்கு மேடையின்மீது யாரோ ஒரு ஆடவன் உறங்குவதைக் காண்டலும் ஐயுறுகின்றுள். உள்ளத்தை ஒருவாறு திடப்படுத்தி, ஆங்கமைந்திருந்த மின்சார விளக்கை ஏற்றச் சுவிச்சியைத் தட்டுகின்றுள். சந்திரன் கைக்குட்டையால் முகத்தை மூடியவண்ணம் உறங்கிக் கொண்டிருக்கின்றுன். எனவே முகத் தோற்றத்தை நெருங்கினுலொழிய இன்னுரென அறிய முடியாது. இளம்பெண்—எனவே அஞ்சுகின்றுள்; தூரத்திலிருந்து பார்க்கையில் உளமகிழ் அன்பன் சந்திரனின் உருவம் போல் தோன்றுகின்றது. ஒருவேளை சந்திரனுகவும் இருத்தல் கூடும் எனக் கருதிய மோகனு ஒருவாறு தன் மனத்தைச் சரிப்படுத்திக் கொண்டு மேடையை அணுகி சந்திரனின் முகத்தின் மீதிருந்த கைக்குட்டையை நடுக்கத்துடன் விலக்குகின்றுள்.

கைக்குட்டையை விலக்கியதுதான் தாமதம்; மோகனுவின் நிலை தன்னையே தான் சரிப்படுத்திக் கொள்ள முடியாத அளவுக்கு மீறிய ஆனந்தப் பரவசமெய்து கின்ருள். இந்நிலை எவ்வாறு இருந்ததெனின் "அன்றில் பறவையினம் இணைபிரியாது வாழும். ஆண் பறவை வெளிச்சென்று வாராமற் போனல் பெண்பறவை மும்முறை கூவும்; பெண் பறவை வெளிச்சென்று வாராமற் போனல் ஆண் பறவை மும்முறை கூவும். தன் துணை வாராமற் போனல் உயிரை விட்டு விடும். அவ்வாறு உயிர் விடப் போகும் சமயம் தன் துணை வந்துவிட ஒரு பெண் பறவை அடைந்த அளவற்ற மகிழ்ச்சியைப் போலல்லவா இருந்திருக்கும்; நம் மோகனுவின் உள்ளம். சந்திரனையே தன் மனத்தில் மணாளனுகக் கொண்ட மோகனு, அச் சந்திரனை அப்பூரண சந்திர தினத்தன்று, அழகிய பலவித வண்ணங்கள் நிறைந்த மின்சார விளக்குகளினிடையே இனிமையான தென்றல் வீச, நீர் ஊற்றுக்கள் பெருக்கெடுத்துக் கொட்ட, புன்னை மரத்தினடியில் பளிங்கு மேடையில் படுத்துக்கொண்டிருந்த அவ்வழகனைக் காண்டலும், தான் அன்று கல்லூரியில் சந்தித்தது முதற் கொண்டு கொண்டிருந்த ஏக்கம் நீங்கப் பெற்றவளாய் பேரானந்தமடைந்தாள்; என்பதில் வியப்பில்லை. நடுக் கடலிலே திசையறியாமல் தவித்த கப்பலொன்று கரையைக் கண்டவுடன் அக்கப்பலில் இருந்தோர் அடைந்த ஆனந்தத்தைப் போலல்லவா இருந்திருக்கும் மோகனுவின்நிலை.

மோகனு சந்திரனை எழுப்ப முற்படுகின்ருள். ஆனல், நடுக்கமுறுகின்ருள். அழகிய அவ்விளம்பிடியின் கால்கள் துடிக்க, நாக்குழறும் நிலையில் "சந்திர," "சந்திர" என்று தன் இனிய, தாழ்ந்த குரலில் அழைத்து மெல்லத் தட்டுகின்ருள் சந்திரனை. பாவம்! சந்திரன் அன்று முழுவதும் போட்டிப் பந்தயத்தில் முனைந்து செயலாற்றியதால் தன்னையும் மீறிய வண்ணம் அயர்ந்து. சிற்றுண்டி கூட அருந்தாமல் நித்திரை செய்தான். தன்னை யாரோ எழுப்புகின்ருர்கள் என்று எண்ணிப் புரள்கின்ருன்.

அவனும் தனனையுமறியாமல் 'மோகனு,' 'மோகனு' என்று பிதற்றுகின்றான். இதைக் கேட்ட மோகனுவின் நிலையைச் சொல்லவா வேண்டும். உடனே இன்பப் புன் முறுவலுடன், மணம் நிறைந்த பூச்செண்டு ஒன்றை எடுத்து, சந்திரனின் முகத்தின்மீது படும்படியாக வைத்து அப் பூச்செண்டைக் கையில் பிடித்த வண்ணம் நிற்கின்றாள். சந்திரன் அப்பூச்செண்டின் மணத்தினாலும் யாரோ ஒருவர் தன்னை எழுப்புவதாலும் திடுக்கிட்டு விழிக்கின்றான்.

உடனே தன் எதிரில் அந்நேரத்தில் ஒரு அழகிய பெண்ணுருவம் தலை குனிந்து நிற்பதைக் காண்கின்றான். கண்களைக் கைக்குட்டையால் நன்றாகத் துடைத்துக் கொண்டு நோக்கலானான். அவ்விளம் பிடியும் அன்பு மிகுந்த, காதல் கனிந்த பார்வையுடன் நோக்கினாள் சந்திரனை. இந்நிலை,

"கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்
[சொற்கள்
என்ன பயனு மில" என்றபடி

இருவருடைய அன்பு கனிந்த கண்களும், ஒன்றுக் கொன்று பேசிக்கொள்கையில் அவர்களுடைய வாய்க் கென்ன வேலை? இங்ஙனம் அவ்விருவரும் ஒருவரை யொருவர் நோக்கி உடல் வியர்க்கும் நிலையில் மெய்ம்மறந்த வண்ணம் நிற்கலாயினர். சிறிது நேரத்திற் கெல்லாம் சந்திரன்,

"யானோக்குங் காலை நிலனோக்கும் நோக்காக்காற்
றானோக்கி மெல்ல நகும்" என்றபடி

"நான் அவ்விளம்பிடியை நோக்குகையில் அவள் நிலத் தினைக் கண்ணுறுகின்றாள். நான் காணவிட்டால் அவள் என்னை நோக்கிப் புன்முறுவல் செய்கின்றாள்!" என்று தனக்குள் எண்ணமிட்டு நாக்குழறும் நிலையில் மோகனு வைப் பார்த்து, "மோகனு! அடுக்கடுக்காய் அமைந்த மாளிகையிலே, இந்நேரத்திலே அயர்ந்து நித்திரை செய்ய வேண்டிய நீ, பச்சைக் கிளியைப் போன்று, இந்நேரத்தில்

தன்னந்தனிமையாக ஏன் இங்கு வந்தாய்?" என்று கேட்கலுற்முன்.

மோகன: தாங்கள் எதற்காக, இந்த இடத்தில் வந்து உறங்கினீர் ?

சந்திரன் : யான் இங்கு என் நண்பன் சேகருடன் இளைப்பாற இன்று மாலை ஆறு மணிக்கு வந்தேன். வந்த இடத்தில் இம்மேடையில் அயர்ந்து நித்திரை செய்து விட்டேன்.

மோகன : எங்கே சேகர் ?

சந்திரன் : யான் உறங்கியதும், சேகர் என்னை எழுப்பி வீட்டிற்கழைத்தான். வர மறுத்தேன். விடை பெற்று வீடு சென்று விட்டான். யான் மட்டும் இங்கு உறங்கி விட்டேன்.

மோகன : சேகர் சென்று விட்டாரா? ஆமாம். நீர் ஏன் வீடு திரும்ப மறுத்தீர் ?

சந்திரன் : அனுவசியமான கேள்வி. காரணம். கேட்க வேண்டாம். யான்தான் முதலிலேயே தெரிவித் தேனே.

மோகன : என்னவென்று ?

சந்திரன் : வந்தவிடத்தில் அயர்ந்து நித்திரை கொண்டேனென்று. ஆமாம் நீ எதற்கு இங்கு வந்தாய் ?

மோகன : நானு ? யானும் அப்படித்தான்.

சந்திரன் : எப்படித்தான்? ஏன் இந்நேரத்தில் இங்கு வந்தாய் என்று கேட்டால்,......

மோகன : அனுவசியமான கேள்வி....பதில் சொல்ல முடியாது.

சந்திரன் : என்ன ! முடியாதா ? தெரிவித்தா லென்ன ?

மோகன : தெரிவித்தால் யாது பயன் உம்மால்? இருப்பினும் பயனைப் பெற சம்மதிப்பீரா ?

சந்திரன் : முடிந்தால்......

மோகனு : என்ன முடிந்தால் ? சம்மதிப்பீரா ?

சந்திரன் : பிறகு பேசிக்கொள்வோம் அதைப்பற்றி. நீ இந்நேரத்தில் எதற்காக வந்தாய் ?

மோகனு : என் மனம் ஏதோ ஒரு அரிய பொருளை நாடியது. அதைக் கருதி என் மனம் அல்லலுற்றது. அதனுற்றுன் இங்கு வந்தேன். அல்லலுறும் அம்மனத்தை வேறு வழியில் திருப்ப என் பூங்காவை நோக்கி வந்தேன்.

சந்திரன் : என்ன? உன் பூங்காவா? இவ்வழகிய சோலை உன்னுடையதா ? நீ மகா பாக்கியசாலிதான் ?

மோகனு ; ஆமாம்! என் பூங்காதான். அதனுற்றுன் இங்கு வந்தேன் இளைப்பாற. மனம் நிம்மதியடைய யான் இங்கு வந்தேன். வந்த இடத்தில் என் மனம் நாடிச் சென்றதைப் பெற்றேன். மனமும் நிம்மதியடைகின்றது,

சந்திரன் : என்ன ? நாடியதைப் பெற்ருயா ? எங்கே ? எதோ ? காண்பி பார்க்கலாம் ?

மோகனு : (புன்னகையுடன்) எங்கேயா ? இங்கு தான், என் எதிரிலேயேதான்: தாங்கள் இருக்கும் இடத்திலேயேதான் ! என் கண்முன்னுலேயேதான் பெற்றுள்ளேன்.

சந்திரன் : என்ன ? உன் எதிரிலா ? ஒன்றையும் காணுமே ? ஏதோ என்னை ஏமாற்றுகின்ருய்.

மோகனு : என்ன ? இன்னுமா விளங்கவில்லை ? உங்களையா. ஏமாற்றுகின்றேன் ? என்நிலையை வெளிப்படுத்த வேண்டுமா ? உமக்கே அது.

"அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சங்
கடுத்தது காட்டும் முகம்"

என்றபடி என் தோற்றத்தைக் கொண்டே விளங்கவில்லையா அன்பரே உமக்கு ?

சந்திரன் : என்ன? எனக்கொன்றும் விளங்கவில்லையே !

மோகனு : இன்னுமா சோதனே. யான் என் மனத் தொடு, உள்ளம் பொருந்திய நிலேயில் உள்ளபடியே உம்மை யான் காதலிக்கின்றேன். உம்மையே மணம்செய்து கொள்வதாகவும் தீர்மானித்துவிட்டேன். இதற்காக, தங்கள் சம்மதம்......(என்று வாய் குழற, கம்மிய குரலில், உடல் வியர்க்க, சந்திரனின் பதிலே எதிர் நோக்கிய வண்ணம் கேட்கலாயினள். இவ்வாறு கூறியதை கேட்டவுடன் திடுக்கிட்டு),

சந்திரன் : என்ன ? மணமா ? யாரை மணக்கத் தீர்மானித்து விட்டாய்? சிந்திக்க வேண்டியதுதான். நீ என்ன செல்வச் சீமானின் திருமடந்தைபோலத் திகழ்கின்றனே. அன்றியும் மெத்த படித்தவள், இப்பூங்காவினேயே உரியவளாகக்கொண்ட செல்வி நீ, யாரை மணக்க விரும்புகின்ருய் ?

மோகனு : யாரையா ? உம்மையேதான் !

சந்திரன் : என்னேயா மணக்கப் போகின்ருய்? யான் ஓர் ஏழை. ஏதோ என் அத்தையின் உதவியாற்ருன் இன்று யான் இம்மட்டும் படித்து வருகின்றேன்.

"கைம்மாறு வேண்டாக் கடப்பாடு மாரிமாட்டு
என்ருற்றுங் கொல்லோ உலகு"

என்றபடி கைம்மாறு கருதாமல், உதவி செய்யும் அவ்வம்மைக்கு இந்நேரத்தில் மனமார்ந்த நன்றி செலுத்துகின்கின்றேன். எனவே இவ்வேழையைக் கனவிலும் நினேக்க வேண்டா. ஒரு செல்வச் சீமானின் திருக்குமாரனேத் தேர்ந்தெடுத்து மணம் புரிந்து கொண்டால் நின் நிலேக்கும், அச் செல்வனின் நிலேக்கும் சரியாக இருக்கும். நான் யார் ? நீ யார் ? நினேத்துப்பார் ! நீ அவ்வாறு கூறுதல் தகாது. எனவே அது முடியாத ஒரு செயலாகும் (என்று மறுக்கின்ருன் சந்திரகுமார்.)

மோகனு முகம் மாறுபட, அன்பு கனிந்த வார்த்தைகள் பல சொல்லிச் சந்திரனேத் தன் வயப்படுத்த முயற்சிக்கின்ருள். என்ருலும் சந்திரன் இணங்குவதாகக் காணப்படவில்லே. ஆனுலும் சந்திரனின் மனம் மட்டும் மோக

ணவை நாடுகின்றது. மறுப்பதின் காரணம் ஒருகால் பின்னல் மோகனு தன்னுடைய செல்வச் செருக்கால் மணம் புரிந்து கொள்ளாவிட்டால்; என் செய்வதெனக் கருதியே இவ்வாறு மறுக்கின்ருன். மோகனு இறுதியாக ஒன்றும் செய்யமுடியாதவளாய், சிறிது பொழுது கிடந்து, யோசனையில் ஆழ்ந்து, சந்திரனின் பிடிவாத குணத்தைக் கருதியவளாய், தான் உயிர் மாய்வதே சிறந்ததெனக் கருதி, தன் அரைக் கச்சையில் இருந்த கைத்துப்பாக்கியை எடுத்து, சந்திரன் கையில் கொடுத்து, "நீங்கள் இத் துப்பாக்கியால் என்னைச் சுட்டுக் கொன்றபின் அப்பால் செல்லுங்கள். இன்றேல் என்னைத் திருமணம் செய்து கொள்வதாக வாக்குறுதி கொடுங்கள்" என்று மன்ருடினுள்.

சந்திரன் மோகனுவின் துணிவைக் கண்டு திடுக்கிட்டான். பெண் என்ருல் பேயும் மனமிரங்கு மன்ருே! சந்திரன் தன் கையில் கிடைத்த கைத்துப்பாக்கியை எறிந்துவிட்டு மோகனுவைப் பார்த்து, நாம் சம்மதித்தால் உன் பெற்ருேர்கள்......

மோகனு: என்ன? என் பெற்ருேர்களா? அவர்களா கலியாணம் செய்துகொண்டு இன்பமுடன் வாழப் போகின்ருர்கள். நாம்தானே! வா; என்று இன்பக் குரலுடன் அழைத்தாள். சந்திரன் தன்னையும் அறியாமல் "இனி நீயே நான், நானே நீ. நம் நட்பு நம் வாழ்நாள் முழுமையும் என்றுமே பிரியாது. இனி உன்னையே மணப்பேன். யான் ஐயுற்றதின் காரணம் நீ எங்கேச் செல்வச் செருக்கால் மனம் மாறிவிடுவாயோ எனக் கருதியே நான் அவ்வாறு கூறினேன். உன் உள்ளக் கிடக்கையை இப்போதுதான் உள்ளபடியே உணர்ந்தேன். நாம் இனிமேல் அன்றில் பறவைகளாக வாழ்வோம்" என்று கட்டுக் கடங்காக் களிப்புடன் கூறலானுன். கேட்கவா வேண்டும் மோகனுவின் ஆனந்தத்தினை! அளவில்லாத ஆனந்தம்! எல்லையில்லாத மகிழ்ச்சி! ஒருவரையொருவர் தழுவி உல்லாசமாக இருந்தனர்.

நகமும் சதையும் போல், கடலும் அலையும் போல், பூவும் மணமும் போல், நிலவும் ஒளியும் போல், உயிரும் உடலும் போல் ஈருயிரும் ஒருயிராக அவ்வழகிய பூங்காவிலே, பூரண சந்திரன் ஒளியிலே, அச்சோலையிலே இன்பமாக இருந்தார்கள். அவ்வழகிய பூங்கா உண்மையாகவே தெய்வலோகம் என்பார்களே அதைப்போன்று காட்சியளிக்க, ஆங்குத் திருமகனும், திருமடந்தையும் போன்று, பளிங்கு மேடையில் அமர்ந்து ஒருவரை யொருவர் அளவளாவி, அன்பு கனிந்த வார்த்தைகள் பலவற்றைப் பேசி உரையாடலானார்கள்.

இதற்குள் மோகனாவின் தோழி வாணி காரின் பக்கல் நாடி தாம்பூலம் முதலியனவற்றை எடுத்துக்கொண்டு, மோகனாவை அழைத்த வண்ணம், மோகனாவின் பக்கம் நாடுகின்றாள்.

ஆங்கு மோகனா தன்னுடைய இன்பக் கலையான நாட்டியத் திறனைக் காட்டும் வண்ணம் ஆங்கு நடிக்க, இனிமை வாய்ந்த குரலில் சந்திரன் பாடக் கண்டாள் வாணி. கண்டதும் திடுக்கிடுகின்றாள். மோகனா என்ற குரல் கேட்கின்றது. மோகனாவும் சந்திரனும் திடுக்கிடுகின்றனர். உடனே ஒருவாறாகத் தேறிய மோகனா வாணியை அழைத்துச் செய்தியை விளக்கவே வாணி இன்புறும் நிலையில் தலையசைக்கின்றாள்.

பிறகு மூவரும் அந்நடு நிசியில் அப்பூஞ்சோலையில் அப் பளிங்கு மேடையில் அமர்ந்து சிற்றுண்டி அருந்தலானார்கள். சந்திரனின் பசிக்கு அளவேயில்லை. எனவே இருவரும் நகைக்கும் நிலையில், அவசர அவசரமாக உண்டியை உண்டான். இளம்பிடியும் தோழி வாணியும் ஒருவாறு உண்டி முடித்துத் தாம்பூலம் போட்டுக்கொண்டு உல்லாசமாக இருந்தனர். வாணனைத் திரவியங்களை யெல்லாம் கொட்டினாள் சந்திரன்மேல் மோகனா. தோழி வாணி மோகனாவின்மேல் கொட்டினாள். இக் காட்சி கண் கொள்ளாக் காட்சியாகத் திகழ்கின்றது.

இவ்வாறு இருக்க உடனே வாணி எழுந்து காரை நோக்கிச் செல்கின்றாள். மோகனா சந்திரனை அழைக்க

லாயினன். இருவரும் தங்கள் கைகளைக் கோத்துக் கொண்டு உல்லாசமாகக் காரில் ஏறி உட்கார்ந்தனர். வாணி காரை வேகமாகச் செலுத்துகின்றாள். வழியில் மற்றொரு கார் எதிர்ப்படுகின்றது. சிறிது நேரத்திற் கெல்லாம் சந்திரன் உறைந்த இல்லத்தைக் கார் அடைகின்றது. சந்திரன் இல்லம் புக காரைவிட்டு இறங்குகின்றான். மோகனா "செல்லாமை உண்டேல் எனக்குரை" என்று கூறலுற்றனள். சந்திரனை விட்டுப் பிரிந்து, விடைபெற்று இல்லம் நாடுகின்றாள்; மோகனா.

எதிர்ப்பட்ட கார் நம் சந்திரனின் தோழன் சேகருடையதுதான். சந்திரனை விட்டுப் பிரிந்த சேகர் இல்லம் திரும்பி நெடுநேரமாகியும் சந்திரன் வாராமையைக் கண்டு, தன் காரை எடுத்துக்கொண்டு பூங்காவை அடைந்தான். (காரணம் இருவரும் ஒரே இல்லத்தில் இருந்து வந்தனர்) சேகர், பூங்காவிலே சந்திரன் உறங்கிய இடத்தைக் காண்டலும், எங்குப் பார்த்தாலும் அலங்காரம், வாசனைத் திரவியங்களின் பரிமளம் மூக்கைத் துளைத்துக்கொண்டு சென்றது. சேகரின் மனம் ஊசலாடியது. ஆங்கு உண்டி முதலியவற்றின் பாகங்கள் சிதறிக் கிடந்தன. சந்திரனின் கைக்குட்டையும், மோகனாவின் கைத் துப்பாக்கியும் கிடைக்கப் பெறுகின்றான் சேகர்.

உடனே மோகனாவின் பெயரைக் கைத்துப்பாக்கியில் காண்டலும் தான் வரும் வழியில் எதிர்ப்பட்ட காரில் ஆடவனும் பெண்ணும் அமர்ந்திருக்கப் பெண்ணொருத்தி, காரை வேகமாகச் செலுத்தியதையும் நோக்கி சந்திரனும் மோகனாவும் சந்தித்தார்கள் போலும் என்று எண்ணிய வண்ணம் இல்லம் திரும்பலானான். கண நேரத்தில் இல்லம் திரும்பிய சேகர், சந்திரனைத் தட்டி எழுப்புகின்றான். சந்திரன் மீது வாசனை பரிமளிக்கின்றது. உண்மையை உணர சந்திரனைக் கேட்கலானான். உண்மையை ஒளிக்க மனந்துணியவில்லை சந்திரனுக்கு. எனவே பூங்காவில் நிகழ்ந்தன அனைத்தையும் உள்ளது உள்ளவாறே தெரிவிக்கின்றான் சந்திரன். இதைக் கேட்டு திடுக்கிட்ட சேகர். சந்திரனின் நிலையையும், மோகனாவின் நிலையையும்

கருதியவனாய்ச் சந்திரனின் கல்வியின் நிலையையும் கஷ்டத்தின் நிலையையும் கருதியவனாய் அச்சுறுத்துகின்றான். சந்திரனும் தன் நிலையையும் மோகனாவின் விடாப்பிடியையும் தெரிவித்தான். எது எப்படியிருப்பினும் உன் காரியத்தில் கண்ணாக இரு என்று உரைக்கின்றான். சந்திரனும் தலையை அசைக்கின்றான். இருவரும் பின்னர் பல உரையாடல்களை நிகழ்த்தியபடி படுக்கையறையை அடைகின்றனர், நித்திரை செய்ய.

## 4. மாணிக்கனாரின் அறிவுரைக் கடிதம்

இங்கு இப்படி இருக்க திருக்கழுக்குன்றத்தில் உறைந்து வந்த சேகரனின் தந்தை திருவாளர் மாணிக்கனார் தம் திரண்ட செல்வத்தினைக் கொண்டு ஏதாவதொரு தொழிலை ஆரம்பிக்கலாமெனக் கருதியவராய், கோயம்புத்தூர் இயற்கை வசதி பல பெற்றிருப்பதனால், ஆங்கு மில் தொழிற்சாலையொன்றை ஏற்படுத்தலாமெனக் கருதியவராய், கோயம்புத்தூர் சென்று அங்கு மில் தொழிற்சாலையை ஏற்படுத்துகின்றார். விரைவில் தொழிற்சாலையும் முன்னேறி நாளுக்கு நாள் அதிக லாபமும் தந்தது.

> "வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
> பிறவும் தமபோற் செயின்"

என்பதை உணர்ந்த பெரியாராகையால், தன் தொழிலையும் தொழிலாளர்களையும், வாணிபத்தையும் சிறந்த முறையில் நடாத்தி வந்தார். சேகரனின் தந்தை மாணிக்கனார், தம் குமாரன் சேகரனுக்கும், அவன் தோழன் சந்திரனுக்கும் இவ்விடயத்தைப்பற்றி திருச்சிக்குக் கடிதம் வரையலானார்.

*    *    *    *

மறுநாள் பொழுது புலர்கின்றது. விழித்தெழுகின்றனர் சந்திரனும் நண்பன் சேகரனும். அன்றைய பாடத்திட்டங்களைக் குறித்துப் படித்தபின் உரையாடி உண்டி முடித்துக் கல்லூரிக்குச் செல்ல காரைத் தயாராக்குகின்றனர். உடனே இருவரும் காரில் உட்காரும் சமயம் ஒரு

தபாற்காரன் சேகர் கையில் கடிதம் ஒன்றினை நீட்டலுற்றான். கடிதத்தைக் கண்ட சேகர் அவசர அவசரமாக மேல் உரையைக் கிழிக்கலானான்.

அதில் அடங்கிய செய்தி பின்வருமாறு :—

தமிழப்பன் மில் தொழிற்சாலை,
கண்ணகிக் கோயில் தெரு,
கோவை, 6-5-'56

அன்பு மிக்க குமாரன் சேகரனுக்கும் சந்திரனுக்கும் வரைந்த முடங்கல். யான் தற்பொழுது கோயம்புத்தூரில் "தமிழப்பன் மில் தொழிற்சாலையை நிறுவியுள்ளேன். மில் நடாத்துவதற்கு வேண்டிய உடல் உரம் இல்லாமையால் மில் தொழிலைச் செம்மையுற நடாத்த இயலவில்லை. ஆகவே நீங்கள் இருவரும் கல்வியை முடித்துவிட்டு இங்கு இருவரும்வந்து தோழர்களாகவே திகழ்ந்து மில் தொழிலை திறம்பட நடாத்துவீர்கள் என்று நம்புகின்றேன். நிற்க,

நீங்கள் கற்கவேண்டிய கல்வி "கற்க கசடறக் கற்பவை கற்றபின், நிற்க அதற்குத் தக" என்பதற்கிணங்க இருத்தல் வேண்டும். பின் வரும் குறட்பாக்களைக் கற்றுணர்ந்து அவ்வாறே நடத்தையில் நிற்க இருவரும் முயற்சிப்பீர்களாக.

(1) அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் [நான்கும்
இழுக்கா இயன்றது அறம்.

[அறமாவது பொறுமை, பேராசை, கோபம், கடுஞ்சொல் ஆகிய இந்நான்கு குற்றங்களினின்றும் நீங்கி நடப்பதேயாகும். எனவே எக்காரியத்திலும் இக் குற்றங்கள் நேராதிருக்கக் காக்க வேண்டும்.]

(2) ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று.

[ஒப்பற்றதாகக் கருதக்கூடிய சிறந்த அறமாவது கொல்லா விரதமேயாகும், அதனை யடுத்துப் பொய் பேசா திருத்தல் மிக நன்ருகும். எனவே அஹிம்சா தர்மத்தையும் சத்தியத்தையும் மேற்கொள்ள வேண்டும்.]

(3) இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்
திருநீக்கப் பட்டார் தொடர்பு.

[இருமனம் படைத்த வரைவில் மகளிராகிய விலைமாதர் தொடர்பும், கள் உண்ணுதலும் சூதாடுதலும் செல்வம் நீக்கப்படுதற்குரியவர் மேற்கொள்ளும் தீச்செயல்களாகும். எனவே இவற்றை விலக்க வேண்டும்.]

இவை அனைத்திற்கும் மேலாகப் பெரியார் துணைபற்றி வாழவேண்டும்.

"தம்மிற் பெரியார்த் தமரா வொழுகுதல்
வன்மையுள் எல்லாம் தலை" அல்லவா ?

விடுமுறையில் உங்கள் இருவர் வருகையையும் விழைகின்றேன். எல்லாச் செல்வமும் பெற்று நல்வாழ்வு வாழ்வீர்களாக.

இங்ஙனம்,
உங்கள் அன்புள்ள,
மாணிக்கனார்.

என்று வரைந்திருந்ததைப் படித்த சேகரும், சந்திரனும் இன்புற்றவர்களாக மேலும் கல்வியில் ஊக்கம் செலுத்தி நன் முயற்சியுடன் பயிலவேண்டுமெனத் திட்டம் போட்டனர். இங்ஙனம் கடிதம் படித்து முடித்த இரு நண்பர்களும் தங்கள் கல்லூரிக்கு நேரே காரில் காற்ருய்ப் பறந்தனர். மோகனுவும் அப்போதுதான் கல்லூரிக்குப் புறப்பட்டு வந்தாள் சந்திரன்; நினைவாகவே.

இருவருடைய கார்களும் சந்திக்கும் நிலையாயிற்று. குறிப்பறிந்த சேகர் காரை விட்டிறங்கி கல்லூரியின் பக்கல் நாடலானுன். சந்திரனே கல்லூரியின் பக்கமுள்ள பூஞ் சோலையின் பக்கம் நடக்கலானுன். மோகனு, சந்திரன் சென்ற இடத்திலேயே தன் காரை நிறுத்திவிட்டு இறங்கி வந்து சந்திரனுக்கு வணக்கம் செலுத்திக் கை குலுக்கு கின்ருள். சந்திரன் அன்று வந்த அக்கடிதத்தை நீட்டு கின்ருன். மோகனு கடிதத்தைப் படித்து முடித்ததும் சந்திரனைப் போன்றே கல்வியில் நாட்டங் கொள்கிருள். அதே இடத்தில் இருவரும் போட்டியிட்டுப் படித்து முதன்மையாகத் தேறவேண்டுமென்று சபதமிடுகின்றனர். மோகனு, மறுநாள் மாலை 7 மணிக்குப் பூங்காவில் தன்னைச் சந்திக்கும்படி வேண்டுகின்ருள். இப்படிப் பல வார்த்தை களைச் சொல்லிவிட்டுக் கல்லூரிக்குச் செல்லுகின்ருள். சந்திரனும் தன் வகுப்பை நாடுகின்ருன். மூவரும் படிப்பில் முதல் வகுப்பினராகவே திகழ்கின்றனர்.

## 5. காதலரின் இரண்டாம் சந்திப்பு

மறுநாள் மாலை ஏழு மணிக்கு, சந்திரன் சேகரிடம் உள்ளதைச் சொல்லிவிட்டுப் பூங்காவை நாடுகின்ருன். மோகனுவும் தன் கல்வியை முடித்து அவசர அவசர மாகச் சிற்றுண்டி, தாம்பூலம், வாசனைத்திரவியம் முதலிய வற்றை எடுத்துக்கொண்டு, தானும் பலவித வண்ணங் களுடைய பட்டாடை யுடுத்தித் தோழி வாணியுடன் காரில் ஏறிப் பூங்காவை நாடிப் புறப்படுகின்ருள்.

சந்திரன் பளிங்கு மேடையில் அமர்ந்து இயற்கையின் எழிலைப் புகழ்ந்த வண்ணம் மோகனுவை எதிர் நோக்கி அமர்ந்திருந்தான். சிறிது நேரத்திற் கெல்லாம் கார் சத்தம் கேட்கின்றது. சந்திரன் உற்று நோக்கினுன். மோகனு பூங்காவில் வந்து இறங்கினுள். சந்திரன் எதிர் கொண்டோடி மோகனுவை வரவேற்கின்ருன். மோகனு தான் கொண்டு வந்த பட்டாடைகளையும், வாசனைத் திரவியங்களையும் சந்திரனுக்கு அணிவிக்கின்ருள். இருவரும்

பின்னர் உண்டியருந்தி, தாம்பூல மணிந்து இன்பப் பேரானந்தக் கடலில் மூழ்குகின்றனர்.

அன்றைய தினம் தங்கையைக் காணத் திருச்சிக்கு வந்த மோகனாவின் தமையன் இளங்கோவன் மோகனாவின் அறையிற் போய் நுழைகின்றான். அங்கு மோகனாவைக் காண வில்லை. சிற்றப்பாவிடம் ஓடுகின்றான். சிற்றப்பா வயது முதிர்ந்த பெரியவர். அவரைக் கண்டு 'தங்கை எங்கே?' என்று கேட்கின்றான். "மோகனா பூங்காவிற்குச் சென்றிருப்பாள்" என்று அவர் பதிலளிக்கின்றார். தங்கையைக் கண்டு பல நாட்கள் ஆனமையால் தமையனுக்குத் தங்கையைக் காண வேண்டு மென்ற அவா மிகுந்தது.

உடனே இளங்கோவன் தன் தங்கையைக் காணவும் பூங்காவின் இயற்கை அழகைக் கண்டு இன்புறவும் அதை நாடிக் காரைச் செலுத்துகின்றான். கார் சிறிது நேரத்திற் கெல்லாம் பூங்காவினுள் பூம், பூம் என்ற சத்தத்துடன் நுழைகின்றது. ஆங்கே தங்கையின் கார் நிற்கக் கண்டு, அதன் பக்கம் தன் காரை நிறுத்தி, ஆங்கு அமர்ந்திருந்த தோழி வாணியிடம் மோகனா எங்கே? என்று கேட்கின்றான். வாணி மௌனம் சாதிக்கின்றாள். அதைக் கண்டு இளங்கோவன் மோகனா! மோகனா! என்றழைத்த வண்ணம் பூங்காவுள் நடக்கின்றான்.

காரின் பூம், பூம் சத்தத்தையும், மோகனா என்றழைத்ததையும் கேட்ட இவ்விளங் காதலர்கள் திடுக்கிட்டனர். இந்நிலையில் இன்பமும் துன்பமும் அவர்கள் உள்ளத்தே மாறி மாறி மோத அமைதியாக இருந்தனர். என்றாலும் அவர்கள் இன்பப் பெருக்கிற்கு இடையூறாக இருந்ததன்றோ? படகைக் கடலில் செலுத்தும் சமயத்தில் புயற் காற்று வந்துற்றது போல அவர்களுடைய இன்பப் படகு இளங்கோவன் வருகையாம் புயல் காற்றால் அல்லலுற்றது; அவ்விரு இளங் காதலர்களின் நெஞ்சம்.

என்றாலும் விதியை வெல்ல எவரால் முடியும்? நிகழ்வன நிகழ்ந்துதானே தீரும். நாம் ஒன்று நினைக்க,

செயல் வேறொன்றாக வன்றோ சிலசமயம் முடிகின்றது. இளங் காதலர்கள் ஒருவரை விட்டு ஒருவர் பிரிய மன மில்லாதவராய் நின்றனர். அவ்விளங்காதலர்களை நோக்கி அக்குரல் நெருங்கிக் கொண்டிருந்தது.

இளங்கோவன் தற்காப்பிற்காக வைத்துக் கொண்டிருந்த கைத்துப்பாக்கியுடன் தோன்றுகின்றான். இருவரும் திடுக்கிடுகின்றனர். தங்கை மோகனா அண்ணா என்றலறுகின்றாள். தங்கையுடன் ஓர் ஆடவன் நிற்பதைக் கண்டு, பெருங் கோபமடைந்து தன்னையும் மறந்து தன் கைத்துப்பாக்கியினால் சந்திரனை நோக்கிச் சுடலானான்.

தங்கை மோகனா 'அண்ணா! சந்திரா!' என்ற குரலுடன் அடியற்ற பனைமரம் போல் சாய்கின்றாள். சந்திரனும் மோகனா! என்ற குரலுடன் கீழே சாய்கின்றான், இவ்விருவர் கூக்குரலும் கேட்கப் படுகிறது: தோழி வாணியால். உடனே பளிங்கு மேடையை நோக்கி ஓடலானாள். பளிங்கு மேடையின் பக்கம் இருவரும் மூர்ச்சை யடைந்து கிடந்ததைக் கண்ணுறுகின்றாள். இளங்கோவன் மெய்ம்மறந்த நிலையில் கைத்துப்பாக்கி யுடன் நிற்கின்றான்.

தோழி வாணி மோகனாவைக் கண்ணுறுகின்றாள். மோகனா சுடப்படவில்லை என்றறிந்து உடனே பக்கத்தி லுள்ள நீரோடையிலிருந்து தண்ணீர் கொண்டு வந்து முகத்தில் தெளித்து மூர்ச்சை தெளிவிக்கின்றாள். மூர்ச்சை தெளிந்தெழுந்த மோகனா அண்ணா! சந்திரனைச் சுட்டு வீழ்த்தி விட்டாயே! என் காதலன் மடிந்தானே! என்றலறிய வண்ணம் சந்திரனைப் போய்ப் பார்க்கின்றாள். வாணியும் உடன் சென்று பார்க்கின்றாள். நல்லகாலம் உயிருக்கு ஆபத்தில்லை. ஆனால் இடது கையின் பக்கமாகக் குண்டு உராய்ந்து அடிபட்டிருந்தது.

'அண்ணா! சந்திரா! என்று கூவியதைக் கேட்ட இளங்கோவன், எங்கேயோ அந்த ஆடவனைப் பார்த்ததாக நினைக்கலானான். செயலற்று நின்ற இளங்கோவன் கைத் துப்பாக்கியை எறிந்து விட்டுச்சந்திரன் பக்கம் ஓடலானான்.

அதற்குள் மோகனுவும், வாணியும் காயம்பட்ட இடத்தில் கட்டு கட்டினர். சந்திரனைக் கண்ட இளங்கோவன் "ஹா நண்பா! என் உயிரைக் காப்பாற்றிய இளங்காளையே" என்று ஓலமிட்டு நீர் தெளித்து மூர்ச்சை தெளிவிக்கின்றான். மூர்ச்சை தெளிந்தெழுந்த சந்திரன் இளங்கோவனைக் காண்டலும் பழையநண்பன் என்பது அவன் ஞாபகத்திற்கு வந்தது. உடனே ஒருவரை ஒருவர் தழுவிக் கொண்டனர். மோகனு இதைக் கண்ணுற்று ஒரு பக்கம் இன்புற்றுள், மற்ருேர் பக்கம் சந்திரனுக்கேற்பட்ட அபாயத்தை நினைந்து கண்ணீர் விட்டாள்.

இளங்கோவனும், சந்திரனும் பழைய நட்பினை நினைந்து கலந்து இன்புற்ற பிறகு, இளங்கோவன் ஆத்திரத்தால் செய்த பிழைக்காக மன்னிப்பு வேண்டினுன். சந்திரனும் தலையசைத்தான். தன் நண்பனே தன் தங்கையின் காதலனுகத் திகழ்வதைக் கண்ணுற்ற தமையன் மகிழ்ந்து, மோகனுவைத் தேற்றலானுன். கண்ணீர்விட்ட காரிகை, தன்னைத் தமையன் தேற்ற பெருமகிழ் வெய்தினவளாய் 'அண்ணு! சந்திரன் உமக்கு எப்படி நண்பரானுர்?' எனக் கேட்கலுற்றுள்.

இளங்கோவன் : தங்காய்! என் உயிரைக் காத்த இளங்காளையம்மா! சந்திரனை நாம் தெய்வமாக நினைக்க வேண்டுமம்மா.

" ஒருநாள் யான் சென்னையில் உயர்நிலைப் பள்ளியில் வாசித்துக் கொண்டிருக்கையில் திருக்கழுக்குன்றமும் மகாபலிபுரமும் செல்ல கண்ணன் பஸ் சர்வீஸில் சென்று கொண்டிருந்தேன். இடையே ஒரு ஓடை. அவ்வோடைக்குச் சமீபத்தில் கட்டப்பட்ட பாலத்தில் மோட்டார் சென்று கொண்டிருந்தது.

" அன்றைக்கு முந்திய நாள் கனமழை பெய்ததினுல் நாங்கள் சென்று கொண்டிருந்த பாலம் ஒரு பக்கம் சரிந்து விழுந்திருந்தது, ஓடையில் நிரம்ப வெள்ளம் ஓடிக்கொண்டிருந்தது. காரோட்டி மோட்டாரை வேகமாகச் செலுத்தினுர். அவ்வதிர்ச்சியினுல் அப்பாலம் முழுவதும் தமால்

என்ற சத்தத்துடன் சரிந்து விழுந்தது. மோட்டார் ஓடையில் கவிழ்ந்தது! என்ன பேராபத்து! சிலர் மாண்டனர். நீந்தத் தெரிந்தவர்கள் சிலர்; நீந்தக்கரையை அடைந்தனர். சிலர் பெருங்காய முற்றனர். யானும் வெளியேற முயற்சித்தேன். ஆனால் எனக்கு நீந்தத் தெரியாது. என் செய்வேன்? ஓடை வெள்ளத்திற்கு இரையாகி விட்டேனென்று யான் நினைந்து வெள்ளத்தில் மூழ்கியும், வெளிவருவதும், நீர் குடிப்பதுமாக இருந்தேன். அவ்வமயம் திருக்கழுக்குன்றத்துப் பள்ளியில் படித்துவிட்டுத் தன் சொந்த ஊராகிய மகாபலிபுரத்திற்கு வந்துகொண்டிருந்த நம் சந்திரன் என் பரிதாப நிலையைக்கண்டு தன் உயிரையும் பொருட்படுத்தாது வெள்ளத்தில் குதித்து என்னைப் பற்றி இழுத்துக்கொண்டு கரையில்சேர்த்தார். கரையை அடைந்ததும் யான் மூர்ச்சையுற்றிருந்தேன். பிறகு எனக்கு ஷேபர் முறையில் சிகிச்சை செய்து காப்பாற்றினார் இச் சந்திரன். எனவே அன்றுமுதல் எங்கள் நட்பு வளரலாயிற்று. அந்நட்பு இன்று தழைத்தோங்கி நிற்கின்றது. இனி நட்பு உறவாய் நீடிக்கும் என்பதில் ஐயமில்லை!” என்று முடித்தான்.

இளங்கோவன் சிறந்த செல்வந்தன். அவன் ஏழை ஒருவனிடம் தன் தங்கை இன்ப வாழ்வை நடாத்த எவ்வாறு இசைந்தான்? அவன் சான்றோன். அறிவுடையான், ஆகையினால் இசைந்தான். அன்றியும் நன்றி மறவாத்தூயன். “எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு” என்பதை உணர்ந்த உண்மையாளன். எனவே தன் உயிரைக் காப்பாற்றிய நண்பன் சந்திரனையே தன் தங்கை காதலித்ததைத் தான் கண்டு மனம் இன்புற்றனன். இவ்வாறு சந்திரன், இளங்கோவன், மோகனா மூவரும் உளம் கலந்து அளவளாவி, சிறிது பொழுது ஆனந்தக் கடலிலாழ்ந்தனர். பூங்காவனத்தைச் சுற்றி இயற்கையின் எழிலைப்பற்றிப் புகழ்ந்த வண்ணம் நடக்கலாயினர். சந்திரன் இளங்கோவனிடம் விடைபெற்றுக்கொண்டு தனதில்லம் நாடுகின்றான். இளங்கோவன் வீட்டிற்குச் சென்று நிகழ்ந்தவற்றை உள்ளபடியே சிற்றப்பா சிவானந்தரிடம் உரைக்கின்றான்.

சிவானந்தம் தகைமை வாய்ந்த சான்ருேர். மோகனு வைத் தன் சொந்த மகள் போல வளர்த்து வருவதன்றியும் மோகனுவின் இஷ்டப்படி மனங்கோணு நிலையில் நடந்து கொள்பவராதலாலும், மோகனுவின் தமையன் இளங்கோவனே இச்செய்தியை இன்புடன் கூறக் கேட்ட தாலும் அவர் முதற்கண் கோபம் அடைந்தாரென்ருலும் பின்னர் தணிந்து மோகனுவின் விருப்பின்படியே இசை கின்ருர். சொல்லவா வேண்டும்; இவை அனைத்தையும் கேட்டுக் கொண்டிருந்த மோகனுவிற்கு! அவளின் இன்பத் தின் எல்லை அளவிட முடியாத நிலையில் அமைகின்றது.

இது முதற்கொண்டு மோகனுவின் சிற்றப்பா அவள் விருப்பிற்கிணங்கி வேண்டியதெல்லாம் ஈந்து வந்தார். இளங்கோவன் சின்னுள் கழித்து சென்னை திரும்புகின் ருன். நிகழ்ந்தன அனைத்தையும் தாயார் அனுசூயாதேவி யிடம் தெரிவிக்கின்ருன். இதைக் கேட்ட அவ்வம்மையார் தன் அண்ணன் குமாரனே சந்திரன் என்று சொல்லுகின் ருள். அப்போதுதான் இளங்கோவனுக்குச் சந்திரன் யார் என்று விளங்கிற்று. மோகனு சந்திரனைக் காதலிப்பதை பற்றி கேட்ட அவ்வம்மையார் முதலில் சிற்றங் கொண்டா ளெனினும் ஒருவாறு தேறித் தன் அண்ணன் குமாரனென வும், தன் உதவியினுல் கல்வி பயிலுவதையும் கருதிய வளாய் அமைதியுடன் புன்னகை கொள்கிருள். என்ரு லும் இச்செய்தியைக் கேட்ட மோகனுவின் தந்தை மறுக் கின்ருர். அவர் தன்னுடைய தங்கை மகன் பெரிய பணக் காரனெனவும், நன்கு படித்தவனெனவுங்கூறி அவனுக்குத் தான் மோகனுவைக் கொடுக்கப்போவதாகவும் முரண்டா டாகத் தெரிவிக்கின்ருர். இதைக்கேட்ட இளங்கோவன் மனங் கலங்குகின்ருன். தாயார் அனுசூயாதேவி, பணம் என்ருல் பிணமும் வாய் திறக்குமன்ருே!" என்பதற் கிணங்க தன் கணவனின் விருப்பின்படியே, தன் நாத்தி யின் மகன் நல்லப்பனுக்கு மோகனுவைக் கொடுப்பதற்கு இசைகின்ருள்.

## 6. காதலரின் மூன்றும் சந்திப்பு

நாட்கள் கரகர வென்று சுழன்றிடும் சக்கரம் போன்றோடின, இளங்காதலர்கள் இருவரும் இன்பத்திலே ஆழ்ந்து தங்கள் காதலைப் பெருக்கிக் கொண்டே சென்றனர். நண்பர்கள் இருவரும் நங்கை மோகனுவும் அவ்வருடத் தேர்தலில் பி. ஏ. வில் முதல் வகுப்பினர்களாகவே வெற்றியுற்றனர்.

"மெய்வருத்தம் பாரார்; பசிநோக்கார் கண்துஞ்சார்
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார் — செவ்வி
அருமையும் பாரார்; அவமதிப்பும் கொள்ளார்;
கருமமே கண்ணுயி னர்" என்றுங்கு,

அம்மூவரும் இவ்வெற்றிக்குப் பெரிது முழைத்தனர். காதலர் இருவரும் நண்பன் சேகரும் வெற்றிப் பெருமிதத்தில் திளைத்தனர். இளங்கோவனும் அவன் சிற்றப்பாவும் பெருமகிழ்ச்சி கொண்டனர். இம்மூவரும் ஏதாவதொரு நற்பணியை மேற்கொள்ள வேண்டுமென்று முடிவு செய்கின்றனர். மக்களுக்குச் சேவை செய்யவும் அவர்களுக்கு அறிவுரைகளைப் புகட்ட வேண்டுமென்றும் கருதியவர்களாய்த் தொண்டில் ஈடுபடுகின்றனர். பாமர மக்களிடையே கல்வியறிவையும் நல்லொழுக்கத்தையும் பரப்புதற்கு முற்படுகின்றனர். திருக்குறளையும் நாலடியாரையும் துணைகொண்டு தம் சேவையில் இறங்குகின்றனர்.

ஒருநாள் மாலை ஆறுமணி இருக்கும். சூரியன் தன் கிரணங்களை மறைத்து, மலையின் உச்சியில் கரகரவென்று மறைகின்றான். சந்திரன் தன் பூரண கிரணங்களுடன் கீழ்த்திசையிலே தோன்றுகின்றான். இனிமை வாய்ந்த தென்றல் வீசுகின்றது. அவ்வினிமையான நேரத்தில் நங்கை மோகனுவும் நம்பி சந்திரனும் பளிங்கு மேடையில் அமர்ந்தவண்ணம் சில உரையாடல்களை நிகழ்த்தலாயினர்.

இன்பகரமான உரையாடல் நிகழ்ந்து கொண்டேயிருக்கையில் இருவருக்கும் ஒன்றைப்பற்றி வாக்குவாதம் நிகழலாயிற்று, அதாவது நாலடியார், திருக்குறள் இவ்

விரண்டினுள் எது காலத்தால் முந்தியது என்பது பற்றிய யாகும்.

மோகனு: நாலடியார்தான் முந்தியது.

சந்திரன்: திருக்குறள்தான் முந்தியது,

மோகனு: நாலடியார்தான் கடைச்சங்க நூல்களுள் முதன்மையானதாகக் கூறப்படுகின்றது.

சந்திரன்: எப்படி?

மோகனு: (பின்வரும் பாட்டைக் கூறுகிருள்)

"நாலடி (1) நாண்மணி நானுற்ப தைந்திணைமுப்
பால் (11) கடு கங்கோவை பழமொழி மாமூலம்
இன்னிலைய காஞ்சியோ டேலாதி என்பவே
கைந்நிலையொ டாம்கீழ்க் கணக்கு"

இப்பாடலின்படி முதற்கண் நாலடியாரையே வைத்துள்ளனர். திருக்குறளைப் பதினென்ருவதாக வைத்துப் பாடியுள்ளனர். இப்படியிருக்க எவ்வாறு திருக்குறள் முந்திய நூலாக இருக்க முடியும்? ஒருகாலும் இருக்காது. எனவே நாலடியார்தான் முந்திய நூலாகும்.

சந்திரன்; இல்லை. இல்லை. திருக்குறள்தான் முந்தியது. நீ சொல்வது தவறு. திருக்குறளை பதினென்ருவதாக வைத்துப் பாடியது வரிசைக் கிரமமன்று. பாடலின் இசைப் பொருத்தத்திற்கேற்பத்தான் அவ்வாறு வைத்துள்ளனர். திருக்குறள் கடைச்சங்க நூல்கள் அனைத்திற்கும் முதற்கண் அமைந்ததேயாகும்,

மோகனு: சரி. அது இருக்கட்டும்.

"ஆலும் வேலும் பல்லுக்குறுதி
நாலும் இரண்டும் சொல்லுக்குறுதி"

என்கின்ருர்களே அதிலும் நாலடியார்தானே முதலில் வைத்து கூறப்படுகின்றது. நாலும் என்பது நாலடிப் பாக்களைக் கொண்ட நாலடியாரையும் இரண்டும் என்பது ஈரடிப் பாக்களைக் கொண்ட திருக்குறளையும் குறிக்கும்.

சந்திரன்: இல்லை. இல்லை. சுத்தத் தவறு. இப்போது ஆலும் வேலும் பல்லுக்குறுதி என்ருயல்லவா?

மோகனு : ஆம்...அதற்கென்ன ?

சந்திரன் : ஆலங்குச்சி கொண்டு விளக்கும்போது மென்மையாகவுளதன்றே ?

மோகனு : ஆம்...மென்மையாகத்தான் இருக்கிறது.

சந்திரன் : வேலங்குச்சி கொண்டு பல் துலக்கும் போது ?

மோகனு ; சிறிது கடினமாக முதலில் தோன்றி பின் நன்ருக விளக்குவதற்கு ஏதுவாகிவிடும்.

சந்திரன் : இது போன்றுதான் நாலும் இரண்டும் சொல்லுக்குறுதி என்பதும்.

மோகனு : என்ன ?

சந்திரன் ; ஆம். ஆலைப் போன்ற மென்மை வாய்ந்தது நாலடியார். வேலைப் போன்று வன்மை வாய்ந்தது திருக்குறள். மற்றும் உலகில் மக்கள் ஒவ்வொரு வரும் சிறிது சிறிதாகத்தான் முன்னேறுகின்றனர். மக்கள் சுலபமாக இருக்கும் ஒன்றைப் புரிந்துகொண்டால், பின் னர் கடினமாக இருக்கும் ஒன்றை எளிதில் அறியலா மன்றே? எனவே நாலடியாரைப் படித்தபின் திருக் குறளைப் படித்தால் எளிதாகத் தோன்றும். காரணம் குறளுக்கு உரையாக அமைகின்றது நாலடியார். உரை யைப் படித்தால் மூலம் நன்கு விளங்குமன்றே ! எனவேதான் உரையாகிய நாலடியாரை முதலிடமாகவும் மூலமான குறளை அடுத்த படியாகவும் அமைத்துள்ளனர்.

மோகனு : நாலடியாரின் வரலாற்றைப் பற்றி உமக்கு நன்கு தெரியுமா ?

சந்திரன் : அவ்வரலாற்றை உண்மை யென்று சொல்லுவதற்கில்லை.

மோகனு : ஏன்? தாங்கள்; திருக்குறளன்பரல்லவா?

சந்திரன் : என்ன ? தமிழ்நாட்டில் தோன்றிய அத் துணை நூலும் சிறப்பு வாய்ந்தவைதானே ! அதிலும் நாலடியாரைத் திருக்குறளுக்கடுத்தபடியாகவன்றே கருது கின்றனர்.

மோகன: அப்படியிருக்க......அதன் வரலாற்றில் என்ன உண்மையில்லை. சொல்கிறேன்: என்னைக் கூர்ந்து கவனியுங்கள்.

சந்திரன்: நன்முகக் கவனிக்கிறேன். நீங்க சொல்லுங்க!

மோகன: கடைச்சங்க நாட்களில், பாண்டியன் உக்கிரப் பெருவழுதி காலத்தில், சமண முனிவர்கள் எண்ணாயிரவர்; தங்கள் நாட்டின் கண் பஞ்சமேற்பட, பாண்டி நாடடைந்து, அவ்வழுதியின் உதவி பெற்று வாழ்ந்து வந்தனர். நாட்கள் பல சென்றபின் அவர்கள் நாட்டில் நல்ல மழை பெய்து நாடு செழித்திருப்பதாகக் கேள்வியுற்று மன்னனிடம் விடைகேட்க மன்னன் காலம் தாழ்த்தினன். முனிவர்கள் தம் சபையை அலங்காரம் செய்து கொண்டு இருத்தலே போதுமென்றெண்ணிய மன்னன் இவ்வாறு செய்தான்.

சந்திரன்: அவ்வாறு காலம் தாழ்த்தியதின் காரணம் என்ன?

மோகன: "உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில்."

ஆகையால் அவர்களை விட்டுப் பிரிய மனமில்லாது விடை கொடாமல் காலம் தாழ்த்தினன்.

சந்திரன்: பின்னர் புலவர்கள் யாது செய்தனர்?

மோகன: அவசரப்படுகின்றீர்களே! வேறு எதில் மனம் செலுத்த நினைத்து அவசரப்படுகின்றீர்கள்?

சந்திரன்: வேறெதிலுமில்லை. உன் கதையில்தான்,

மோகன: அந்த எண்ணாயிரம் புலவர்களும் நள்ளிரவில் யாரும் அறியாவண்ணம் நகரைவிட்டுச் சென்று விட்டனர். பொழுது புலர்ந்ததும் மன்னன் புலவர்கள் உறைந்த இடத்தை நாடலானன். புலவர்களைக் காணமல் திகைத்தான். அவர்கள் அமைந்திருந்த ஆசனங்களனைத்தையும் சோதனையிடுவானாயினன். அவ்வாறு சோதனையிடுகையில் அந்தந்த ஆசனத்தின் கீழ் ஒவ்வொரு பாடல் எழுதிவைத்திருக்கக் காண்கின்முன். அவற்றை

எல்லாம் எடுத்து வைகையாற்றில் எறியக் கட்டளையிடு கின்றான்.

சந்திரன்: என்ன? எறியச் சொன்னாரா? ஏன்? என்னமடமை! யாரே இங்ஙனம் செய்வர்? குறைந்த தாகவா இருக்கும். உயர்ந்த பாடல்களாகவன்றோ இருந்திருக்கும். என்னே அம் மன்னனின் அறிவீனம்! பின்னர் யாது நிகழ்ந்தது?

மோகனா: அவ்வாறு எறியக் கட்டளையிட்ட அப்பாக்களனைத்தும் வைகையாற்றில் எறியப்படுகின்றன. அனைத்தும் யாற்றில் அடித்துச் செல்லப்படுகின்றன. ஆனால்...

சந்திரன்: ஆனால் என்ன?

மோகனா: என்னவா? ஆற்றில் எறியப்பட்ட அவ் வெண்ணாயிரம் ஏடுகளுள் நானூறு ஏடுகள் வெள்ளத்தை எதிரேறி கரையை அடைந்தன.

சந்திரன்: என்னவிந்தை! எதிரேறிக் கரையை அடைந்தனவா? ஆச்சரியந்தான்!

மோகனா: நான்தான் முதலிலேயே தெரிவித்தேனே.

சந்திரன்: உம்...பிறகு!

மோகனா: அவ்வாறு எதிரேறி வந்த அந்த நானூறு ஏடுகளையும் மன்னன் கண்ணுற்று அவைகளை மட்டும் ஒருங்கு சேர்த்து தெய்வீகம் பொருந்தியதாக நினைத்து அவைகளை ஒரு நூலாகத் தொகுத்து நாலடியார் என்று வழங்கினான்.

சந்திரன்: பூ! இவ்வளவுதானா! இதன் வரலாறு வேறு வகையில் இருந்திருக்குமென்று எனக்குப் புலப் படுகிறது.

மோகனா: வேறு வகையா? அந்த வகை யாது!

[இதற்குள் பூங்காவினுள் பாம். பாம் என்ற காரின் ஹாரன் சத்தம் கேட்கிறது. சிறிது நேரத்திற்கெல்லாம் அச்சத்தம் காணோம்; காலம் கடந்தமையால் நண்பர் சேகரும், மோகனாவின் சிற்றப்பா சிவானந்தரும் காதலர் களைத் தேடி பூங்காவை நாடி வந்தார்கள், வந்து அவர் களுடைய இனிய உரையாடல்களைக் கேட்டுக்கொண்டு புன் முறுவலுடன் அமர்ந்திருக்கலாயினர்; தோழி வாணி யுடன்.

சந்திரன்; மன்னன் எறிந்த அவ்வெண்ணூயிரம் ஏடு களையும் வெள்ளம் அடித்துச் சென்றபோது அங்கு நீரா டிக் கொண்டிருந்த ஒருவர் அவற்றுள் நானூறு ஏடுகளை எடுத்து வந்திருக்கக்கூடும், இதுதான் பொருத்தமாக எனக்குத் தோன்றுகிறது,

[மோகனு கைகொட்டி நகைத்தாள். மற்றொரு பக்கத்தில் உட்கார்ந்து இதைக்கேட்ட மூவரும் கை கொட்டி நகைத்தனர்.]

சந்திரன்: ஏன் கைகொட்டி சிரிக்கிறீர்கள்? திருக் குறளின் தெய்வீகத் தன்மை நாலடியாரினும் இளைத்து விட்டதா? நாலடியாருக்குக் கூறிய தெய்விக வரலாறு போல் திருக்குறளுக்கு இல்லையென்று எண்ணிவிடா தீர்கள். வள்ளுவர் தம் நூலை அரங்கேற்ற மதுரைக்கு எடுத்துச் சென்றார். சங்கப் புலவர்களின் தலைவராய் வீற்றிருந்த நக்கீரர் வள்ளுவரை நோக்கி "நும் தகுதியை யும் நும் நூலின் தகுதியையும் அறிய நீவிர் சங்கப் பலகை யில் அமர்வீராக" என்றார். அவ்வாறே வள்ளுவர் அமர்ந்த போது அத் தெய்விகப் பலகை அவர்க்கும் அவரு டைய நூலுக்கும் இடங்கொடுத்து மற்றையோரைத் தள்ளி விட்டதாம். இதனால் தெய்விக வரலாற்றுத்தன்மை யிலும் திருக்குறள் நாலடியாரினும் முதன்மையுறக் கூடி யதே என்பதில் ஐயமில்லை,

என்று சந்திரன் திருக்குறள் தான் முந்தியது என்று முடிக்கின்றான், மோகனு புன்னகை கொள்கிறாள். பின்னர் அனைவரும் இரவு 10 மணிக்கு இல்லம் திரும்பலா யினர், சேகரும், சந்திரனும் ஒரு காரிலும் வாணி, மோகனு, சிவானந்தம் ஆக மூவரும் மற்றொரு காரிலும் ஏறிக்கொண்டு காற்றாய்ப் பறந்தனர்.

## 7. காதலரின் நான்காம் சந்திப்பு

விடுமுறை நாட்களில் ஒரு நாள் நங்கை மோகனு வர தாமதமாயிற்று. எனவே சந்திரன், கலையுள்ளம் நிறைந்து, அன்புப் புன்முறுவலுடன் பொலிந்து திகழும்

அப்பெண்ணிளங்கொடி மோகனாவின் மோகனச் சிரிப்பினை நினைந்தான். நினைத்தவுடன் தன் கற்பனைக் களஞ்சியத்தில் தோன்றிய கருத்துக்களைக் கொண்டு கவிநயம் தோன்றப் பாடவுந் தொடங்கினான்; பாடல் :

1. மோகனச் சிரிப்படா! அது
முல்லைச் சிரிப்படா! அந்த
முல்லைச் சிரிப்பிலே என்றன்
உள்ளம் திளைக்குதே!

2. மோகனப் பூவடா! அது
முல்லைப் பூவடா! அந்த
முல்லைப் பூவிலே! எங்கும்
பொங்கும் மணமே!

3. காவியச் சோலையில் கான
மயிலென ஆடிடும் அந்த
அழகியின் ஆட்டமே! இந்த
அவனியை ஆட்டுமே.

4. வாராய் வாராய் நீ என்று
வையம் அழைக்குதே வந்து
செயல்தான் புரிவாயோ! யன்றிச்
சிட்டாய்த் திரிவாயோ!

5. ஜெகமே யாடிடும் இந்த
மனமே நாடிடும் நாட
மாபெருஞ் செயல்கள் செய்வோம்
மாநிலம் மகிழவே!

பாடலைத் தன்னிசைக்கேற்ப அமைத்து அழகு வீசும் அவ்விளம் பூங்காவிலே, அதில் உள்ள பளிங்கு மேடையிலே அமர்ந்த வண்ணம் பாடினான். சந்திரனை நாடிவந்த மோகனா அவன் இன்னிசைப் பாடலை அருகில் இருந்த மரத்தின் மறைவில் நின்று கேட்கலானாள். பாடல் முடித்த சந்திரன் இன்னும் மோகனா வரவில்லையே என்று

இங்கு மங்கும் ஆத்திரத்துடன் நோக்குகையில், மோகனு நகைத்த வண்ணமாய் ஓடி வந்தணையலுற்றுள். இருவரும் ஈருடலில் ஓருயிராகத் திகழ்ந்தனர் என்ருல் வியப்பொன் றில்லை, சந்திரன் பாடிய அவ்வின்பக் கவிதையைப் புகழ்ந் தவளாய், கொண்டு வந்திருந்த உண்டி முதலியவற்றை உண்பித்து, தாம்பூல மணிந்த பின்னர் மேற்கொண்டு சில இன்ப உரையாடல்களை நிகழ்த்தலாயினர்.

சந்திரன் : கண்ணே ! மோகனு ! உன் கண்களைக் கண்டு அக்குவளை மலர்கள் நாணுகின்றன. அவற்றை நீ பார்த்தாயா ?

மோகனு; கண்ணிற் கணிகலமாகத் திகழும் கட்டழ கரே ! இவ்வுலகில் உம்மைப்போன்றழகு வாய்ந்தவ ருண்டோ ?

சந்திரன் : அழகின் தலைவியே ! உன் விழிக்குக் கலை மான்களின் விழியும் இணையாகுமா ? பொன்னிளங் கொடியே பொற்பாவாய் ! உன் விழிக்கு இணை வேறென் றில்லை; அதற்கு அதுவேதான் நிகர்.

மோகனு: அக் கண்மலரை மலரச்செய்யும் சூரியனே நீர் !

சந்திரன்: கண்ணே ! அழகிய தோகையை விரித் தாடும் பெண் மயிலன்றே நீ,

மோகனு : அன்பரே ! அம்மயில் தன் தோகையை விரித்தாடற்குரிய கருமேகம் அல்லவா தாங்கள்.

சந்திரன் : மோகனு ! வேகமாகக் கரை புரண்டோடி டும், புதிய இன்ப வெள்ளப் பெருக்கெடுத்தோடும் ஆறல் லவா ! நீ.

மோகனு : அப்புதிய இன்ப வெள்ளப் பெருக்கெடுத் தோடிக் கலக்கும் இன்பக் கடலல்லவா தாங்கள்,

சந்திரன் : இளங்குயிலே ! விண்ணில் உள்ள நட்சத் திரங்கள் அனைத்தும் உன் பால் வடியும் முகத்தைக்கண்டு இடம் விட்டு இடம் சுழன்று திரிவதேன் ?

மோகனு : அன்பின் உறைவிடமே ! வானிலுள்ள நட்சத்திரங்களின் முகம் வாட, தங்களின் முகம் பிரகா

சிப்பதால் நாணமுற்று அவைகள் இடம் விட்டு இடம் பெயர்ந்து செல்கின்றன.

சந்திரன் : அன்புக் களஞ்சியமே! வானிலுள்ள சந்திரனையும் நின்னையும் கண்டு, அந்த நட்சத்திர கூட்டங்கள், எது சந்திரன் என்று மயங்கித் திரிவதேன்?

மோகனு : வேறொன்றுமில்லை, உமதொளியைக்கண்டு அவைகளுக்கு ஏற்பட்ட புத்தியற்ற மயக்கந்தான்.

சந்திரன் : புன்னகைப் பொன்மலரே! வானிலுள்ள சந்திரன் நின் முகத்தின் அழகினைக் கண்டு நாணி மேகத்துள் மறைவதைக் காண்.

மோகனு : அப்படியொன்றுமில்லை, இச்சந்திரனைக் கண்டு துணையில்லா அச்சந்திரன் அவ்வாறு மறைகின்ருன்.

சந்திரன் : உலகோர் விரும்பும் வெண்ணிலாவின், நல்ல தகுதிகளைச் சொல்லத்தரமோ? அவ் வெண்ணிலா, வையே தோற்கடிக்கின்ற உன் தகுதிகளையும் சொல்லத் தரமோ?

மோகனு: தலைவரே! நாம் இவ்வாழ்வில் என்றுமே இணைபிரியா அன்றில் பறவைகள் போல் வாழ்வோம்.

இவ்விதம் பலவித உரையாடல்களை நிகழ்த்தி இன்புற்ற காதலர் இருவரும் இல்லம் திரும்பலாயினர்.

## 8. சென்னைக் கடிதமும் காதலர் பிரிவும்

திருச்சியில் இவ்விரு இளங்காதலர்களின்,இன்பக்கனல் கொழுந்து விட்டெரிவதைக் கேள்வியுற்ற சந்திரனின் அத்தையும், மோகனுவின் தாயாருமான அனுசூயாதேவியரும் அவருடைய கணவர் அம்பிகாபதியும் திருச்சிக்கு கடிதம் வரையலாயினா. வரைந்ததின் காரணம் காதலின் கருத்துணராக் கயமைதான், ‘அவனே ஏழை; நம் உதவி பெற்று கல்வி பயில்பவன், திட்டிய மரத்தில் கூர் பாய்வது போலாயிற்று அவன் செயல்’ நம் பெண்ணையா அவன் மணப்பது? நம் செல்வப் பொருள் எங்கே! அவன் நிலையெங்கே! கல்வி பயின்றுள்ளான் ஆனல் அதுவும் நம் உதவியால்தான், யாது பயன் கல்வியால்? பொருள்

திரண்டிடுமா? என்ற கொள்கையை உடையவர்களாய் நங்கை மோகனவிற்கும், இளங்காளை சந்திரனுக்கும் கடிதம் வரையலானார்கள்.

இவ் விஷயத்தைக் கண்ணுற்ற இளங்கோவன் பெருமூச் செறிகின்றான். காரணம் என்னே? தங்கையின் வாழ்வைக் குலைக்கின்றார்கள் எனக் கருதியதால்தான்.

திருச்சியில் இவ்விருகாதலர்களும் கடிதங்கள் கைவரப் பெறுகின்றனர். கடிதச் செய்தி யாதெனின், சந்திரனுக்குக் கல்வி பயின்றுவர உதவியளித்த அத்தை அனுசூயாதேவி மேற்கொண்டு தம்மால் உதவி அளிக்க முடியாதென்று, மறுத்து விட்டார் என்பதும்; மோகன திருச்சியில் கல்வி பயில்வதை நிறுத்திவிட்டுச் சென்னையில் வந்து கல்வி பயில வேண்டும் என்று கூறித்திருந்ததுமேயாகும்.

கடிதம் படித்த சந்திரன் ஒருவாறு தன் மனத்தைச் சரிப்படுத்திக் கொண்டு தன் நண்பனிடம் அக்கடிதத்தை நீட்டலானான். சேகர் "நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற், கொட்பின்றி ஒல்லும் வாயூன்று நிலை" என்றபடி தானே தன் தந்தையின் உதவி கொண்டு சந்திரனைப் படிக்க வைக்க முனைகின்றான். அங்ஙனமே செய்வதாகவும் வாக்குறுதி கொடுக்கின்றான். சந்திரன் ஒருவாறு ஆறுதலடைந்து அது வரையில் உதவிய அத்தைக்குக் கடிதம் வரைந்து நன்றி செலுத்தினான்.

அன்று மாலை ஆறு மணி இருக்கலாம். மோகன மனக் கவலை அதிகரிக்க, முகம் மாறுபட, பெரு மூச்செறிந்து, கண்ணீர் தாரை தாரையாக கண்களில் இருந்து கொட்ட, கம்மிய குரலுடன் விம்மி, விம்மி யழுது சந்திப்பு இடமாகிய பளிங்கு மேடையின்மேல் உட்கார்ந்த வண்ணம் நீரோடையில் உள்ள அல்லித்தாமரைப் பூக்களை நோக்கிய வண்ணம் அமர்ந்திருக்கின்றாள். தோழி வாணி ஏதேதோ சிற்சில ஆறுதல் மொழிகளைக் கூறித் தேற்றிக் கொண்டிருக்கின்றாள். அதே சமயத்தில் அப்பூங்காவிற்கு உலவ வந்த சந்திரனும் சேகரனும் இக்காட்சியைக் கண்டு திடுக்கிடுகின்றனர். சேகரன் குறிப்பறிந்து வேறோர்

பக்கம் நாடலானான். சந்திரன் மௌனமாக மோகனாவின் பக்கலில் அமர்ந்து மோகனாவின் துயரத்திற்கு யாது காரணம் என்றறியக் கருதியவனாய் மோகனாவைக் கேட்கின்றான். மோகனா மௌனம் சாதிக்கின்றாள். தோழி வாணி உள்ளதைச் சொல்லி விடுகின்றாள்.

உடனே ஒருவித மாறுதல் சந்திரனின் முகத்தில் உண்டாகிறது. மோகனா மேலும் மேலும் தேம்பியழுதாள். சந்திரன் அக்கடிதத்தை வாங்கிக் கண்ணுறுகையில் அத்தையின் விலாசத்தை ஆங்குக் காண்கின்றான். இயற்கையின் எழிலை வாயார வாழ்த்துகின்றான். ஏன்?

பிரித்தனர் எனக் கருதியா? அன்று! அன்று! தனக்கு வாய்த்த, தன் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட அக்காரிகையே தன் அத்தை மகளாக இருக்கக்கண்டு ஒரு பக்கம் அளவில்லா மகிழ்ச்சியடைகின்றான். ஒரு பக்கம் காதலி பிரிகின்றாளே என்ற ஆராத்துயரம் அடைகின்றான். இங்ஙனம். சந்திரனின் முகத்தோற்றம் ஆச்சரியப் படத்தக்கதாயும், ஆராத்துயரம் அடையத் தக்கதாயும் மாறி மாறிக் காணப்படுகின்றது.

இதைக் கண்ணுற்ற நண்பன் சேகர் அங்கே தோன்றுகின்றான். சந்திரன் கடிதத்தை நீட்டுகின்றான் சேகரிடம். சேகர் கடிதத்தைக் கண்டு மனத்துயரடைகிறான். காரணம் அதுவரை அவர்களுடன் ஒன்று சேர்ந்து உதவி பல செய்து கோடை விடுமுறை நாட்களில் நாட்டின் முன்னேற்றத்திற்காக உழைத்து வந்த மோகனா, நண்பனின் மனத்தைக் கொள்ளை கொண்ட காரிகை பிரியப்போகின்றாளே என்றுதான் கலக்கமடைந்தான். என் செய்வார்கள் இளங்காதலர்கள். எல்லாம் இயற்கையின் திருவிளையாடல் தானே! அவ்வியற்கையின் செயலையும், முயற்சியின் பயனால் வெற்றி பெறலாம் என்றால் சில கல் நெஞ்சக் கூட்டத்தார்கள் பணப் பேராசையால் குறுக்கே நின்று இன்பக் கடலைத் துன்பக்கடலாக, வெற்றி பெறாமல் தடுத்து விடுகின்றனர் என்றால் அதுவும் அந்த இயற்கையின் திருவிளையாடல்தான்.

பூங்காவில் எப்பளிங்கு மேடையிலே சந்திரனைக் கண்ணாரக் கண்டு, ஆனந்தக் கண்ணீர் விட்டாளோ,

அதே பூங்காவிலேயே, அந்நீரோடையருகிலேயே, அப் புன்னை மரத்தினடியிலேயே, அப்பளிங்கு மேடையிலேயே அளவில்லாத் துன்ப ஊற்று நீரைத் தாரை தாரையாகக் கொட்டினாள். சந்திரனும் கண்ணீர் உகுத்தனன்.

எந்தப் பளிங்கு மேடையில் இன்பக்கனியை புசித் தார்களோ, அந்தப் பளிங்கு மேடையிலேயே துன்பக்கனி யைப் புசிக்கலானார்கள். எந்தச் சந்திரனின் குளிர்ந்த கிரணங்களின் ஒளியைப் புகழ்ந்தார்களோ அந்தச் சந்திர னின் கிரணங்களே தீயாய்ச்சுட கண்ணீர் விடலானார்கள். எந்த வாயால் இயற்கையின் அழகையும், எழிலையும், செயற்கையின் தோற்றத்தையும் புகழ்ந்தார்களோ, அதே வாயால் இன்று அவைகள் கொடுமை செய்வதைப் போன்றுளதென்று இகழ்ந்தார்கள். இவ்வாறு இவ்விரு இளங்காதலர்களும் பிதற்றிக் கொண்டிருக்க, வாணியும் சேகரும் தேற்றிக் கொண்டிருக்க ஆங்கே தோன்றுகின்றார் ஒரு சான்றோர். வேறு யாருமில்லை, மோகனாவின் சிற்றப்பா தான். அச்சான்றோர், இவ்விரு காதலர்களும் மனமுருகு வதைக் கண்டு சகியாதவராய் அவர்களைத் தேற்றி, அருகிற் சென்று எப்படியும் மோகனாவைச் சந்திரனுக்கே மணம் புரிவிப்பதாக வாக்குறுதி யளிக்கின்றார். இவ்வாக்குறுதி யைக் கேட்ட காதலர்கள் ஒருவாறு தேறினர். சேகர் மகிழ்ந்தான். வாணி சிற்றப்பாவின் அருங்குணத்தைப் போற்றலானாள். அப்பொழுது சிற்றப்பா சிவானந்தரும் சேகரும் அவசர நிமித்தமாக இல்லம் செல்கின்றனர். பின்னர் இரு காதலர்களும் தோழிவாணியும் பிரிவுத்துய ரால் உருகிப்பாடுகின்றனர் :

## வாழ்விலே கலக்கம்

மோகனா: அன்பான வாழ்விலே அன்றாட வாழ்விலே
அகமகிழும் இன்பம் வந்து சேருமோ ;
[அன்றித்
துன்புறுத்தும் இன்னல் வந்து நேருமோ!

வாணி: அலைமோதும் நெஞ்சமே அன்பான நெஞ்
[சமே !
அலைபோலும் மாறிடும் அவ்வின்ப துன்பமே.

அலைமோதும் நெஞ்சமே அன்பான நெஞ்
[சமே!
அலைபோலும் மாறிடும் அவ்வின்ப துன்பமே!

இன்னலின்பம் நாளுமே இருளுமொளியும் போலவே
இகவாழ்வில் மாறிவந்து போகுமே; என்றும்
இன்பமாக வாழ்ந்திடுதல் ஆகுமோ!

மோகனு: பாலமிர்தம் கொண்டுமே பருகிடுங் கணத்
[திலே
பலசூழ்ச்சிக் காரர்தொல்லை நேருமோ;
[முடிவில்
பாலமிர்தம் பருகாது போகுமோ!

சந்திரன்: அன்பான அமிர்தமே அலைபாயும் நெஞ்
[சமே
அகில வாழ்வில் சந்தேகங் கூடுமோ; அந்தப்
பாலமிர்தம் பருகாமற் போவமோ!

மோகனு: வஞ்சனை பொய் சூதுவாது வாய்ந்த உலகிலே
வம்புக்காரர் பலர் செய்யும் வாதையினாலே
நயவஞ்சக நாடகத்திரு மணிகளாலே
பயம் சேர்ந்த பலவின்னல் படர்வதாலே
இன்ப வாழ்வு இன்னலாக ஆகுமோ; மற்றும்
இன்பக் கனி யெட்டாமல் போகுமோ!

சந்திரன்: பொன்னான வாழ்விலே புதிரான வாழ்விலே
பொன்னே நாமின்பமாக வாழ்குவோம்;
எதிரும்
தன்னலக் காரர் சூழ்ச்சி தாழ்த்துவோம்!

மோகனு: இன்னல் பல இயைந்து வந்தால்
சந்திரன்: எதிர்த்து ஓட்டி இடித்திடுவோம்,
மோகனு: வஞ்சனை பொய் வழியில் வந்தால்
சந்திரன்: பஞ்செனவே பறக்கச் செய்வோம்.
மோகனு: சிரிக்கப்பேசி சிதைக்க வந்தால்
சந்திரன்: பல்லைக் கடித்துப் பதைக்கச் செய்வோம்!
மோகனு: இன்னல் ஓட இனிதே வாழ

சந்திரன் : இறைவனை நாம் இறைஞ்சிடுவோம்.

எல்லோரும் :—

எல்லாம் வல்ல தேவா! இந்நாளில் எங்களைக் காவாய்
பொல்லார் தம்மையோட்டி, புகழோடு நாங்கள் வாழ
நல்லார் துணையை நாடி நலமாக நாங்கள் வாழ
எல்லாம் வல்ல தேவா! இந்நாளில் எங்களைக் காவாய்

மோகனா, காதலன் சந்திரனிடம் ஆற்றொணுத் துயரத்துடன் விடைபெற்று இல்லம் திரும்பலானாள். சந்திரன் எண்ண அலைகடலுடன் போராடிய வண்ணம் தோழனுடைய இல்லத்திற்குத் திரும்பலானான்.

மறுநாள் காலை மோகனா தோழி வாணியுடனும் சிற்றப்பாவுடனும் சென்னைக்குப் புறப்பட்டாள். புறப்பட்டவள் காதலனை ஒரு முறை பார்த்துச் செல்லலாமென்று, சந்திரன் இல்லத்தை நாடிச் செல்கின்றாள். சந்திரனை ஒரு முறை கண் குளிரக்கண்டு, அவனின் கையில் தன் கை மோதிரத்தை அணிவித்து, சென்றுவர கம்மிய குரலில் விடை கேட்கலானாள். பொங்கியெழுந்த தனது ஆத்திரத்தை அடக்கிய சந்திரன் விடைகொடுத்தனுப்பினான். மோகனா சென்னையை நோக்கிப் புகைவண்டியில் புறப்பட்டாள். அன்று மாலையில் தன் சொந்த வீட்டில் நுழைகின்றாள். தாயும், தந்தையும் எதிர்கொண்டழைக்கின்றனர். இன்பகரமாக பி. ஏ. பட்டம் வாங்கியதைக் குறித்துச் சிறிது பொழுது அளவளாவினர் சந்திரனின் விஷயத்தை அறியாதவர்கள் போல் இருந்து விடுகின்றனர். இளங்கோவன் தங்கையைக் கண்டு ஆனந்தமும் ஆத்திரமும் அடையலுற்றான். பின் ஒருவாறு தன் தங்கையைத் தேற்றலானான். எவ்வாறேனும் சந்திரனுக்கே திருமணம் செய்து வைப்பதாக அவனும் வாக்குறுதி செய்கிறான். தங்கை மகிழ்கிறாள். கடிதப் போக்கு வரவு வசதி இளங்கோவனே, பெற்றோர் அறியாவண்ணம் நிகழ்த்த உதவி புரிகின்றான்; தங்கை மோகனாவிற்கு.

சென்னையில் உள்ள ஒரு கல்லூரியில் சேர்ந்து மேற்கொண்டு கல்வி பயிலத் தொடங்கினாள் மோகனா! திருச்சியில் மேற்கொண்டு கல்வி பயில உதவி புரிகின்றான் சேகர்; நண்பர் சந்திரனுக்கு. சந்திரகுமாருக்கும் இளங்கன்

னிகை மோகனுவிற்கும், கடிதப் போக்கு வரவு இன்பகர மாக நடந்துவருகின்றது.

காலச் சக்கரம் ஓடிக்கொண்டேயிருக்கின்றது. சேக ரும், சந்திரனும் இணைபிரியா நண்பர்களாகவே திகழ்ந்து, கல்வியிலும் ஊக்கம் வளர, முதன்மையாகப் பயில லானார்கள். காலமுங் கடந்தது. இருவரும் பி. ஏ. பி எல் தேர்தலில் வெற்றி பெறுகின்றனர் சென்னையிலும் மோகனு பி. ஏ. பி. டி தேர்தலில் வெற்றி பெறுகின்றுள். அனைவரும் ஆனந்தக் கடலில் ஆழ்கின்றனர்.

இணைபிரியா சகோதரர்கள் கோவையிலிருந்து கடிதம் வரப் பெறுகின்றனர். கல்வி இம்மட்டில் போதுமெனவும் மேற்கொண்டு மில் தொழில் நடாத்த நீங்களே பொறுப்பு ஏற்றுக்கொள்ளுதல் வேண்டும் என்றும் வரையப்பட்டி ருந்தது. சந்திரனும், சேகரனும் கோவைக்குப் புறப்பட் டனர். கடிதம் ஒன்று மோகனுவும் கிடைக்கப் பெறு கின்றுள், அக்கடிதம் தாயார் அனுசூயாதேவி கையில் எப் படியோ சிக்கி விடுகிறது. அதுமுதல் கடிதப் போக்கு வரத்துகூட நிகழாமல் தடுக்கப்படுகிறது. பாதுகாப்பு அதிகமாகிறது மோகனுவிற்கு. என் செய்வாள் பாவம். அண்ணன் கூறும் இனிய வார்த்தைகளினுல் சிறிது உள் ளம் தெளிந்தவளாய் உறைகின்றுள் மோகனு.

## 9. கோவையில் நண்பர்களும் கிண்டாமணியும்

கோவையில் இருநண்பர்களும் தாங்களே பொறுப்பை ஏற்று சிறப்பாக மில் தொழிலை நடத்தலானுர்கள்.

" தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
தூங்காது செய்யும் வினை " என்ற

வள்ளுவர் வாக்கின்படி அவ்வப்பொழுது செய்யவேண்டிய வற்றை அப்பொழுதைக் கப்பொழுதே செய்து முடித்தும் தொழிலாளர்கள் தொழிலில் நாட்டங்கொண்டு சிறப்பா கப் பணியாற்றும் வண்ணம் ஊக்கியும் வந்தனர். செய் தற்கரிய உதவிகள் பல செய்து வந்ததால், தொழிலாளர்

கள் மேலும், மேலும் ஊக்கத்துடன் தொழில் வளரப் பாடுபட்டனர், ஆகவே மில் தொழில் இலாபகரமாக நடந்து வந்தது.

"வினையால் வினையாக்கிக் கோடல்; நனைகவுள்
யானையால் யானையாத் தற்று" என்றபடி

தொழிலைச் சிறப்பாக நடாத்தி வந்ததன்றி, மக்கட்கு வேண்டிய உதவிகள் பல அவ்வப்பொழுது செய்து வந்தனர்; நாட்டின் நலனுக்காக அரும்பாடு பட்டனர். நாட்களை வீணாக்காமல் ஒவ்வொரு கிராமமாகச் சென்று, மக்களுக்கு வேண்டியதை ஈந்தும் மக்களை நாட்டின் நன்னிலையைக் கருதி உழைக்க முன்வரும்படி தூண்டியும் வந்தனர், இங்ஙனம் எத்தனையோ செயல்கள் நிகழ்த்தலாயினர், கிராமங்களில் பள்ளிகளும், அறக்கூழ்ச் சாலைகளும் நிறுவினர், திருக்குறட் சொற்பொழிவுகள் பல நிகழ்த்தலாயினர். இத்தொண்டர்களின் புகழ் நாடெங்கும் பரவியது.

மில் தொழிலும் நாளுக்கு நாள் வளர்பிறை போல் வளர்ந்தது. தொழிலாளர்கள் இத்தொழிற்சாலையையே நாடலானார்கள். அதே நகரில் மற்றோர் தொழிற்சாலையும் இருந்தது. அதன் முதலாளி கல் நெஞ்சம் படைத்தவன். அவன் கப்பல் கொள்ளைக் கூட்டமொன்றைத் திரட்டி அவர்கள் மூலம் பெரும் பொருள பெற்று வாழ்ந்து வருபவன். தொழிலாளர்களை வதைத்து வேலை வாங்கும் அரக்கன், மக்கள் பட்டினியால் சாகப் பதைக்காமல் பார்த்திருப்பவன். எனவே தொழிலாளர்கள் அனைவரும் தமிழப்பன் மில் தொழிற்சாலைக்குச் சென்று விடுகின்றனர். மில் தொழில் நடாத்துவதற்காகத் தவிக்கலானான் அக்கள்வர் தலைவன் கிண்டாமணி. மில்தொழில் நிறுத்தப்படுகின்றது. கிண்டாமணி சந்திரன் மீதும் அவன் நண்பன் சேகர்மீதும் பொறாமையும் கோபமும் அடைகிறான். அவர்களிருவரையும் எப்படியாவது தொலைத்து விடவேண்டுமென்று திட்டம் போடுகிறான். சிற்சில கயவர்கள் பணத்திற்காக மாபெரும் பாவம் செய்யவும் துணிவர் அல்லவா? அந்நகர் வழக்கறிஞன் நீலகண்டன் என்பவன் ஒரு பணப்பேய்? அந்நகர் சப் இன்ஸ்பெக்டர் ஒரு லஞ்சப் பேய்: பெயர் கஞ்சன் என்பதாகும். இவர்களிருவரையும் தன் வயப்

படுத்திக் கொள்கின்றான் கிண்டாமணி. இக் கிண்டாமணி நெற்றி வியர்வை நிலத்தில் விழப் பாடுபட்டவனா? எவனோ கொண்டுவந்து கொட்டுகிறான். அதைத் தன் இஷ்டப்படி தீய வழிகளில் செலவு செய்ய எவரைக் கேட்கவேண்டும்?

இங்ஙனம், கள்வர் கூட்டம், வக்கீல், இன்ஸ்பெக்டர் முதலியவர்கள் கிண்டாமணி கையில் நின்று தீவிரமாகத் தொழிலாற்றுகின்றனர். சேகரையும், சந்திரனையும் ஒழித்துக் கட்டுவதற்காக அக்கள்வர் கூட்டம் உலவிக் கொண்டிருந்ததுமன்றி, எத்தனையோ இன்னல்களையும் இழைத்துவந்தது. சேகரும், சந்திரனும் இவைகளையெல்லாம் பொருட்படுத்தாமல்.

"மடுத்த வாயெல்லாம் பகடன்னா னுற்ற
இடுக்கண் இடற்பா டுடைத்து" என்ற

நிலையில் பொறுத்துத் தங்கள் வினையிலேயே கண்ணுயினர். என்றாலும், எங்குச் சென்றாலும் பாதுகாப்பிற்காக இருவரும் தங்கள், தங்கள் கைத் துப்பாக்கிகளுடன் செல்லவேண்டியதாயிற்று. சேகரன் எப்பொழுதும் இயற்கையின் அழகை ஆங்காங்கு படம் பிடிப்பதற்காக ஒரு புகைப்படக் கருவியையும் தோளில் மாட்டிய வண்ணமாகத்திரிந்து வருவான்.

கல் நெஞ்சக் கூட்டத் தலைவன் கிண்டாமணி இழைத்து வந்த இன்னல்களையெல்லாம் தாங்க முடியாமல் போலிஸில் மனு செய்வதற்காகப் போலிஸ் நிலையத்தை அடைகின்றான் சேகர். ஆங்கே நீலகண்ட வக்கீல், இன்ஸ்பெக்டர் கஞ்சன், கிண்டாமணி இவர்களைத் தவிர வேறு எவருமில்லை. ஏதேதோ சிற்சில ரகசியங்கள் உள்ளே பேசுவதாகத் தென்பட்டது. சேகர் அவர்கள் மூவரும் தன்னை அறிந்து கொள்ளாவண்ணம் நின்று, அவர்கள் மூவரையும் தன் புகைப்படக் கருவியினால் படம் பிடித்துக் கொள்கிறான் நுட்பமாக. ஏற்கனவே சேகருக்கு இன்ஸ்பெக்டர் கஞ்சன்மேல் சந்தேகந்தான். காரணம் சில மனுக்களை நிராகரித்து விட்டிருக்கிறான்; அந்தக் கஞ்சன். அவ்வக்கீலும் அதற்குமுன் நன்றாக உறவாடியவன் சின்னாட்களாக சேகரைக் காணுமிடமெல்லாம் சிறிது மனம்

மாறுபாடாக நடந்துகொண்டான். இம் மூவரும் அமர்ந்து ரகசியம் பேசியதைக் காண்டலும், கேட்கவா வேண்டும் சேகரின் சந்தேகத்திற்கு, இம்மூவரும் தங்களுடைய உயிர்ப் பகைவர்கள் என்று யோசித்துவிட்டான். இதனையே சந்திரனிடமும் தெரிவிக்கலானன். அது முதற்கொண்டு, தங்கள் தொழிலே மிகவும் கவனமாக, மேலும் மேலும் தொழிலாளர்களை ஊக்கிய வண்ணம் நடத்தலானர்கள்.

ஒருநாள் ஆறுமணி இருக்கும் நகரை யடுத்து ஒருகாடு. அக்காட்டை யடுத்து ஓங்கி உயர்ந்த மலையொன்று. அம்மலையில் பல குகைகள் உண்டு. அம்மலைச்சாரலில் உட்கார்ந்து ஏதோ யோசனையில் ஆழ்ந்து அமர்ந்துள்ளனர் சேகரும், சந்திரனும். அவர்கள் அமர்ந்திருந்த இடத்திற்கருகில் பெரிய கல்லொன்றிருந்தது. கல்லுக்கெதிரில் ஒரு வழி. ஒருவர்க்கும் தெரியாவண்ணம் மரங்களடர்ந்திருந்தது.

சிறிது நேரத்திற்கெல்லாம் டக், டக், என்று குதிரைகளின் காலடிச் சத்தம் கேட்கின்றது. அதனுடன் ஒரு குரல் அபயம், அபயம்! என்று கத்துவதும் கேட்கின்றது. கல் மறைவில் அமர்ந்திருந்த நண்பர்களிருவரும் யாதென்று அங்கிருந்த படியே கண்ணுறுகின்றனர். சுமார் இருபது குதிரைகள் காற்றுய்ப்பறக்கின்றன;ஒருகுகையை நோக்கி. கள்வர் தலைவனைச் செல்கின்ருன் அதே கிண்டாமணி. இரண்டு ஆடவர்கள் குதிரையின் மீதிருந்து இறக்கப்படுகின்றனர். ஏராளமான பொருட்கள் இறக்கிக் குகைக்குள் எடுத்துச் செல்லப்படுகின்றன. அக்குகை அது வரையில் ஒருவருக்குமே தெரியாது. நண்பர்கள் இருவரும் மறைவாகவே சென்று நிகழ்ச்சிகளைப் படம் பிடித்துக் கொண்டனர். பின்னர் குகையின் அருகாமையில் ஓங்கி வளர்ந்திருந்த மரத்தின் மேல் ஏறி உட்கார்ந்து கொண்டு கீழே என்ன நிகழ்கின்றது என்பதைக் கவனிக்கலாயினர்.

இரு ஆடவர்கள் கட்டுண்டு கிடக்கின்றனர். அவர்களைச் சுற்றி நான்கு வாளேந்திய தடியன்கள் நிற்கலாயினர். இதையும் படம் பிடித்தான் சேகர். உட்

சென்ற கள்வர்கள் பொருட்களைக் குகையின் ஓர் அறையுள் வைத்துப் பூட்டினர். சிறிது நேரம் களியாட்டத்தில் ஆழ்ந்தபின், அவ்விரு ஆடவர்களையும் கொலை செய்யத் தீர் மானித்தனர். தலைவன் கிண்டாமணியின் வாயினின்று "ஆகட்டும்" என்ற சொல் அகங்காரமாகப் பிறக்கின்றது.

உடனே அவ்விரு ஆடவர்களையும் எடுத்துச் செல் கின்றனர் பக்கத்திலிருந்த கொலைக்களத்திற்கு. உள்ளம் துடித்தனர் இரு நண்பர்களும். கைத் துப்பாக்கிகளுடன் அவர்கள் சென்ற விடத்தை நோக்கிய வண்ணமிருந்தனர். அவ்விரு ஆடவர்களும் துடிதுடிக்க வாளை ஓங்குகின்றனர். உடனே அவ்விரு காளைகளும் வெட்டுபவர்களை நோக்கிச் சுட்டனர். ஐயோ! கிண்டாமணி! கிண்டாமணி என்ற கூக்குரலுடன் கீழே சாய்கின்றனர்.

அச்சமயத்தில் சென்னையிலிருந்து கோவைக்குச் சென்று கொண்டிருந்த ரிசர்வ் போலிஸ் படையொன்று அவ்விடத்தின் அருகே சென்று கொண்டிருந்தது. வெடி குண்டு சத்தத்தைக் கேட்டதும் அவ்விடத்தை நோக்கிய வண்ணம் போலிஸ் வண்டி காற்ருய் விரைந்தது. அங் கிருந்த கள்வர்கள் திரண்டு ஓடி வந்தனர். இருவரும் சுட்டவண்ணமிருந்தனர். கள்வர்களில் பலர் மாண்டனர். பலர் மரத்தின் மேல் ஏறலாயினர்.

அச்சமயம் போலீஸ் வண்டி பூம்! பூம்! என்ற சத்தத் துடன் காட்சியளிக்கின்றது. திருடர்கள் அனைவரும் காற்ருய்ப் பறந்தனர். கிண்டாமணியும் விழுந்தடித்து ஓடிக் குகையினுள் நுழைந்தான். பின்னர் அவன் எங்குச் சென்ருன் என்பதே தெரியவில்லை. சில கள்வர்கள் போலீ ஸாரால் பிடிக்கப்பட்டனர். மரத்தின் மேலேறியவர் குதித்தவுடன் பிடிக்கப்பட்டனர். இங்ஙனம் தெய்வச் செயலாகஅவ்விரு நண்பர்களும் காப்பாற்றப்படுகின்றனர். கீழே கிடந்த இரு ஆடவர்களையும் கட்டவிழ்த்து விட் டனர். அவர்களைக் காப்பாற்றிய சேகரையும் சந்திரனை யும் போலிஸார் புகழ்ந்தனர். சமயத்தில் வந்து உதவிய போலிசுக்கு நன்றி செலுத்தினர் நால்வரும்.

பின்னர் போலிஸார் கள்வர்கள் மறைத்து வைத் திருந்த பொருட்களை ஆராய வேண்டி குகையினுள்

நுழைந்தனர். உள்ளே பிண நாற்றம். கொலை செய்யப் பட்ட பிணங்கள் ஒரு பக்கம் கிடந்தன. மேலும் சென்று குகையின் ஒரு கதவையுடைத்து உள்ளே பார்த் தனர். என்ன கண் கொள்ளாக் காட்சி! ஏராளமான நாணயங்கள், நகைகள்; பட்டாடைகள் முதலியன குவியல், குவியலாகக் கிடந்தன.

அச் செல்வத்தைக் கண்ட சேகர், சந்திரன், போலி ஸார் அனைவரும் ஆச்சரியப்பட்டனர். ஆங்கிருந்த செல் வங்களனைத்தையும், போலிஸ் மோட்டாரில் ஏற்றிக் கொண்டு சர்க்கார் காரியலாயத்திற்குச் சென்றனர். சென்னையில் அப்போதிருந்த பிரதம மந்திரி திருவாளர் தொட்டியம், குமாரசாமி ரெட்டியார் அவர்கள். சந்திரன், சேகரன், இவர்களின் தீரச் செயல்களைப் புகழ்ந்து பாராட்டி வீரப் பதக்கங்களும் பரிசுகளும் வழங்கினூர். ஆபத்தினின்றும் தப்பிய அவ்விரு ஆடவர்கள கருப்பண்ண னும், முருகனும் ஆவர். அவர்களிடமிருந்து கிண்டாமணி பறித்துச் சென்ற பொருட்களனைத்தையும் திருப்பிக் கொடுத்து விடும்படி பிரதம மந்திரி உத்தரவிட்டார்.

அப்பொழுது அவ்விரு நண்பர்களும் பிரதம மந்திரி யிடம் கிண்டாமணி செய்து வரும் அட்டூழியங்கள் அனைத் தையும் விளக்கிக் கூறிப் பிடித்து வைத்திருந்த புகைப் படங்களனைத்தையும் காண்பித்தனர். அவைகளைப் பார்த்த பிரதம மந்திரி தக்க சமயத்தில் தான் உதவிக்கு வருவதாகவும், தற்காப்பிற்காக கோவையில் ரிசர்வ் போலீஸ் நிறுத்துவதாகவும், தமிழப்பன் மில் தொழிற் சாலையில் போலீஸ் காவல் வைக்கவும் உத்தரவிடுவதாக வும் வாக்குறுதியளித்தார்; அக் கருணைமூர்த்தியான பிரதம மந்திரி. அன்றியும் அபாய ஒலி எழுப்பும் கருவி ஒன்றையும் சேகரனுக்கு அளித்தார். அக் கருவியை அழுத்தினல் சுமார் எட்டு மைல் தூரம் வரையில் அபாய ஒலி கேட்கப் படும். அக்கருவியை அடையப்பெற்ற சந்திரனும், சேகரும் தக்க பாதுகாப்புடன் கோவை திரும்பினர்.

கருப்பண்ணனும் முருகனும் த... த் தினின்றும் காப்பாற்றிய அவ்வீர... றி யைச் செலுத்தினர். தங்கள் பொ... து





நலப் பணிக்காக வழங்கிச் சென்றனர். கோவையை யடுத்துள்ள கருப்பண்ணனும் முருகனும் ஒரு குக் கிராமத்தில் சிறந்த செல்வந்தர்களாகத் திகழ்ந்து அவ்வப்பொழுது சேகருக்கும், சந்திரனுக்கும் வேண்டிய உதவிகள் பல செய்து வரலாயினர்.

கள்வர் கூட்டத்துடன் கள்வர் தலைவனைச் சென்ற கிண்டாமணி, போலீஸ் வரக் கண்டு திடுக்கிட்டுக் குகையில் நுழைந்தான் என்று முன்பு கூறினேமல்லவா? அவன் அக் குகையிலிருந்து செல்லும் சுரங்கத்தின் வழியாக ஓடித் தன் கொல்லைப் புறத்தில் உள்ள மாளிகையை அடைந்தான். அச் சுரங்கம், கொல்லைப்புற மாளிகைக்கும், அம்மலைக்கும், ஏற்கெனவே அமைக்கப்பட்டிருந்தது.

இவ்வாறு சுரங்கத்தின் வழியாகச் சென்றவன் போலீஸார் பொருளனைத்தையும் எடுத்துச் சென்றதையறிந்து, இதற்கெல்லாம் காரணம் தன் ஜென்மப் பகைவர்களான அவ்விரு காளைகளே என்பதை உணர்ந்தான். அவ்விருவரையும் தொலைக்க முடிவு செய்து தன் பணத்திமிரினால் ஆட்களை வைத்து அடிக்கத் தயாராயினன்.

## 10. கிண்டாமணியின் சூழ்ச்சி

கோவையை அடுத்த குக் கிராமத்தில் வாழ்ந்து வந்த கருப்பண்ணனும் முருகனும் சேகருக்குக் கடிதம் ஒன்று வரைந்தனர். அதில் தங்களிடம் பருத்தி ஏராளமாக உளதென்றும், வந்தால் நட்பினைக் கருதி குறைந்த விலைக்குத் தரப்படுமென்றும் பார்த்து நெடு நாட்கள் ஆன காரணத்தினால் நண்பன் சந்திரனுடன் வந்து இரண்டு நாட்கள் தங்கிச் செல்லவேண்டுமென்றும் வரையப்பட்டு இருந்தது.

தொழிற்சாலைக்குப் பருத்தியின்றி வருந்திய தோழர்கள் கடிதம் கண்டு களித்தனர். மறுநாட் காலையில் காரில் புறப்பட்டுப் போயினர். இவர்கள் செல்லும் செய்தியை அறிந்த கொடுங்கண்ணன் கிண்டாமணி இரு ஆட்களை முன் கூட்டியே அனுப்பிச் சமயம் நேர்ந்தால் தாக்கத் திட்டமிட்டிருந்தான். பணப் பேராசையால் அவ்விரு கீழ் மக்களும் அவ்வாறே சென்றிருந்தனர்.

நண்பர்கள் இருவரும் அக் குக் கிராமத்தை அடை கின்றர். சகோதரர்களான கருப்பண்ணனும், முருகனும் எதிர் கொண்டழைக்கின்றனர். பின்னர் ஆபத்துக் காலத் தில் உதவிய அவ்விரு நண்பர்கட்கும் அளவில்லா நன்றியை, வணக்கத்தைச் செலுத்தினர். விருந்து சிறப்பாக நடை பெறலாயிற்று.

மறுநாள் மாலை ஐந்து மணிக்குச் சேகரும், சந்திரனும் ஊரைச் சுற்றிப்பார்க்கப் புறப்பட்டனர். முருகன் அவர் களுடன் சென்முன். கருப்பண்ணன் பிறகு வருவதாகக் கூறியனுப்பினன்.

மாலைக்காலம்; இனிய தென்றல் காற்று வீசிக்கொண் டிருந்தது. வாழைத் தோப்பிலிருந்த மரங்கள் காற்றில் இலைகளை அசைத்துக் கொண்டிருந்தமை இவர்களை அன் பாக வாருங்கள்! வாருங்கள் என்றழைப்பது போன்றிருந் தது, அங்கு ஒரு குளம். அதை சுற்றிப் பலவகை மரங்கள் இருந்தன. அம்மரங்களில் இருந்த குயில் தன் இனிமை வாய்ந்த குரலில் பாடியது. அங்கு வசித்த மயிலொன்று தன் அழகு வாய்ந்த தோகையை விரித்துப் பல்லோர்காண ஆடிற்று, குளக்கரையில் படர்ந்திருந்த முல்லைக்கொடிகள் நீலவானத்தில் நட்சத்திரங்களைப் போலப் பூத்திருந்தன, வண்டுகள் அடிக்கடி ரிங்காரமிட்டுத் தேனையுண்ணப் பூக் களில் அமர்ந்து, அமர்ந்து எழுந்தன. புள்ளினங்கள் தங் கள் இனத்துடன் கூடிக் குலாவிக்கொண்டிருந்தன. இக் காட்சிகள் அனைத்தையும் கண்ட கோவை நண்பர்கள் வியந்தனர். ஆங்கிருந்த ஒரு பாறையின் மீதமர்ந்தனர் சேகரனும், சந்திரனும். முருகன் பக்கத்திலிருந்த நெல் வய லைப் பார்வையிடலானன்.

அவ்வழகிய இயற்கைக் காட்சியின் இடையில் அமர்ந் திருந்த இளங்காதலனுகிய சந்திரன், சேகரை நோக்கி, சேகர்!

"தொடலைக் குறுந்தொடி தந்தாள் மடலொடு
மாலை உழக்குந் துயர்," என்ற வள்ளுவர் வாக்

கின்படி என் மனம் அல்லலுறுகின்றது! என்னுளங்கவர் காரிகையான மோகன, என்னை இம் மாலையில் வருத்து

கின்ருள் ! என் செய்வேன் ? விதியின் செயல் யாதாயிருக்குமோ ?" என்று வருந்தலானுன்.

"தொடிற் சுடினல்லது காமநோய் போல
விடிற் சுடலாற்றுமோ தீ; என்பதற்கு

ஏற்ப நெருப்பு தொட்டால் சுடும் ஆனுல் இக்காதல் நோய் விட்டாலும் சுடும்; குன்றேறி ஒளித்தாலும் சுடும்! குளத்துள் மூழ்கிக் குடைந்தாலும் சுடும். என் மனம் மோகனுவையே நாடுகின்றது. சற்று முன்வரை கருப்பண்ணன் இல்லத்தில்இன்பகரமாகக்காலம் கழித்தேன். ஆனுல் தற்பொழுதோ என்னை வருத்தும் இம்மாலைக்கு யாதுபகை செய்தேன் ? என்று பலவாறு வருந்தினுன் சந்திரகுமார்.

இங்ஙனம் வருந்தியதைக் கண்ட சேகர், என்ன சந்திரா! உனக்கென்ன அறிவு மங்கியதா! அல்லது புத்தி தடுமாறி விட்டதா ? இளங்கோவன் உன் ஆருயிர் நண்பன். அவன் தங்கையே உன் ஆருயிர்க் காதலி. காதலியை வளர்த்த சிற்றப்பா அவளை உனக்கே திருமணம் செய்து கொடுப்பதாக வாக்குறுதியளித்துள்ளார். ஆகவே இவ்வாறு வருந்துவது கூடாது என்று தேற்றலாயினன். சந்திரன் ஒருவாறு தேறியவனுய் அன்பனுடன் பேசிக் கொண்டிருக்கின்ருன்.

சேகரையும் சந்திரனையும் தாக்குவதற்காக ஏவப்பட்டிருந்த இரண்டு கயவர்களும் எப்படியோ இவர்கள் இருக்கும் இடத்தை அறிந்து நாடலாஞர்கள். அவர்களுள் ஒருவன் பெரிய கல் ஒன்றை எடுத்துச் சேகர் மீதும், சந்திரன் மீதும் போட்டுக் கொல்லுவதற்காகப் பின்பக்கமாக நெருங்குகின்ருன். மற்ருெருவன் யாராவது வருகின்ருர்களா என்று சுற்றுமுற்றும் பார்க்கலாஞன்; அவர்கள் அமர்ந்திருந்த மரத்தின் அருகில் ஓங்கி வளர்ந்த ஒரு புற்று இருந்தது. அந்தப் புற்றில் நெடுநாட்களாக வசித்துவந்த நாகமொன்று தெய்வச் செயலால் அவ்வேளையில் இரை தேடப் புறப்பட்டது.

சேகரனுக்கும், சந்திரனுக்கும் பின்பக்கமாகச் சுமார் பதினைந்தடி தூரத்தில், நாகமும் அக்கல்தாங்கிய கயவனும்

நெருங்கலாயினர். "நாம் ஒன்று நினைக்க, தெய்வம் ஒன்று நினைக்கும்" என்பது ஆன்ரோர் வாக்கன்றோ!

சேகரனும், சந்திரனும் ஒன்றாக, ஒருவரோடொருவர் சேர்ந்தாற்போல உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தனர். கொடும்பாவியான அக்கயவன் ஒரு அடி அகலமும், மூன்றடி நீளமுமுள்ள பெருங்கல்லைத் தூக்கமுடியாமல் தூக்கிக் கொண்டு நெருங்குகின்றான். விதியின் செயல் கரகமென்று மாறுகின்றது, கல் தூக்கிய கயவன் கீழே பார்க்காமல் அந்நாகத்தை மிதிக்கின்றான். உடனே அந்நாகம் சீறி அவன் காலைத் தீண்டுகின்றது. "ஐயையோ பாம்பு" என்று அலறிக் கல்லைக் கீழே போடுகின்றான். அந்நாகம் அக்கல்லினடியில் சிக்கி மடிகின்றது. அவனும் விஷம் ஏற அடியற்ற மரம்போல் கீழே சாய்கின்றான். அவன் செயல் "கெடுவான் கேடு நினைப்பான்" போன்றாயிற்று.

சத்தத்தைக் கேட்ட இளங்காளைகள் ஓடி வருகின்றனர். பார்த்தால் ஒருவன் புரள்கின்றான். அருகிற் சென்று காரணம் கேட்க, "ஐயோ! பாம்பு கடித்ததே என் உயிர் நீங்கப் போகின்றதே! என் செய்வேன்! கிண்டாமணியின் பேச்சைக்கேட்டு உங்களைக் கொல்ல வந்தேனே! விதியின் செயலால், என் கயமைத் தன்மையால், பணப் பேராசையால், மடியலானேன்" என்று கூறியவண்ணம் உயிர்விட்டான். அருகில் பெரிய கல்லொன்றும் செத்த பாம்பொன்றும் கிடந்தன. கண்ணுற்ற நண்பர்கள் இறைவனை வாயார வாழ்த்தினார்கள். புலங்களைச் சுற்றிப் பார்த்து வந்த முருகன், மற்றொரு கயவன் அங்கு மிங்கும் திருட்டுப் பார்வை பார்த்து வந்ததைக் கண்ணுற்று, அவன் பின்புறம் செல்லலானான்.

கருப்பண்ணனும் தன் வேலையை முடித்து இவர்கள் இருக்கும் இடத்தை நோக்கிய வண்ணம் வந்து கொண்டிருந்தான், இதற்குள் அருகில் நெருங்கிய அம்முருகனை அக்கயவன் எங்ஙனமோ பார்த்து விட்டான். கண்டவுடன் தன் இடுப்பில் இருந்த கத்தியை எடுத்துக் காட்டி 'நெருங்கினால் குத்திவிடுவேன்' என்று பயமுறுத்தினான். இதற்கஞ்சியவனா முருகன். பனங்காட்டு நரி சல சலப்புக் கஞ்சாது என்பதைப்போல உழைத்து, உழைத்து உரம்

வாய்ந்த முருகன், ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து, அக்கயவனின் கையில் இருந்த கத்தியைப் பிடுங்கி யெறிந்தான். இருவர்க்கும் அவ்விடத்தில் மல்யுத்தம் நடந்து கொண்டிருந்தது. ஒருவரை ஒருவர் குத்திக் கொண்டனர்; உருண்டு புரண்டனர்.

இவ்வாறு இவர்களிருவரும் சண்டையிடுவதைக் கண்ணுற்ற கருப்பண்ணன் வேகமாக ஓடி வந்தான். முண்டனுக்கு இரண்டாள் போதுமல்லவா! அக்கயவனை இருவரும் சேர்ந்து, பிடித்து மரத்தோடு மரமாகக் கயிற்ருல் இறுகக் கட்டினர். பின்னர் சேகரும் சந்திரனும் இருந்த இடத்தை நாடலானுர்கள். ஆங்குச்சென்று பார்த்தபோது மலையைப் போன்ெருருவன் மாண்டு கிடந்ததைக் கண்டனர். பாம்பு ஒன்று நசிந்து கிடந்ததையும் கண்டனர்.

கருப்பண்ணனும், முருகனும் செய்தியறிந்து இன்புற்றனர். உடனுக்குடன் தாங்கள் செய்த செயலைத் தெரிவித்தனர். போலீஸுக்குத் தகவல் அறிவிக்கின்றனர். போலீஸார் மாண்டவனை மருத்துவ நிலயத்திற்கு அனுப்பினர். கட்டப்பட்டவனைக் கொண்டு செல்கின்றனர் ஸ்டேஷனுக்கு. போலிஸ் இன்ஸ்பெக்டர் உள்ளதைக் கேட்க அக்கயவன் உள்ளதை உள்ளபடியே உரைத்து விடுகின்ருன். இவ்வாக்கு மூலம் சென்னைக்கு அனுப்பப் படுகின்றது; அக்கயவன் சிறையில் அடைக்கப்படுகின்ருன்.

## 11. வணங்காமுடியனின் வம்புச்செயல்.

சென்னையிலுள்ள இளங்காதலி மோகனவின் நிலையைச் சிறிது நோக்குவோம். மோகனவின் படிப்பும் ஒருவாருக முடிந்தது. எப்பொழுதும் சந்திரன் நினைவாகவே இருந்தாள் என்பதை விவரிக்கவே முடியாது, உண்ணும் போதும், உடுக்கும்போதும், உறங்கும்போதும், விழிக்கும் போதும் சந்திரன் நினைவாகவே திகழ்ந்தாள். மனக் கவலையுற்ருள். உணவு பிடிக்கவில்லை. பார்க்குமிட மெங்கும் சந்திரனைகவே காட்சியளிக்கலாயிற்று.

ஒருநாள் மாலை தன் உப்பரிகையின் மீதில் உலவலானுள். தன் அழகனைத்தையும் பழித்துப் பழித்து கதறி அழும் நிலையில் இருந்தாள்......தோழி!

" காலையரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலரு மிந்நோய்" என்றபடி யான்

விழித்ததும் பூ அரும்பெடுப்பது போல் என் காதல் அரும்பு உண்டாகிப் பகலில் பெரும் அரும்பாக முற்றி, மாலை மலர்வது போன்று என் உள்ளத்தில் மலர்ந்தது. இந் நோய் என்னைத் துன்புறுத்துகின்றதற்கு என்செய்வேன்!

" அழல் போலும் மாலைக்குத் தூதாகி ஆயன்
குழல் போலுங் கொல்லும் படை." என்றபடி

இடையனது, புல்லாங்குழல் ஓசை இக் கொடிய மாலைக் காலத்திற்குத் தூதாகவும் என்னைக் கொல்லும் படையாகவும் மாறிவிட்டதற்கு என் செய்வேன்? வாணி!

" நனவினால் நல்கா தவரைக் கனவினால்
காண்டலின் உண்டென் உயிர்" என்றாங்கு

என் உயிர் இதுவரை நிலைத்திருக்கக் காரணம் என்னை? என் மனத்தைக் கொள்ளை கொண்ட கள்வனான சந்திரன் இதுவரை நேரில் வந்து தன் திருவுருவத்தினை எனக்குக் காண்பிக்காமல் இருக்கின்றார். இருக்கட்டும். வாழட்டும் நீடூழி! அக்கள்வன் என் கனவில் தோன்றி அளித்து வரும் இன்பக் காட்சியினால்தான் யான் இதுவரையில் உயிர் வாழ்கின்றேன். இன்றேல், என் உயிர் எப்பொழுதோ மாய்ந்திருக்கும் என்று கூறினாள், தோழி பலவாறு தேறுதல் மொழிகள் சொல்லித் தேற்றினாள்.

[இப்பால் மகாபலிபுரத்தில் சந்திரகுமாரின் தந்தை தனபால் பொருளாதார நிலையில் உயர்ந்திருந்தார். உயர் நிலைப் பள்ளியை விட்டுக் கல்லூரிக்குச் செல்லும் சமயம், அவன் தங்கை கமலாசினி ஐந்து வயது சிறுமியாகத் திகழ்ந்தாள். தற்போதோ! இளமங்கையாக, மாமா கருணாநிதியின் உதவி பெற்று உயர்நிலைப் பள்ளியில் கல்வி பயின்று வந்தாள். கமலாசினி S. S. L. C பரீட்சையில் வெற்றியுற்றாள். இந்தச் செய்தியைச் சந்திரன் சேகரிடம் தெரிவித்தான். சேகர், நண்பன் தங்கை படிப்பில் சிறந்திருப்பதைக் கேட்டு மகிழ்ச்சி கொண்டான்.]

இங்கு இவ்வாறிருக்கக் கோவையில் கல் நெஞ்சக் கூட்டக்காரனை கிண்டாமணி அதே நகரில் வாழ்ந்து வந்த மற்றோர் செல்வந்தனாகிய வணங்காமுடியனை நாடி அவனையும் தன் வயப்படுத்திக் கொள்கின்றான். இருவரும் சேகரனையும், சந்திரனையும் இரகசியமாக வரவழைத்துக் கொன்றுவிட திட்டம் போடலாயினர்.

அன்றிரவு மணி எட்டு இருக்கும். கிண்டாமணி அவசர, அவசாமாக உண்டி முடித்து நான்கு ஆட்களுடன் அச் செல்வந்தன் இல்லத்தை நாடுகின்றான். அச்செல்வனும் உண்டி முடித்தான். பின்னர் சதியாலோசனைத் திட்டம் தயாரிக்கின்றனர், அச் செல்வனின் இல்லத்தில் ஒரு அறை இருந்தது. அவ்வறையின்கீழே பாதாள அறை ஒன்று இருந்தது. அவ்வறையின் கீழே பாதாள அறை ஒன்றிருந்தது. அதற்குமேல் பலகையொன்று போட்டு மூடப்பட்டு இருந்தது. அப்பலகையின் கருவி சுவரில் பொருத்தப்பட்டிருந்தது. அக்கருவியைத் திருப்பினால் அப்பலகை திறக்கும். மீண்டும் திருப்பினால் மூடிக்கொள்ளும். அதே அறையில் எண்ணிய வேலையை முடிக்கலாம் என்று திட்டம் வகுக்கப்படுகின்றது. அப்பலகையின்மேல் இரண்டு நாற்காலிகள் போடப்படுகின்றன. வாயிற்படியை யடுத்து ஒரு நாற்காலி போடப்படுகின்றது. இடையே மேஜை போடப்படுகின்றது. வந்த ஆட்கள் நால்வரும் மறைவாக நிற்கின்றனர். கிண்டாமணி அந்த அறையை அடுத்தாற் போல் மறைவாக கைத் துப்பாக்கியுடன் நிற்கின்றான். அச்செல்வன் வாசற்படிக்கருகில் போடப்பட்டிருந்த நாற்காலியில் அமருகின்றான். பக்கத்திலிருந்த டெலிபோனை எடுத்துக் கீழ்க் கண்டவாறு பேசலானான்:—

ஹலோ : பேசுவது யார்? சேகரா...... வணக்கம். இன்று மில் தொழில் முன்னேற்றங் கருதித் தங்களுடன் சில பேச விரும்புகின்றேன்.........நீங்கள் சௌகரியப்பட்டால் தங்கள் நண்பர் சந்திரகுமாருடன் இப்பொழுதே வாருங்கள்......ஆமாம். இப்பொழுதே வந்தால் நலமாயிருக்கும்......வணக்கம்.

சேகரனும் சந்திரனும் முதலில் புறப்படத் தயங்கினர். என்றாலும் எதற்கும் அஞ்சாத வீரர்கள் இதற்கஞ்

சுவார்களா? இருந்தாலும் முன் எச்சரிக்கையாகச் செல்லுதலே சாலச் சிறந்ததெனக் கருதியவர்களாய்த் தங்கள் தங்கள் கைத் துப்பாக்கிகளையும் சேகர் அபாயக் கருவியையும் எடுத்துக்கொண்டு காரில் சென்றார்கள்; 'அவ் வணங்காமுடியனின் இல்லத்தை நோக்கி.

சிறிது நேரத்திற்கெல்லாம் செல்வந்தனின் இல்லத்தை அடைகின்றனர். வாயிற் காவலனால் செல்வன் அமர்ந்திருக்கும் அறைக்கு அழைத்துச் செல்லப்படுகின்றனர். ஆங்கு போடப்பட்டிருந்த அபாய நாற்காலிகளின் மீதில் அமரலானார்கள்.

வணங்காமுடியன்: நான் ஒன்று உங்களைக் கேட்கலாம் என்று விழைகின்றேன்.

நண்பர்கள்; தாராளமாய்க் கேளுங்களேன்.

வணங்காமுடியன்: நீங்கள் உங்கள் தொழிற்சாலையை சிறப்பாக நடாத்துவதைப் பற்றிக் கேள்வியுற்று மகிழ்கின்றேன். ஆனால் அத்துடன் நில்லாமல் வேறு வீணான தொழிலொன்றை நடத்துகின்றீர்களாமே! அது ஏன்?

நண்பர்கள்: வேறு தொழில் என்ன? ஒன்றும் விளங்கவில்லையே! யாது கருதி இம்மாதிரி கேட்கின்றீர்கள்?

வணங்காமுடியன்: இல்லை. உங்கள் நலனைக் கருதித் தான்.

சேகர்: என்ன? எங்கள் நலனைக் கருதியா?

வணங்காமுடியன்: ஆம். உங்கள் நலனைக் கருதித் தான்.

சந்திரன்: எப்படி? எந்த வகையில்?

வணங்காமுடியன்: நீங்கள் உங்கள் தொழிலைச் சிறப்பாக நடாத்துவதைப்பற்றி எம்மைப் போன்றவர்க்குக் கவலையில்லை. வேறு தொழில் செய்ய ஆரம்பித்து விட்டீர்களே! அதைப்பற்றித்தான் கவலை.

சேகர்: என்ன ஐயா? உமக்குப் பைத்தியமா? நாங்கள் எத்தொழிலை நடத்திவந்தால் உமக்கென்ன? நீர் ஏன்

அவ்வளவு கவலையுறுகின்றீர். காரணம் வேறு ஏதாவதுண்டோ?

வணங்காமுடியன்: மற்றவர்கள் காரியத்தில் ஏன் நீங்கள் பிரவேசிக்கின்றீர்கள். யாராவது எத்தொழிலையாவது செய்து கொண்டு சென்றால் உங்கட்கென்ன? அதை ஏன் தடுக்க முயல்கின்றீர்கள். நாட்டின் மக்கள் எப்படி வாழ்ந்தால் உங்களுக்கு என்ன? அவரவர்கட்குப் பிழைக்கத் தெரியாதா? நீங்கள் ஊரூராகச் சென்று கத்தினால்தான் அவர்கள் உணர்ச்சி பெற்றெழுவார்களா? அவ்வாறெழுந்தால்தான் உங்கட்கென்ன யாதாயினும் ஊதியமுண்டோ? நீங்கள் ஏன் உங்கள் பணத்தை மக்கட்கென்று வீணாகச் செலவழிக்கின்றீர்கள்? இவ்வாறு செலவழிப்பதால் புகழைப் பெறலாம் என்று பார்க்கின்றீர்களா? அதுதான் இல்லை.

சந்திரன்: ஓஹோ! செய்தி விளங்கிற்று. நாடு அல்லலுறுகின்றது; எங்குப்பார்த்தாலும் பஞ்சப்பேய் தாண்டவமாடுகின்றது; உம்மைப்போன்ற சில கல்நெஞ்சக் கூட்டத்தாரிடம் வட்டிப்பேய் வீறிடுகின்றது; இதனுடன் இயற்கையும் மழையின்றி மோசம் செய்கின்றது; இந்நிலையை யுணர்ந்த நாங்கள்,

"ஆற்றுவார் ஆற்றல் பசியாற்றல் அப்பசியை
மாற்றுவா ராற்றலிற் பின்" என்றபடி ஏழைகளின்

பசிப்பிணியைப் போக்க எங்களால் இயன்றளவு உதவி வருகின்றோம். நாட்டின் கல்வி நிலை தாழ்ந்துள்ளதால் ஏழை மாணவர்கட்கு, கல்வி பயில வேண்டிய உதவிகள் பல செய்து வருகின்றோம். மக்கள் சோம்பிக்கிடத்தலை நினைத்து, அவர்கட்கார்வமூட்ட சொற்பொழிவு மன்றங்களை ஊரெங்கும் ஏற்படுத்தி சொற்பொழிவு நடத்தி வருகின்றோம். உம்மைப் போன்ற செல்வர்கள் நாட்டின் நலனைக் கருதி உழைக்க முன்வருவார்களானால், நாடே நன்னிலை யெய்தும் என்பதில் ஐயமுண்டோ? எனவே நாங்கள் எவ்வித வீணான தொழிலையும் செய்துவிடவில்லை.

வணங்காமுடியன்: அப்பொழுது நான் சொல்வதைக் கேட்கமாட்டீர்களா? என்பேச்சிற்கு மதிப்பில்லையா? வீணர்களே!

சேகர்: போம் ஐயா போம்! உமக்கு என்ன! அகங்காரம் தலைக்குமேல் ஏறிவிட்டதா? நான் என்கிறீரே நான், எனது என்பதை எல்லாம் எவன் ஒழிக்கின்றானோ அவன்தானே உயர்ந்தவன்,

வணங்காமுடியன்; என்ன? அப்பொழுது நான் தாழ்ந்தவனா?

சந்திரன்; ஏனையா மீண்டும் மீண்டும் யான், யான் என்கிறீர்? நீர் பெரிய செல்வச்சீமானோ? உலகமே உன்னுடையதோ? அல்லது உன் சொற்படியே இவ்வுலகம் முழுமையும் நிகழ்கின்றதோ. உலகத்தின் ஒரு புள்ளியின் கோடானு கோடிப் பகுப்பில் ஒரு பாகமாகக்கூட இருக்க மாட்டீர். என்னமோ வேறு தொழில் செய்து விட்டோமாம். அதை கண்டிப்பதற்கு வந்துவிட்டார். போமையா போம். நாட்டின் நிலையை அறியாது, நாட்டு மக்களின் முன்னேற்றம் குறியாது, ஏழை மக்களின் இன்னலைப் போக்காது, உண்டு கொழுக்கும் வீணரையா உம்போன்றவர்கள். இவற்றை யெல்லாம் எடுத்துக் காட்டினால் எம்போன்றவர்க்கு இழிசொல். இவ்வாறெல்லாம் எடுத்துரைத்தால் தங்கள் மானம் கப்பலேறுகின்றதென்று அஞ்சுகின்றீர்களோ?

வணங்காமுடியன்: என்னடா அளவுக்கு மீறி வார்த்தைகளைக் கொட்டிக்கொண்டே செல்லுகின்றாய். உனக்குப் போங்காலம் நெருங்கி விட்டது; என் செய்வாய் நீ.

சேகர்: அடேயப்பா! மகாதேவர் இவர். எமக்குப் போங்காலம் நெருங்கிவிடப் போகின்றதாம்.

"நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்
பெருமை உடைத்திவ்வுலகு". என்றபடி அமைந்ததிவ்

வுலகம். போனால் எங்கள் உயிர்போகும்; போகட்டும் எம்மை அழித்தாலும், எம் புகழை உம்மால் அழிக்க முடியுமா? நிறுத்தும் உமது வீண் வார்த்தைகளை.

**வணங்காமுடியன்:** நீங்கள் அளவுக்கு மீறிப் பேச்சைக் கொட்டுகின்றீர்கள். அன்றியும் சாகவும் தயாராக இருக்கின்றீர்கள் போலும். நீங்கள் இவ்வாறு செய்து வரத்தான் போகின்றீர்களா? ஏன் பணத்தை வீணில் செலவழிக்கின்றீர்கள்?

**சந்திரன்:** நிறுத்தமாட்டீரா? உம்முடைய அறிவுரையை. பணம் பணம் என்றழுகின்றீரே. பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்து வைத்த கேடு கெட்ட மானிடரே கேட்பீராக, உம் உடலாகிய கூடு விட்டு உம் உயிர் நீங்கியபின் உம் பணத்தை யாரையா அனுபவிப்பர்?

**வணங்காமுடியன்;** புதைக்கத் தேவையில்லை. நம் இன்ப வாழ்வை நடாத்த அப்பணத்தைச் செலவழித்தாற் போகிறது.........இதற்காக.........

**சேகர்:** இன்ப வாழ்வா? யாருக்கு இன்ப வாழ்வு? நாடெங்கும் பட்டினி. நாட்டில் முன்னேற்ற மில்லை. ஆங்காங்கு அணைகள் சரிவரக் கட்டப்படாமல் நீர் வீணாக ஆற்றில் ஓடி விட, புலங்களெல்லாம் நீரின்றி, விவசாயம் செய்ய முடியாமல் தவிக்கின்றனர்; மக்கள். இதனால் தொழிற்சாலைகளும் மூடும் நிலையில் அமைகின்றன. இங்ஙனம் இருக்கையில் இன்ப வாழ்வா? நீர் என்ன செய்வீர்? உம்போன்றவர் ஏழை மக்களை வதைத்து வதைத்துக் கொள்ளை லாபமடித்துக் குடியாட்டத்தில் மூழ்கிக் கும்மாளம் போடுகின்றனர்.

மேனாட்டார் உபயோகித்து வரும் ஜின் விஸ்கி போன்ற லாகிரி வஸ்துக்கள் நம்மை அழிக்கக் கூடியவை. அன்றியும் நம் புகழ், நம் பண்பு, நம்குடிப்பிறப்பு போன்ற அனைத்தும் மாய்ந்து விடும்.

"துஞ்சினார் செத்தாரின் வேறல்லர்; எஞ்ஞான்றும்
நஞ்சுண்பார் கள்ளுண்பவர்" என்பதை யுன்னி மது

விலக்கை தீவிரப்படுத்தினால்தான் நன்மை பல செய்ய முடியும். உம்மைப்போன்ற செல்வச் சீமான்கள் இவ்வகைத் தீச்செயல்களை யொழித்து, நற்செயல்களில் ஈடு

படுவார்களானுல் நாடே நன்னிலை யெய்தும் என்பதில் வியப்பொன்றுமில்லை.

"வரையிலா மாண் இழையார் மென்ருேள் ;
புரையிலாப் பூரியர்கள் ஆழும் அளறு" என்றபடி

வரையரையில்லாது, பொருள் கொடுப்பவர்கட்கெல்லாம் தங்கள் உடலை விற்கும், வரைவின் மகளிரின் இன்பத்தினை அறிவில்லாக் கீழ்மக்கள் விரும்பி அழிகின்றனர். இதை உணராத நீர் இன்ப வாழ்க்கையை இப்படித்தானே நடத்தச் சொல்லுகின்றீர். இது மட்டுமா ?

சூதாட்டம் தற்காலத்தில் பற்பல விதங்களில் காட்சியளிக்கின்றன. ஏராளமான பணத்தை இதற்கென்றே செலவழிக்கின்றனர் ; இவ்வாறுள்ள மாக்கள் என்றுமே,

"உடை, செல்வம் ஊண், ஒளி, கல்வி என்றைந்தும்
அடையாவாம் ஆயங்கொளின்" என்றபடி சூதாடு

வோர் உடை, செல்வம், உணவு, புகழ், கல்வி ஆக இவ்வைந்தையும் இழக்கின்றனர். இங்ஙனமாகத் தீச்செயல்களைக் கனவினும் நினையாது, அவைகளை அறவே ஒழித்து, நற்செயல்களைச் செய்து, நாட்டினை நன்னிலைக்குக் கொணர்தல் தீமையா ?

வணங்காமுடியன் : இவையெல்லாம் சரிதான். நீங்கள் ஏன் கிண்டாமணி விஷயத்தில் தலையிடுகின்றீர்கள்,

சந்திரன் : அக்கயவளின் பேச்சை எடுத்து ஏனையா எங்களை வருத்தமுறச் செய்கின்றீர்.

வணங்காமுடியன் : என்ன ? அவன் அவ்வளவு கெட்டவனு ?

சந்திரன் : மெதுவாகக் கேட்கின்றீர்களே! அதிக வட்டிக்குப் பணம் கொடுத்து மக்களை வருத்தித் தன் பணத்தைப் பெருக்குகின்ருன். தொழிலாளர்கட்குச் சரிவர கூலி கொடுப்பதில்லை, கள்வர் கூட்ட மொன்றைத் தயாரித்து நாடெங்கும் தொல்லை கொடுக்கின்ருன். மேலும் தனக்கெதிராக ஒருவர் செல்வந்தராகவோ, ஒரு தொழிலை

நடத்துகின்றவராகவோ இருப்பின் மனம் பொறுக்க மாட்டான். அவர்களையும் பலவித இன்னல்களுக் குள்ளாக்குகின்ருன். கள்ளக் கூட்டத்தினர் மக்களைக் கொலைசெய்து, அவர்களுடைய பொருள்களைப் பறித்து வருகின்றனர். இவனே உட்கார்ந்து கொண்டு தின்று கொழுக்கின்ருன். இவ்வாறு நடந்த கொலை நிகழ்ச்சி யொன்றை நேரில் கண்டோம்; ஓர் நாள். நல்லகாலமாகத் தற்செயலாக வந்த போலீஸ் படையொன்று திருடர்களை விரட்டி, அச்செல்வத்தை வாரிச்சென்றது. கொலை செய்யப்படவிருந்த இருவரை நாங்கள் காப்பாற்றினேம். எங்களைப் போலீஸ் படை காப்பாற்றியது. இம்மாதிரி செய்கைகள் எத்தனை நிகழ்ந்துள்ளனவோ! அந்நிகழ்ச்சி யின்போது எடுத்த புகைப்படங்களைச் சர்க்காருக்கு அனுப்பியுள்ளோம். அவனுக்கும் முடிவு காலம் நெருங்கிக் கொண்டுதான் இருக்கிறது. இருவரும் இவ்வாறு கிண்டா மணியைக் குறித்துப் பேசி முடித்தனர்.

இரவு மணி பனிரண்டு ஆயிற்று. நாசக்காரர்கள் தங்கள் நாசவேலையைச் செய்யத்துணிந்தனர். கிண்டாமணி தங்கள் ஆட்களைத் தக்க கயிறுகளுடன் மறைவாகக் காத் திருக்கச் செய்தான்.

**வணங்காமுடியன்:** அப்பொழுது நீங்கள் என் சொற்களைக் கேட்கமாட்டீர்கள் போலும்,

**நண்பர்கள்:** கேட்கவே மாட்டோம்.

**வணங்காமுடியன்:** கேட்கமாட்டீர்களா? ஹ ஹ் ஹ ஹா! இப்பொழுது நீங்கள் இங்கிருந்து தப்பித்துச் செல்ல ஒருகாலும் முடியாது. உங்கள் வாழ்நாள் இன்றோடு முடிவடையப் போகின்றது.

இதைக் கேட்டதும் சந்திரன் திடுக்கிட்டான். சேகர் கைத்துப்பாக்கியை இலகுவாகக் கையில் எடுக்கலானன். இதற்குள் கிண்டாமணி கைத்துப்பாக்கியுடன், வாயிலின் கதவைச் சாத்திய வண்ணம், உள்ளே நுழைந்து இருவரை யும் நோக்கி, 'வணக்கம் தோழர்களே!' என்று தலை தாழ்த்தினன். கையில் துப்பாக்கியைக் கண்டு திடுக்கிட் டான் சந்திரன்.

"தொழுதகை யுள்ளும் படையொடுங்கும்; ஒன்னார்
அழுத கண்ணீறு மனைத்து" என்ற குறளை யுணர்ந்

தான் சேகர். உடனே தன் கைத்துப்பாக்கியினால் கிண்டா மணியின் கைக்குக்குறி வைத்துச்சுட்டான். குண்டு மேலே பறந்து விடுகின்றது. கிண்டாமணியின் கைத்துப்பாக்கி அதிர்ச்சியினால் கீழே விழலாயிற்று. சந்திரன் சரேலென்று பாய்ந்து கீழே விழுந்த கைத்துப்பாக்கியை எடுத்து உடைத்துவிடுகிறான். சேகரும் தன் கைத்துப்பாக்கி பகைவன் கையில் சிக்காமலிருக்க அதை உடைத்து விடுகிறான். இதற்குள் பழைய திட்டப்படி பாதாள அறையின் பலகையை நகர்த்தக் கருவியைச் சுழற்றலானான்; அந்த மாபாவி வணங்காமுடியன்

உறவாட அழைத்தான்; ஆனால் உள்ளே தள்ளினான் உயிரைக்கவர. அந்தோ! பாவம்! பலகை நகர்ந்தது. இருவரும் உள்ளே விழுந்தனர். வீழ்ந்ததும் மூர்ச்சை அடைந்தனர்; பலத்த அதிர்ச்சியின் காரணமாக. சிறிது நேரத்திற்கெல்லாம் கிண்டாமணி தன் ஆட்களைக் கொண்டு அவர்களைக் கட்டி வெளியே தூக்கிவரச் சொன்னான்.

முதலில் சேகரனைக் கட்டி வெளியே எடுத்துவந்து மாளிகையின் பக்கத்தில் இருந்த மரத்தில் தூக்கிலிட எண்ணினர். மரத்தை யடுத்து உயர்ந்த மதில் சுவரும் அதன் பக்கத்தே ஒரு பெரியசாலையும் இருந்தன. சேகரை அம்மரத்தடியில் கிடத்திவிட்டுச் சந்திரனை எடுத்து வந்தனர். அப்பொழுதுதான் சந்திரன் மூர்ச்சை சிறிது. சிறிதாகத் தெளியலுற்றான். ஆனால் சந்திரன் மூர்ச்சையானவன் போலவே இருந்தான்.

சேகரனின் கட்டையவிழ்த்து, கைகளிரண்டு மட்டையும் பின்புறமாகச் சேர்த்துக்கட்டி, கழுத்தில் சுருக்கிட்டு மரக்கிளையில் கயிற்றையிட்டு இழுக்கலாயினர். அப்பொழுதுதான் மூர்ச்சை தெளிந்த சேகர் தனக்குற்ற ஆபத்தை எண்ணித் தன் வலுவினால் கைக்கட்டுகளை உடைத்துத் தன் கால் சட்டையில் இருந்த அபாயக் கருவியை அழுத்தலானான். உடனே அபாய ஒலி எங்கும் ஒலித்தது.

அபாய ஒலி ஒலிக்கவே போலீஸ் லாரிகள் அவ்விடத்தை நோக்கிப் பறந்து வந்தன.

சேகர் தூக்கிடப்படுவதைக் கண்ட சந்திரன் தன் வல்லமையால் கயிற்றை அறுத்துக்கொண்டு தான் வைத்திருந்த கைத் துப்பாக்கியை எடுத்துத் தூக்குக் கயிற்றை நோக்கிக் கண நேரத்தில் சுடலானுன். கயிறுதுண்டிக்க சேகர் கீழே விழுந்தான். இதற்குள் போலீஸ் லாரியும் வந்து விட்டது. சந்திரன், எதிர்த்தவர்களைத் துப்பாக்கியைக் காண்பித்து விரட்டினுன். கிண்டாமணி விழுந்தடித்து, யாருக்கும் தெரியாவண்ணம் ஓடலானுன். போலீஸைக் கண்டதும் வணங்காமுடியன் பிரமித்து நின்று விட்டான். ஓடிய ஆட்களை போலீஸார் வளைத்துப் பிடித்தனர். செல்வன் உட்பட அனைவரும் விலங்கிடப்படுகின்றனர். அவர்கள்மீது கொலை செய்ய ஈடுபட்டதாக வழக்கொன்று பதிவு செய்யப்பட்டு விசாரணை நடந்து வந்தது.

சேகரின் கட்டையவிழ்த்து, மூர்ச்சை தெளிவிக்கின்றனர். சேகர் மூர்ச்சை தெளிந்தெழுந்தான். சந்திரனைக் கட்டித் தழுவி ஆனந்தக் கண்ணீர் விட்டான். மறைந்து ஓடிய கிண்டாமணியையும் போலீஸார் கைது செய்தனர்,

மறு நாள் நியாய மன்றத்தில் விசாரணை நடைபெறுகின்றது. கிண்டாமணியின் தரப்பில் வக்கீல் நீலகண்டன் நின்று வாதாடுகின்ருன். வக்கீல் ஒரு லஞ்சப் பேய். அவன் மற்றவர்க்கும் லஞ்சம் கொடுத்து வணங்கா முடியனும் கிண்டாமணியும் வழக்கில் ஈடுபட்டவர்கள் அல்லர் என்பதாகக் கருதப்பட்டு விடுவிக்கப்படுகின்றனர். கூலிக்கு மாரடித்த அவ்வாட்கள் குற்றவாளிகளாகக் கருதப்பட்டு மூன்று வருஷம் கடுங்காவல் தண்டனை பெற்றனர்.

லஞ்சம் வாங்கிக்கொண்டு கிண்டாமணியை விடுவித்ததாக எங்ஙனும் பேசப்படுகின்றது. இது விஷயம் சென்னை பிரதம மந்திரிக்கும் எட்டுகின்றது. இவ்வாறு ஒவ்வொன்ருக எத்தனையோ குற்றச் சாட்டுகள் கிண்டாமணி மீதிலும், வக்கீல், நீதிபதி இன்ஸ்பெக்டர் மீதிலும் செல்கின்றன; சென்னைக்கு. இவற்றையெல்லாம் அறிந்து வந்தார் பிரதமர்.

உடனே பிரதமர் கடிதம் வரையலானூர் கோவைக்கு. கடிதம் வரப் பெறுகின்றனர்; சேகரனும் சந்திரனும். அதாவது பொல்லாக் கயவர்களைத் தக்க சமயத்தில் தக்க சான்றுகளுடன் பிடிககும் வழியைத் தேடுங்கள் என்றும் சமயம் நேர்ந்தால் தன்னையழைத்தாலும் தானே நேரில் வருவதாகவும் எழுதியிருந்தார். செய்தியைக் கண்ட நண்பர்கள் மேலும், மேலும் ஊக்கமுடன் நாட்டிற்காக, அரும் பெருஞ்செயல்கள் செய்துகொண்டே கிண்டாமணி வணங்காமுடியன் முதலியோர் செயல்களிலும் கண்ணோட்டம் செலுத்தி வந்தனர்.

## 12. சென்னையில் காதலர் சந்திப்பு

கோவை நண்பர்களிருவரும் சென்னையிலிருந்து கடிதமொன்று வரப் பெறுகின்றனர். சென்னையில் "மாநில திருக்குறள் மாநாடு" நடக்கவிருப்பதாகவும், மாநாட்டில் கோவை நண்பர்களான சேகரனும், சந்திரனும் குறள் நெறி முன்னேற்றமுற, நாட்டு மக்கள் நன்மையுற, சிறந்த வகையில் சொற்பொழிவுகள் ஆற்றுதல் வேண்டி அம் மாநாட்டில் கலந்துகொள்ளுமாறு கேட்டுக் கொள்ளப்பட்டிருந்தது. அவர்களும் வர இசைந்தனர், குறித்த நாளில் சென்னைக்குப் புறப்பட்டு மாநில மாநாட்டில் கலந்து கொண்டனர். அங்கே அவர்கள் சிறந்த சொற்பொழிவுகளைப் பொழிந்து நாட்டு மக்களின் உள்ளத்திலே உயிராகிய குறள் நெறியை ஊன்ற வைத்தது மன்றியும், அது முளைத்து செடியாகி, மரமாகி. பூத்துக்காய்த்துப் பழுத்து, அனைத்துலகும் அவர்கள் மூலம் குறள்நெறி பரவும் வகையில் செய்து அனைவரும் புகழும் நிலையில் திகழ்ந்தனர்.

புகழ்மாலை யணிந்த புத்துலகப் பொன் மணிகள், பொங்கியெழும் ஆர்வமுடன் மாநாட்டை முடித்து, அன்று மாலை நேத்தாஜி சுபாஷ் சந்திர போஸ் ரோடு (சைனு பஜார்) சென்று மார்க்கெட் நிலவரம் உணர எண்ணினர். இருவரும் சென்னையின் தோற்றத்தைக் கண்டு புன்னகை புரிந்த வண்ணம் சென்றனர்,

காரை ஒரு இடத்தில் நிறுத்தி டிரைவரை அங்கு இருக்கச் செய்து பலகடைகளை நாடிய வண்ணமாக இருந்தனர். அங்கு அனைவரையும் கவரத்தக்க நிலையில் பதுமைகள் நிறைந்த கடையொன்று இருந்தது; அவைகளைக் கண்டும் ஊன்றிக் காணாதவர்களாய்ச் சென்று கொண்டிருக்கையில், சந்திரன் சட்டென எதனையோ கண்டவன் போல் அங்கே நின்றான். என்ன சந்திரா! என்று கேட்ட வண்ணம் திரும்பிய சேகரனும் புன்னகை புரிந்தவண்ணம் மௌனமாகச் சந்திரனைப் பின் தொடர்கின்றான்:

இவர்களிருவரும் கடையுள் செல்லாமலேயே சற்று வெளியே நின்று உள்ளே நிகழ்ந்ததைக் கவனிக்கலாயினர். உள்ளே இருந்த இரு பெண்மணிகள், ஒரு அழகிய சிலைக்குத்தக்க விலையைக் கொடுத்து வாங்கினர். அவ்வுருவச் சிலையைச் செய்யும்படி ஒரு வாரத்திற்கு முன்பே ஆர்டர் கொடுத்திருந்தனர். குறித்தபடி செய்து தந்த அந்தக் கடைகாரனுக்கு நன்றி செலுத்திவிட்டு சிலையுடன் வெளியே வந்தனர். அந்த அழகிய உருவச் சிலையை யெடுத்த அந்த அணங்கும் அவளது தோழியும் அச்சிலையின் அழகினால் உண்டாய மகிழ்ச்சியில் ஆழ்ந்து வழியில் யார், நிற்கின்றனர் என்பதையும் கவனியாது வேகமாகச் சென்றனர்.

இந்த வேடிக்கையைக் கண்ட அவ்விரு நண்பர்களும் அவர்களைப் பின் தொடரலாயினர். சந்தித்துப் பேசத் துடித்தான் சந்திரகுமார். இதையுணர்ந்த சேகர் சற்று யோசித்துச் 'சந்திரா! சந்திரா!' என்கிறான்.

அவ்விரு பெண்மணிகளும் தங்கள் காரில் சென்றமர்ந்து புறப்படத் தயாரானார்கள். அங்கு ஓடோடியும் சென்று அவர்களை அப்படியே நிற்கவைத்து அவர்கள் உள்ளத்தை வியந்துபேச எண்ணினான் சந்திரன். ஓடவும் துணிந்தான். அதற்குள்,

சேகர்: சந்திரா! சந்திரா!

சந்திரன்: என்னைத் தடுக்காதே சேகர்.

சேகர்: மானம் போச்சு! சந்திரா! மானம் போச்சு! நில் இங்கேயே அவர்களைப் பின் தொடராதே! இதுவரை

பெற்ற புகழை இங்கு அழித்து மானங்கெடும் நிலையில் அவர்களைச் சந்திக்க ஓடுகின்றாயா? பொறு! பொறு! அவசரப்படாதே!

சந்திரன்: இங்குதான் இவர்களை சந்திக்க முடியும்! சேகர் என்னைவிடு! தயவு செய்து விடப்பா! கார் பறந்து விட்டதே! அத்துடன் என் உள்ளமும், உயிரும் அந்த உன்னத கிளியுடன் பறந்து விட்டதே! அந்தக் காரின் நெம்பர் என்ன என்பதைப் பாரப்பா சேகர்!

சேகர்; நெம்பர் எனக்குத் தெரியும். பார் இவர்களெல்லாரும் நம்மைப் பார்த்துக் கேலி செய்கின்றனர்.

சந்திரன்: சேகர்! கண்டு பல நாட்கள் ஆயினவே: அவள் என்னைப் பார்த்தாளா அல்லது பார்த்தும் பாராமல் சென்று விட்டாளா? அந்தச்சிலை என்னுருவம் போலத் தோன்றியதே!

சேகர்: மிரண்டவனுக்கு இருண்டதெல்லாம் பேய் என்பார்களே! அது உன் விஷயத்தில் சரிதான். நாம் நாளை அங்குச் செல்லலாம். இன்று இந்த மார்க்கெட் நிலவரத்தை உணரலாம் வாப்பா!

சந்திரன்: சேகர்! நல்ல சமயத்தில் தடுத்து விட்டாயே! உம்......ம்...... சரி!

[சற்று நேரத்திற்குப் பின்] அடடே! அந்தக் கார்தானு பார்.

சேகர்; அதுவேதான்......

சந்திரன்: டிரைவர், டிரைவர்! இங்குவாப்பா! அவர்கள் எங்கு இருக்கின்றனர்? சொல்லேன்.

டிரைவர்: எவர்கள்?

சந்திரன்: அட இப்பொழுது, ஒரு பொம்மையை எடுத்துக்கொண்டு உன் காரில் சென்றார்களே அவர்கள் தான்,

டிரைவர்: அவர்களா! மயிலாப்பூரில்தான் இருக்கின்றார்கள். உங்களைக்கூட வரச்சொன்னாங்க! ஆளைப்பாருங்க ஆளை.

சேகர் : டிரைவர்; அதெல்லாம் வேண்டாம், நீ போக லாம்! சந்திரா! இன்னுமா யோசனை! நாளை வீட்டிலேயே சந்திக்கலாம் வரப்பா!

சந்திரன் : சேகர்; இப்பொழுது சென்றால்தான் அந்த மலர்க் கண்ணுளைத் தனிமையில் காணமுடியும். விடை கொடு நண்பா! நீ சென்று ஹோட்டல் பிருந்தாவனத்தில் தங்கியிரு!

சேகர் : நீ அங்குச் சென்று பிருந்தாவனக் கண்ண ஞக மாறப் போகின்றாயா! உன் இஷ்டம்......உம்......ம் புறப்படு......டிரைவர்......டிரைவர்........கார் கொண்டு வா! சந்திரா உட்கார்ந்து; நிம்மதியாக இன்றுசென்று, நன்று கலந்து பழகி, காலைவிடியுமுன் என்னை வந்து சந்தித் தல் வேண்டும்,

சந்திரன் : அன்பின் நண்பா! வெற்றியோடு திரும்ப விடைகொடு!

சேகர் : சென்று செல்வியுடன் 'கொஞ்சி. இன்பமாய்ப் பாடி, இனிதே வாப்பா' சென்று வா?.. ...சீக்கிரம்......

* * * *

வாணி! வாணி! என்றழைத்த வண்ணம் மோகனு அன்று, தான் கடையில் பெற்றுவந்த பதுமையுடன் தன் பூங்காவில் புதிதாய் ஏற்படுத்திய ஓர் அழகிய இடத்தினை நாடியவண்ணமிருந்தாள். அந்தப் புதிய இடம் பழைய (திருச்சி) பூங்காவினை நினைவூட்டும் நிலையில் அமைந்திருந் தது, குன்றும் நீரோடையும் தவிர மற்றெல்லாம் அமைந் திருந்தன. அங்கிருந்த புன்னை மரத்தினடியில் அமைக்கப் பட்டிருந்த அந்தப் பளிங்கு மேடையில், தான் கொண்டு சென்றதுமையை, அந்தப் பூரணச் சந்திர தினத்தில் அங்கு வைத்து அழகு பார்க்க எண்ணி அங்குச் சென்றமர்ந்தாள். வாணியும் கொண்டுவந்திருந்த பதுமைக்கு வேண்டிய பட் டாடைகள், மோதிரங்கள், கைக்கடியாரம், கைக்குட்டை முதலியவற்றை மோகனுவிடம் தந்தாள். அவற்றையெல் லாம் ஒவ்வொன்ருக அப்பதுமைக்கு அணிவித்து அழகு பார்த்து ரசித்த வண்ணம் அமர்ந்திருந்தாள். பின்னர்

மோகனு, வாணி! அப்பா, அம்மா இன்னும் வரவில்லையா? என்ருள்.

வாணி: இல்லை மோகனு! அவர்கள் அப்படியே இரண்டாவது ஆட்டம் சினிமா பார்க்கச் சென்றுவிட்டார்களாம், டிரைவர் வந்து சொன்னுர்.

மோகனு: நல்ல சமயந்தானடி! ஆகா! இப்பொழுது அவர் இங்கு வந்தால்!......

வாணி: எப்படியிருந்தாலும் நாளை கட்டாயம் இங்கு வந்துதான் போவார்......

மோகனு: சீ! போடி? அதோ பார்.........வானில் முழு வெண்ணிலா! ஆனல்......என்......வாழ்வின்...முழு வெண்ணிலா வரக்காணுமே!......இந்தப் பதுமை என் அன்பரைவிட அழகாக இருக்கிறதல்லவா!

வாணி: அவருடைய உருவந்தானேயம்மா! அவர் வந்துவிட்டால் இப்பதுமையையும், அந்த வெண்ணிலாவையும்விட, அவர்தான் அழகுமிக்கவர் என்று வர்ணிக்க ஆரம்பித்து விடுவாய்......அல்லவா?

மோகனு: வாணி! இந்த வெண்ணிலாவுக்கேது என் காதலரின் முகவொளி!.........வெண்ணிலா! விண்ணிலே தவழும் வெண்மதி......

விண்ணில் ஓடித்தவழும் வெண்மதி... (பாடுகிருள்)

(தானன தனதன தனதனு
தன்னன தனதன தானனு)

1. விண்ணில் தவழும் வெண்மதியே
மண்ணில் மயங்கும் என்மதியே
(விண்ணில்)

புவனம் புகழ்ந்திடும் உன்னெளியே
கவிபுகழ் என்பதிக் கிணையிலையே
(விண்ணில்)

2. அன்பு முத்தம் வழங்கிடுமே
அற்புதச் சித்திரப் பதுமையுமே
வாழ்வின் ஒளிதான் வாராமுன்
தாழ்வுடன் நின்னெளி வரலாமோ ?
(விண்ணில்)

3. கண்ணில் காணும் சித்திரமே !
கருத்தைக் கவரும் சித்திரமே !
உளமதில் தோன்றும் சித்திரமே !
வளமது தந்திடுஞ் சித்திரமே !
(விண்ணில்)

4. இன்பம் எங்கும் பொங்கிடவே
அன்பு முத்தம் பெருகிடவே
விண்ணில் வெண்மதி மறைவாயே
வேண முத்தம் எய்திடவே !
(விண்ணில்)

5. விண்ணெளி வீசிடும் சந்திரனே
மண்புகழ் என்றன் சந்திரனே
கண்ணெளி கண்டு களித்திடவே
கண்யமாய் சென்று அழைத்திடுமே !
(விண்ணில்)

வாணி: *மோகனு ! இந்தப்பாலைச் சாப்பிடு !*

மோகனு: *பாலைக் கொண்டு பானையில் கொட்டம்மா.*

வாணி: *இந்தப் பழத்தைத்தான் சாப்பிடேன்.*

மோகனு: *பழமும் வேண்டாம்......ஒன்றும் வேண்டாம்.*

வாணி: *பரவாயில்லை வாங்கிக்கொள்.*

மோகனு: *இங்கே கொண்டுவா!*

*என்று வெடுக்காய்ப் பிடுங்கி வீசியெறிந்தாள், பழம் சென்று பூத்துக் குலுங்கிய ஒரு பெரிய செடியின் மேல் பட, அதிலிருந்து பூக்கள் பல பல வென்று கொட்ட, அவ்விடத்தினின்றும் ஒரு வாலிபன் வெளிப்*

பட்டான். வாணி கல கல வென்று சிரித்து அப்பால் ஓடி மறைகின்ருள். இக்காட்சியைக் கண்ட மோகஞ, தான் காண்பது கனவா! அல்லது நினைவா என்று கருதிக் கண்ணைத் துடைத்துத் தன் கனிவாய் திறந்து முல்லைப்பற்களைக் காட்டிய வண்ணம் மறுபக்கம் திரும்பினுள். அவ்விளங்குமரனும் அவளை நெருங்கி, "கனியை எறிந்த கன்னியே! மதியைப்பழித்து இப்பதுமையைப் புகழ்ந்த பொற்கொடியே! அற்புத அன்னமே! அகிலத்தின் சொர்ணமே! காணுதவள்போல் திரும்பிய கற்கண்டே! கனிவாய் திறந்து கனிவுடன் பேசி, அனல் நீக்கி, அன்பு மழை பொழிய, அதிலே, நாமின்பமடைய அடியேனைப் பாராயோ! வாருங்கள்; அமருங்கள்; என்றெல்லாம் செப்புவாயே இன்று ஏன் இந்நிலை அன்பே" என்றெல்லாம் பேசினுன்......

"அம்மம்ம! போதும்! போதும்! காது செவிடாகி விடும்போல் இருக்கின்றதே! இவ்வளவு புகழும் தாங்கள் இதுவரை வாராதிருந்த விந்தையாதோ?" என்ருள் மோகஞ. அந்தப் பதுமையின் அருகில் விரைந்தோடிச் சென்று அமர்ந்தாள். அங்குச் சென்றவுடன், "அன்புச் சித்திரமே! உன்னேடு நான் பேசமாட்டேன்........ உன்னைப் பார்க்கவே மாட்டேன்" என்று கூறி அந்தப் பதுமையையே பார்த்திருந்தாள்.

அவன்: பார்க்கமாட்டேன் என்று கூறி அதனையே கண்ணிமைக்காமல் பார்த்திருக்கும் கன்னியே! சற்றே என்னைப்பார்!

மோகஞ: வானிலோர் சந்திரன். வாழ்வில் ஓர் சந்திரன். விண்ணில் வாழ்சந்திரன் அடிக்கடி வந்து என்னைத் தொந்தரவு செய்கிருன். அவனை நான் விரும்பவில்லை. ஆனல் நான் விரும்பும் இந்த மண் புகழ் சந்திரன் வாராது தொந்தரவு கொடுத்ததேன்? [இதன் கருத்தையுணர்ந்த சந்திரகுமார் செல்லம் கொஞ்சும் பார்வையுடன் அவள் பின்பக்கமாகச் சென்று, மலர் ஒன்றைப் பறித்து வந்து அழகாய்ச் சூட்டி, இனிய வார்த்தைகளைப் பொழியலானுன்]

**சந்திரன்:** அன்பே! அவனி புகழ் பொன்மயிலே என் அகமகிழும் இன்பே.........

மோகனா: இது சொற்பொழிவு மன்றமல்ல......

அடுக்கடுக்காய்ப் பேசிச் செல்ல......

சந்திரன்: மாநாட்டில் ஏன் கலந்து கொள்ளவில்லை.

மோகனா: பெற்றோர் தரும் வேதனைதான். அது போகட்டும், நாங்கள் இங்கு தங்கியிருப்பது உங்களுக்கு எப்படித் தெரியும்?

சந்திரன்: எல்லாம் நம் வாணியின் அருளால்தான்,

மோகனா: வாணி தங்களிடம் வந்தாளா?

சந்திரன்: ஆம்: (அவள் பக்கமாகச் சென்றமர்கின்றான்) மகாநாட்டிற்கு செல்லும் சமயம் வந்து தெரிவித்தாள். மற்றும் இந்தச் சித்திரப் பதுமையை நீங்கள் வாங்கிக் காரில் வரும் பொழுதும் உங்களைக் கண்டேன். பின்... இவரே!......இங்கு வந்து விட்டார்......

இதற்குள் வாணியும் அங்குப் புன்னகையுடன் தோன்றி பலவகை யுண்டிகள், மனங்கவர் மணம் வாய்ந்த மலர்கள், வாசனைத் திரவியங்கள், தாம்பூலம் முதலியவற்றைக் கொணர்ந்து மோகனா கையில் அளித்துவிட்டு விரைவாகத் திரும்பினாள். மோகனா; வாணி! வாணி! என்றழைத்தும் கேளாதவள்போல் ஓடி மறைந்தாள் வாணி.

காதலர் இருவரும்... உண்டனர்; வாசனைப் பொருள்களை ஒருவர்மேல் ஒருவர் வீசி மகிழ்ந்தனர். தாம்பூலமணிந்தனர். பழைய நினைவு, பழைய இடம், பழகியதொரு உன்னத இடம்போல் தோன்றிற்று. இருவரும் மாயையில் மயங்குகின்றனர். வெண்மதியும் சற்றே நாணிய வண்ணம் மேகத்துள் மறைகின்றான் ..... பக்கத்தே மணல் திட்டு; சூழ்ந்திருந்தன மலர்ச்செடி கொடிகள். ஆகாய—சொப்பன இன்பலோக இடமாகத் தோன்றியது காதலர்க்கு...... இருவரும் கைகோத்த வண்ணம் சென்றனர் ஆங்கே! ஆங்கு ஆடிப்பாடி அன்பிணைப்பிலே திகழ்கின்றனர்.

சினிமா பார்க்கச் சென்றவர்கள் இல்லம் திரும்புகின்றனர். பூங்காவில் இன்பமாயிருந்த இருகாதலர்களும் எச்சரிக்கப்படுகின்றனர்; தோழி வாணியால். சந்திரகுமார் மோகனாவிடம் விடை கேட்கலானான். "சென்று வாரும்"

என்று விடை கொடுத்தாள் அந்தச் சித்திரப் பொன் கொடி. "நாளை காலை தோழருடன் அவசியம் வந்து போங்கள்" என்று கூறி அனுப்பி அவனையே கண்கொட்டாது பார்த்து நின்றாள். சிறிது நேரத்தில் சாலையின் மரங்களுக்கிடையில் மறைகின்றான் சந்திரகுமார். மேகம் விலக வெளிப்படுகின்றான் விண்ணுலகச் சந்திரன்.

"மறுநாள் காலை......எதிர் பார்த்தபடி நிகழவில்லை. சந்திரன் தான் அவசரமாகத் தோழனுடன் கோவை செல்லவேண்டியிருந்ததால் வர இயலவில்லை; எனவே மன்னிக்கவும்; என்று தோழி வாணிமூலம் தெரிவித்துச் சென்று விட்டதை யுணர்ந்த கன்னிமோகனா மனம் சற்றே கலங்கலுற்றாள். இருப்பினும் இரவு நடந்த நிகழ்ச்சியை எண்ணி மகிழ்ந்தாள்.

---

## 13 .நண்பர்களின் தீரச் செயல்

மற்றொருநாள் பயங்கரமான செயல் ஒன்று நிகழ்ந்ததை நோக்குவோம்:

காலை மணி ஆறு இருக்கலாம். இவ்விரு நண்பர்களும் தங்கள் கைத்துப்பாக்கிகளுடனும், அபாயக் கருவியுடனும் பக்கத்திலிருந்த ஏரியின் பக்கம் வேடிக்கையாகச் சென்றனர், அங்கு இடியும் நிலையிலிருந்த பெரிய மதகு ஒன்று இருந்தது. காட்டிலிருந்து இரைதேட வந்த புலியொன்று அம்மதகின் பக்கலில் படுத்துக் கொண்டிருந்தது. இதை அறியாமல் அவர்கள் அங்குச் செல்ல புலி சந்திரன் மீது பாய்ந்தது. இயல்பாகவே சந்திரன் வலிமைபடைத்தவன். வீரம், தைரியம், நன்கு அமையப்பெற்றவன். எனவே தன் மீது பாய்ந்த புலியை எதிர்த்துப் போராடினான். தன் இடது கையால் கீழ்த்தாடையையும், வலது கையால் மேல் தாடையையும் பிடித்துக் கிழித்தான். சேகர் தன் கைத் துப்பாக்கியால் புலியின் கழுத்தை நோக்கிச் சுட்டான். புலி ஹூர் ஹூர் என்ற சத்தத்துடன் கீழே சாய்கின்றது. சந்திரன் அதன் தலையைக் காலால் ஓங்கி மிதிக்கின்றான். புலி இறந்தது. அக்காட்சியைப் படம் பிடித்து

விட்டான் சேகர், சந்திரனின் உடலெங்கும் காயம். நமக்குப் புலி என்ருலே அச்சம். அப்படியிருக்க புலியையே எதிர்த்து நின்று, போராடிய நம் சந்திரனை அப்புலி என்னபாடு படுத்தியிருக்கும். சந்திரன் அதிர்ச்சியிஞல் கீழே சாய்ந்து மூர்ச்சையானன். சேகர், ஹா! நண்பா சந்திரா! என்றலறியவண்ணம் நெருங்கினன். நெருங்கியதுதான் தாமதம். திபிதிபென்ற சத்தம் கேட்கலாயிற்று. திருப்பினன் சேகர். கண்டான் கிண்டாமணியின் ஆட்களை. அந்த ஏரியின் மதகு மிகப்பெரியது அகன்றது; நீண்டது.

உடனே சேகர் தன் நண்பனைக் கட்டித் தழுவி, முத்தமிட்டு "நண்பா! பட்டகாலிலே படும், கெட்டகுடியே கெடும்" என்றதற்கு இலக்கானேமே! என்றவண்ணம் மூர்ச்சையுற்றிருந்த சந்திரனைத் தன் தோள்மேல் எடுத்துப் போட்டுக்கொண்டு, அவ்வேரியின் மதகினுள் புகுந்து அப்பால் ஓட எத்தனித்தான். இதற்குள் கிண்டாமணியின் ஆட்கள் நெருங்கிவிட்டனர். சேகர் எங்ஙனமோ, நண்பனைத் தூக்கிக்கொண்டு கண நேரத்தில் மதகினுள் புகுந்து ஏரியின் வெளிப்பக்க மடைந்தான்.

அக்கயவர்கள் மதகினுள் அடிவைத்ததுமே, இடிந்து விழும் அபாய நிலையிலிருந்த அம்மதகு, இடிந்து விழுந்தது, ஒருவனைத் தவிர எல்லோரும் உள்ளே அகப்பட்டுக்கொண்டனர். திமீல் என்ற சத்தத்தைக் கேட்டுத் திரும்பினன்; சேகர். மதகு இருந்த இடம் தெரியாமல், இடிந்து விழுந்ததைக் கண்டான். சேகர் தன் பாக்கெட்டிலிருந்த அபாயக்கருவியை அழுத்தலுற்ருன். அபாய ஒலியைக் கேட்ட போலிஸ் படை அவ்வொலி வந்த இடத்தினை நோக்கி அதிவேகமாய் வந்தது. மதகு விழுந்திருந்ததையும் உள்ளே அகப்பட்டோர் கூக்குரலையும் கேட்டனர்.

பக்கத்தில் சேகரன் தலைவிரி கோலமாய், கால்களைப் பரப்பி நின்றுகொண்டு, தோளில் தன் நண்பன் சந்திரனைத் தாங்கிய வண்ணம்; சந்திரனின் தேகத்தில் ஏற்பட்ட காயங்களில் இருந்து வடிந்த இரத்தம் சேகரைக் குளிப்பாட்டியதுபோன்று உடலெங்கும் வழிய, வலது கையால்

அபாய கருவியை அழுத்தியபடியே பிரம்மை பிடித்தவன் போல் அசைவற்று இருந்தான். ஏராளமான மக்கள் கூடி விட்டனர். சிலர் சேகரையும். சந்திரனையும் வைத்திய சிகிச்சைக்காக. வைத்தியசாலைக்கு எடுத்துச் சென்றனர். இதற்குள் மற்ற, நகர மக்கள் அனைவரும் இடிந்து விழுந்த மண்ணையும், கற்களையும் அப்பால் வாரிக் கணநேரத்தில் போட்டனர். அங்கு பதின்மருடைய உடல்களும் நசுக்கப் பட்டுக் கிடக்க ஒருவன் மட்டும் ஓரமாய்க்கிடந்தான். "ஐயோ! பாவி கிண்டாமணி! உன்னால் நாங்கள் மடிந்தோமே!" என்று கூறியவண்ணம் அவனுயிரும் உடலைவிட்டு நீங்கியது. இதைக்கேட்ட மக்களனைவரும் உள்ளங்கொதித்தெழுந்தனர்; கிண்டாமணியைத் தாக்கு வதற்கு. ஆனால் இன்ஸ்பெக்டர் கஞ்சன் கலகம் ஏற்படாத படி தடுத்து விடுகிறான்.

வைத்திய சிகிச்சை பெற்றுச் சுகமடைந்த சேகரும் சந்திரனும் ஒருவரை யொருவர் கட்டித்தழுவி ஆனந்தக் கண்ணீர் வடித்தனர். இதற்குள் பத்திரிகையில், "புலி யைக் கொன்றவீரர்கள்" என்ற தலைப்பில் செய்தி வெளி வந்தது. படங்களும் வெளியாயின.

மோகனா அந்தப் பத்திரிகையைக் கண்ணுற்றாள். அள வில்லா மகிழ்ச்சியுடன் ஓடுகின்றாள்; அண்ணன் இளங்கோ. வனிடம். இளங்கோவன் சந்திரனின் வீரச்செயலையும், சேகரனின் தன்னலமற்ற தியாகத்தையும் புகழ்ந்தவனாய், அவர்களைக் காப்பாற்றிய இறைவனைப் போற்றினன், மோகனாவும் தன் காதலனையும், காதலன் நண்பனையும் காத்த இறைவனைத் துதித்தாள்.

இளங்கோவன் தங்கையின் மணவிஷயத்தைப்பற்றித் தூண்டலானான். அவன் பெற்றோர் நல்லப்பனுக்கே கொடுக்க வேண்டுமெனச் சாதிக்கின்றனர். சந்திரன் பெயரைச் சொன்னால் ஒரே வெறுப்புதான். இளங்கோ வன் எவ்வளவோ சொல்லிப் பார்க்கிறான். ஆனால் பணத் தாசையினால் மறுத்து விடுகின்றனர் அவன் பெற்றோர், மறுத்தது மன்றியும் மணம் செய்விக்க நாளையும் குறிப்பிடு கின்றனர். இதையுணர்ந்த இளங்கோவன் சென்னையை விட்டுத் திருச்சியை நாடலானான்; சிற்றப்பாவிடம்.

# 14. மோகனா வீட்டை விட்டு வெளியேறல்

நாள் நெருங்கியது. சென்ற தமையன் திரும்பவில்லை என்று மனக் கொதிப்படைந்தாள் மோகனா! என் செய்வாள்! திருமணம் நடக்க நாட்கள் நான்குதான் உள்ளன. அண்ணன் வரவில்லை. எனவே தன் காதலனை நேரிலேயே சென்று கண்டு மணம் புரிந்து கொள்வதுதான் சிறந்தவழி யென்றெண்ணி அன்றிரவு புகைவண்டியில் தோழி வாணியுடன் புறப்படுகின்றாள் கோவைக்கு. இரவில் புகைவண்டி ஏறிச் சென்றவர்கள் வண்டி சென்றுகொண்டிருக்கையில் தங்களையும் மறந்து உறக்கமடைந்தார்கள். இவர்கள் கொண்டு சென்றிருந்த பெட்டி காணப்படவில்லை. எவரோ திருடி விட்டனர். நகைகள், பணம் டிக்கட்டு இவையனைத்தையும் இழந்தனர்.

இடையில் விழித்துப் பார்த்த மோகனா பெட்டியைக் காணாமல் திடுக்கிடுகின்றாள். புகை வண்டியும் ஜோலார் பேட்டையை அடைகின்றது. கோவை செல்ல வண்டி மாற வேண்டுமல்லவா! டிக்கட்டோ பெட்டியுடன் போய்விட்டது. கையில் சில்லரைக்காசுமில்லை, என் செய்வார்கள் பாவம். மோகனாவும் வாணியும் தவித்தனர்.

இவ்வாறு இவர்கள் தவித்துக் கொண்டிருக்கையில் அவ்விடத்தில் ஓர் அம்மையார் வருகின்றார். அவ்வம்மையார் மோகனாவின் நிலையை யறிந்து, தான் இருப்பது மைசூர் என்றும், ஆங்குள்ள ஒரு பெண்கள் உயர்நிலைப் பள்ளியில், தான் தலைமைஆசிரியை என்றும், அப்பள்ளியில் ஓர் ஆசிரியை தேவையென்றும், அத்தேவையைப் பூர்த்தி செய்ய மோகனா தகுதி வாய்ந்தவளென்றுங் கூறி அழைத்தார்; மைசூருக்கு.

மோகனாவும், தன்னை அந்த ஆதரவற்ற நேரத்தில் ஆதரிக்கவந்த அவ்வம்மைக்கு நன்றி செலுத்தினாள். சந்திரனைக் காணச் சென்ற மோகனா விதியின் செயலால் மைசூருக்குச் செல்லவும் இசைந்தாள். ஏனென்றால், அத்தலைமை ஆசிரியை வைத்துக்கொண்டிருந்த அன்றைய "தினசரி" பத்திரிகையை வாங்கிப் படித்தாள். அதில்

கோவையிலுள்ள தமிழப்பன் மில் தொழிற்சாலை நண்பர்கள் இருவரும் வியாபாரத்தின் நிமித்தம் வெளிநாடு செல்லப்போவதாகக் கண்டிருந்தது, அதைப் படித்த மோகனு மேற் கண்டவாறு மைசூர் செல்லத் தீர்மானித்தாள். அவ்வம்மையார் அனைவர்க்கும் டிக்கட்டுகள் வாங்கி மைசூர் செல்லும் புகைவண்டியில் ஏறினர். மைசூரை யடைந்த மோகனுவிற்கு, அவ்வம்மையார் தன் வீட்டை யடுத்தாற்போல், இருந்த ஒரு வீட்டை அமர்த்தி அங்கிருந்து வர உதவியளித்தார். மோகனுவும் தோழி வாணியும் அவ்வீட்டில் இருந்து வந்தனர். அவ்வம்மையார் வேண்டிய பல உதவிகள் அவ்வப்பொழுது செய்து வந்தனர். மோகனு பெண்கள் உயர்நிலைப்பள்ளியில் ஆசிரியராக இருந்து கொண்டு மாணவிகளுக்கு நன்ருகக் கல்வி பயிற்றுவித்து, நற்புகழுடன் திகழ்ந்தாள். பள்ளியில் நற்பெயர். வாழ்வில் கலக்கம். வாட்ட முற்ற வனிதாமணி வாழ்வில் காணும் உலகையும், உலகின் இயற்கையான உன்னதப் பொருள்களையும், அவ்வுலகினைப் படைத்த இயற்கை அன்னையையும் எண்ணுகின்ருள், மனம் உருகி, அன்னையை—அகில மெங்கும் நிறைந்த அன்னையை வணங்கிப்பாட எண்ணினுள். தன்னை மட்டுமின்றி உலகில் தன்னைப்போல் தவிக்கும் அனைவருக்கும் அருள்தந்து ஆதரிக்க வேண்டும் தாயே என்றமுதவண்ணம் பாடத் தொடங்கினுள்......(பாடுதல்)

"அன்னை வணக்கம்"

அம்மா! அம்மா! அம்மா!

அவனியெங்கும் நிறைந்த எங்களம்மா அருளம்மா!
புவனமதைப் பேணிக்காக்கும் பெற்றவளே யம்மா!

அம்மா! அம்மா! அம்மா!

மாநிலமும் மாக்கடலும் மாபெரும் விண்ணும்
நாற்றிசையும் தங்கியுள நல்லுலகம் எங்கும்
அன்பாகி அருளாகி அகிலத்தின் தாயாய்ப்
பண்பாகிப் பணியாற்றும் பாருலகும் ஆனுய்!

அம்மா! அம்மா! அம்மா!

அன்பால் இவ்வுலகை யாண்ட ஆன்றோர்க்குந்தாயாய்
அமைந்தசிறு அணுக்களுக்கும் அன்னையாக ஆனாய்!

அம்மா! அம்மா! அம்மா!

செங்கதிரோனுஞ் செம்மையாக வானிலே
தங்காமலேநாளுந் தோன்றிமறையும் பண்பிலே
மாமதி தானுமந்த மந்தகாச இரவிலே
மாநில மதனிலே மறைந்து மறைந்து தோன்றிடும்
நாட்களதனிலே தோன்றித் தோன்றி வருத்திடும்
வஞ்சனை நோயால் பொல்லா வம்பர் தொல்லையால்
அவதிப்பட்டழும் எமை யாதரித் தருள்வாய்!
அவனியின் தாயே எமை யாதரித் தருள்வாய்!

அம்மா! அம்மா! அம்மா!

மனமிரங்கி யருள்புரிவாய் மாநிலத்தின் அன்னையே!
என்பில்லா உயிர்கள் முதல் எவ்வுயிர்க்கும் அன்னையே!
ஏய்கியமும் ஏழைதமை யாதரிப்பாய் அம்மையே!
எங்கும் நிறைந்த அன்னையே அருள்புரிவாய்
அன்னையே!

அம்மா! அம்மா! அம்மா!

நாளும் மக்கள் நானிலத்தில்
நன்றாக வாழ்ந்திடவே!
ஆளும் எங்கள் அன்னையே
அருள் புரிவாய் அன்னையே!

அம்மா! அம்மா! அம்மா!
அம்மா! அருளம்மா! எமதம்மா! ஓ அம்மா!
அம்மா! அம்மா! அம்மா!

மோகன வெளியேறியவுடன் அவளைத் தேடுவதற்
காகப் புறப்பட்டனர்; பெற்றோர்கள். பயனில்லை—இருக்
கும் இடம் தெரியவில்லை. இவர்கள் இங்ஙனம் தேடிக்
கொண்டிருக்கட்டும்.

# 15. சந்திரன் தங்கையின் தவிப்பு

கோவையில் கிண்டாமணி சந்திரனை அவ்விடத்தினின்றும் விரட்ட சூழ்ச்சி செய்கின்முன். சந்திரனுடைய சொந்த ஊர் மகாபலிபுரம் என்பதையும் அவனுக்கொரு அழகிய தங்கை உண்டு என்பதையும் எப்படியோ அறிந்து கொள்கின்முன். தன் கடல் கொள்ளைக் கூட்டத்தை மகாபலிபுரத்திற்கு அனுப்பி சந்திரன் தங்கையை கடத்திச் செல்ல ஏற்பாடு செய்கின்முன். இவ்வாறு செய்வதால் சந்திரன் கோவையை விட்டு நீங்கி விடுவான் என்று மனப்பால் குடித்தான் கிண்டாமணி.

அவன் செய்த ஏற்பாட்டின்படி கடல் கொள்ளைக் கூட்டத்தினர் மகாபலிபுரத்திற்கு வந்தனர். அன்றுதான் கமலாசனி S. S, L. C. வகுப்பில் தேர்ச்சி பெற்று, கையில் அத்தாட்சிப் பத்திரத்துடன் திருக்கழுக்குன்றத்திலிருந்து மகாபலி புரத்தினை நாடலானுள். கிண்டாமணியின் ஆட்கள், அப்பெண்ணணங்கினைக் கண்டதும் தூக்கிச்சென்று கப்பலிலேறி கடலுக்குள் நெடுந் தொலைவு சென்று மறைந்தனர். கமலாசனி என் செய்வாள் ? அழுதவண்ணமாகவே சென்முள்.

கிண்டாமணி அக் கூட்டத்தை வெளி நாடுகளில் சென்று, திருடிவருமாறும் கட்டளையிட்டிருந்தான். கப்பலில் கமலாசனி, கட்டுக்கடங்கா கண்ணீர் சிந்தி விசனத்துடனிருந்தாள், அவளுக்குத் துணையாகச் சில மாதர்களும் அக் கப்பலில் இருந்தனர். கள்ளக் கூட்டத்தினர் கப்பலைக் குதூகலத்துடன் செலுத்தலாயினர். கப்பல் திசை தப்பி ஒரு தீவை யடைகின்றது,

அத் தீவில் உள்ள மக்கள் மிலேச்சர்கள் எனப்படுவார்கள். நரமாமிசம் புசிக்கும் நாகர்கள். அவர்கள், கப்பல் அவ் வழியாகச் சென்ருல், கப்பலைத் தாக்கி அதில் உள்ள பொருட்களையும், ஆட்களையும் எடுத்துச் செல்வர். ஆட்களைக் கொழுக்க வைத்துப் பின், ஆடு மாடுகளைப் போன்று கொன்று தின்பது வழக்கம். பெண்டிராக விருப்

பின் அவர்களை ஒன்றும் செய்யாது காப்பாற்றுவது வழக்கம்.

இக் கள்வர்களின் கப்பலும் அத் தீவையே நாடியது. உடனே மிலேச்சர்கள் சூழ்ந்தனர். இவர்களனைவரையும் கட்டித்தூக்கிச் சென்றனர். கமலாசனியும், மற்றப்பெண்களும் உடனழைத்துச் செல்லப்படுகின்றனர்.

சின்னாட்களில் கிண்டாமணியின் ஆட்கள் அனைவரும் மிலேச்சர்களால் கொல்லப்பட்டு இரையாக்கப்படுகின்றனர். சந்திரனின் தங்கை அத்தீவின் தலைவனால் மகள் போலச் சீருஞ் சிறப்புமாக வளர்க்கப்பட்டு வருகின்றாள்,

* * *

## 16: கிண்டாமணியும் குடிலனும்

மோகனா மைசூரிலுள்ள பெண்டிர் உயர்நிலைப் பள்ளியில் ஆசிரியைப்பதவியில் இருந்து வந்தாளல்லவா! அவள் பள்ளிக்குச் செல்லும் பொழுதும், பள்ளியிலிருந்து தன் வீட்டிற்குத் திரும்பும்பொழுதும் பலமுறை கண்ட ஒரு காமுகன் - மோகனாவின் அழகிலும் அவளுருவத்திலும் மெய்ம்மறந்து மோகனாவை எங்ஙனமேனும் அடைய வேண்டுமெனத் திட்டம்போட்டான். அக்கயவன் செல்வம் படைத்தவன்; பெயர் குடிலன் என்பது.

ஒருநாள் மாலை மணி ஐந்து இருக்கலாம். குடிலன் தன் ஆள் ஒருவனிடம் சீட்டு ஒன்றைக் கொடுத்தனுப்பலுற்றான் மோகனாவிற்கு. அச் சீட்டில், தான் பெரிய பணக்காரனெனவும், தன் மனைவி இறந்து விட்டாள் எனவும் மோகனாவை, தான் திருமணம் செய்து கொள்ள விரும்புவதாகவும் வரையப்பட்டிருந்தது,

இதைக் கண்ணுற்ற மோகனா முகம் மாறுபட்டுச் சீற்றங் கொண்டவளாய் கண்கள் சிவக்க, "சீ நாயே!"

என்று அச்சீட்டைக் கொண்டு வந்தவன் முகத்தின் மீதில் எறிந்தாள். கொண்டு வந்தவன் சீட்டை எடுத்துக் கொண்டோடி நிகழ்ந்ததைக் குடிலனிடம் தெரிவித்தான். இதைக் கேட்ட குடிலன் கண்கள் சிவக்க, மீசை துடிக்க, "அடி கள்ளி! உனக்கு இவ்வளவு ஆயிற்று! உன்னை என்ன பாடு படுத்துகின்றேன் பார்!" என்று சொல்லியவண்ணம், தன் ஆட்களுள் நான்குபேரைத் தயாராக்கி இரவு பன்னிரண்டு மணிக்கு மோகனாவின் இல்லத்தில் நுழையவேண்டுமெனத் திட்டம் போட்டான்.

பகலவனும் இந்தப்பாவி குடிலன் முகத்தில் விழிப்பதும் பாவம் என்று கருதியவன்போல மேற்றிசையில் சாய்ந்தான். மாலை நீங்கி இருள் சூழ்ந்தது. இரவு மணி பன்னிரண்டும் ஆயிற்று. உடனே அக்குடிலன் தன் சகாக்களுடன், மோகனாவின் மாளிகையை நோக்கி நடந்தான்,

மோகனாவும், தோழி வாணியும் எப்பொழுதும் ஆண் உடைதரித்தே இரவில் உறங்குவது வழக்கம். எனவே எப்பொழுதும் போல் அன்றும் ஆண் உடை தரித்துக் கொண்டு படுக்கையறையை அடைந்தனர். உடனே ஒரு கார்வந்து நிற்கிறது. மோகனாவின் வீட்டை அடைந்த குடிலனும் அவன் ஆட்களும் உள்ளே நுழைய முயன்றனர். ஆனால் வாயில் தாளிட்டு இருந்ததால் நுழைய முடியவில்லை. எனவே சுவர் ஏறிக் குதித்தனர். மேல் மாடியை அடைய, கயிறுகொண்டு ஏறலாயினர், அனைவரும் ஏறிய பின் இறுதியாகக் குடிலன் ஏறலானான்.

மேல் மாடியில் சென்ற நால்வரும் மோகனாவைத்தேடலுற்றார்கள், இறுதியாக ஏறிவந்த குடிலனை எவ்வாறோ கண்டு விட்டாள் வாணி. கண்டவுடன் கயிற்றை அறுத்து விடுகின்றாள். பாதி வரையில் ஏறிய அக்குடிலன் அம்மா, அப்பா! என்று கீழே வீழ்ந்து மூர்ச்சையாகின்றான். அவன் காலில் பலத்த அடிபட்டது.

தோழி வாணி இச் செய்தியைத் தெரிவிக்க மோகனாவிடம் ஓடுகின்றாள். ஓடியவள் திடுக்கிடுகின்றாள். மோகனா

நான்கு ஆடவர்களுடன் கடுமையாகக் கோல்கொண்டு சுழற்றித் தாக்குவதைக் கண்டாள். வாணியும் ஓர் உலக்கையை யெடுத்துவந்து அவர்களை ஓடி ஓடிக் குத்தலானாள். குத்தடிபட்ட கள்வர்களில் இருவர் வாணியைத் தாக்கலானார்கள்: வாணியும் தன்னால் இயன்றவரை யுத்தம் செய்யலானாள்.

இதற்குள் மோகனாவின் கைக்கோல் முறிந்து விடுகின்றது. உடனே அவளைப் பிடித்துக் கட்டுகின்றனர், வாணியையும் அவ்வாறே பிடித்துக் கட்டுகின்றனர். இருவரையும் காரில் தூக்கிப் போட்டுக்கொண்டு புறப்பட எண்ணியபோது குடிலனைக் காணாது பின் பக்கம் ஓடினர், குடிலன் அங்கு அடிப்பட்டு மூர்ச்சையாய்க் கிடந்தான், அவனையும் தூக்கிவந்து காரில் அமர்த்தினர். கார் குடிலன் வீட்டை நோக்கிப் புறப்பட்டது.

அந் நேரத்தில் குடிலன் வீட்டிற்கு கிண்டாமணி வந்திருந்தான். குடிலன் அவனுடைய உறவினன். வந்தவன் தன் காரைத் தெருவில் விட்டு விட்டுத் திண்ணையில் சிலருடன் உட்கார்ந்து கொண்டிருந்தான். குடிலனின் கார் அங்கே வந்து சேர்ந்தது. குடிலன் நொண்டி; நொண்டி வீட்டினுள்ளே நுழைந்தான். கட்டப்பட்ட அவ்விருபெண்களும் உள்ளே தூக்கிச் செல்லப்படுகின்றனர்.

கிண்டாமணியைக் கண்ட குடிலன் வரவேண்டும்! வரவேண்டும் என்று வரவேற்ற வண்ணம் உள்ளே அழைத்துச் செல்கின்றான்.

பெண்கள் இருவரையும் ஒரு அறையில் தள்ளி கட்டுகளை அவிழ்த்து விட்டு மூடிவிடுகின்றனர். கள்வர் தலைவன் கிண்டாமணியும் காமுகன் குடிலனும் நாற்காலிகளில் அமர்ந்த வண்ணம் சில உரையாடல் நிகழ்த்தலாயினர்,

கிண்டாமணி: குடிலரே! அப்பெண்கள் யாவர்? ஏன் அவ்வாறு இந்நேரத்தில் கட்டித் தூக்கி வந்துள்ளீர்?

குடிலன்: என்னாங்க போங்க! என் மனைவி இறந்து விட்டாளல்லவா?

கிண்டாமணி: ஆமாம் அதற்காக.. ......

குடிலன்: அதற்காகத்தான் இப்பெண்ணைக் கண்டு மணக்கலா மென்றிருந்தேன்.

கிண்டாமணி: என்ன செய்தீர்?

குடிலன்: ஒரு நாள் கடிதம் வரைந்தனுப்பினால்...

கிண்டாமணி: யாருக்கு வரைந்தீர்?......

குடிலன்: இங்குள்ள பெண்களில் ஒருத்தியான மோகனாவிற்கு......

கிண்டாமணி: அதற்கவள் என்ன செய்தாள்?

குடிலன்: சீட்டு கொண்டு சென்றவனைச் சீ! நாயே! என்று திட்டினாளாம் அக்கள்ளி. அதனாற்றான் எனக்குக் கோபம் வந்துவிட்டது.

கிண்டாமணி; கோபம் வரவே கட்டித் தூக்கிவந்து விட்டீர்களாக்கும்.

குடிலன்; ஆமாங்க...அதற்கு என்ன செய்யலாம்? அப்பெண்ணோ ஆசிரியை. மேலும் இந்நகரில் புகழடைந்தவள். இதற்கென்னவழி?

கிண்டாமணி; வழி என்ன?

குடிலன்: அவள் மனத்தை மாற்ற அவளை இந்நகரில் வைத்துக் கொண்டிருந்தால் முடியாதே! அப்படி வைத்துக்கொண்டிருந்தாலும் ஆபத்தாச்சே!

கிண்டாமணி: அப்பொழுது எனக்கு ஒரு வழி தோன்றுது!

குடிலன்: என்னங்க அது?

கிண்டாமணி: யான் இங்கு வந்தது ஒருவர்க்கும் தெரியாதல்லவா?

குடிலன்: ஆமாம் அதனால்......

கிண்டாமணி: எனவே, யான் வந்த காரிலேயே இப் பெண்களைத் தூக்கிக்கொண்டு கோவை செல்லுகின்றேன். பின்னர் உமதிஷ்டப்படி நடக்க நான் தயாராகின்றேன்.

ருடிலன்: இதுதான் தக்கயோசனை. அங்ஙனமே ஆகட்டும்.

உடனே இரு பெண்களையும் கிண்டாமணியின் காரில் தூக்கிப்போட கார் கோவைக்குப் புறப்பட்டது. காரை வேகமாகச் செலுத்தலானன். கிடைத்த கனிகள் இரண்டையும் தனக்கே உபயோகித்துக் கொள்ளலாம் என்று மனக்கோட்டை கட்டினன். கார் ஒரு காட்டின் வழி வேகமாகச் சென்றுகொண்டிருந்தது.

மோகனவின் மீதில் ஜில் என்று காற்று வீச மூர்ச்சை தெளிந்தெழுந்தாள். வாணியும் மூர்ச்சை தெளிந்தெழுந்தாள். இரு பெண்களும் விழித்துப் பார்க்கையில் பெருங்காட்டில் அக்கார் சென்றுகொண்டிருப்பதையும், முரடன் ஒருவன் ஓட்டிச் செல்வதையும் கண்டனர். தோழி வாணி மோகனவிடம் ஏதோ சில ரகசியம் கூறினள். உடனே மோகன, "என்னங்க சார்! கார் எங்கே போறது?" என்று கிண்டாமணியைக் கேட்டாள்.

கிண்டாமணி: கோவைக்கு!

மோகன: ஏன்?

கிண்டாமணி: உங்கள் தலைவர் அழைத்துச் செல்லச் சொன்னர்.

மோகன: எங்கள் தலைவரா? யார் அவர்?

கிண்டாமணி: வாயை மூடு. பேசாதே!

மோகன: எனக்கு மாரடைப்பது போல் இருக்கிறது. தண்ணீர் வேண்டும்.

கிண்டாமணி என்னடா சனியன் என்று குறுக்கிட்ட ஒரு ஓடையருகில் காரை நிறுத்தி அவர்களை அனுப்பினன்.

அவர்கள் தண்ணீர் குடித்துவிட்டு வந்து காரில் உட்கார்ந்தனர். கிண்டாமணி தானும் தண்ணீர் குடிக்கக் கருதி கீழே இறங்கினான். அவன் சிறிது தூரம் சென்றதும் வாணி விரைவாகக் காரைச் செலுத்தலானாள். கிண்டாமணி திடுக்கிட்டு சிறிது தூரம் ஓடிவந்து பின்னர் தலைவிதியை நொந்து கொண்டு மெல்ல நடந்து போனான். பக்கத்திலிருந்த ஒரு ரயில் நிலையத்திற்குச் சென்று வண்டியேறிக் கோவையை அடைந்தான்.

## 17. நாடோடிக் கூட்டத்தில் மோகனாவும், வாணியும்

இப்பால் மோகனாவும், வாணியும் ஒரு நாடோடிக் கூட்டம் கூடாரம் அடித்துத் தங்கியிருந்ததைக் கண்டார்கள். அக்கூட்டம் தங்கியிருந்ததைக் கண்ணுற்ற இவ்விரு பெண்களும் அங்கே மோட்டாரில் இருந்த ஹாரினை அழுத்த நாடோடிகள் அனைவரும் காரைச் சூழ்ந்து நிறுத்தினர், நாடோடிகளின் தலைவன் பெண்களின் அழகைக் கண்டு அவர்களைத் தம்முடன் இருத்தி ஆடல் பாடல் கற்றுக்கொடுத்து ஆட்டவும் பாடவும் வைத்தால் நன்றாயிருக்கும்:நல்ல ஊதியம் கிடைக்கும் என்று எண்ணுகின்றான். உடனே அப்பெண்களை இறக்கி அழைத்துச் செல்லும்படி தன் ஆட்களுக்குக் கட்டளையிடுகின்றான். பின்னர் அந்தக் காரை எவரும் அணுக முடியாத ஓர் இடத்திற்குத் த்ள்ளிச் சென்று உடைத்து விடும்படி கட்டளையிட்டான். கண நேரத்தில் கார் மறைந்து நொறுங்குண்டது.

நாடோடிகளின் தலைவன் இரங்கிய உள்ளம் படைத்தவன். எனவே தன் குமார்த்திகளுடன் மோகனாவையும் தோழி வாணியையும் இரு குமார்த்திகளாக பாவிப்பதாக வாக்குறுதியளிக்கின்றான். இதைக்கேட்ட மோகனா ஒருவாறு ஆறுதலடைந்தாள். தோழி வாணியும் அமைதியுற்றாள்.

இது முதற்கொண்டு மோகனு செல்வமாக வளர்க்கப் பட்டு வருகின்றுள் நாடோடிகளிடம். மோகனுவும் சும்மா இல்லை. எங்ஙனமாவது காதலனைக் காண வேண்டு மென்ற பேரவா மனத்தில் இருந்துகொண்டே இருந்தது. மோகனு தன் இன்பக்கலையான நாட்டியத்தை முக்கிய நகரங்களிலெல்லாம் நாடோடிகளுடன் சேர்ந்து நடிக்க லானுள். காத்தனூர் என்னும் ஊரில் பெரிய சந்தை வழக்கம் போல் கூடிற்று. அவ்விடத்தை நாடிய நாடோ டிக் கூட்டம் "ஏதோ ஒன்று இருந்துகொண்டு உலகினை ஆட்டி வைக்கிறது" என்ற பொருளில் பாடத் தொடங் கினர். மோகனு, வாணி, உடன் சிலர் சேர்ந்து இந்தப் பாட்டைப் பாடவும், ஆடவும் தொடங்கினர்.

(பாடுதலும் ஒன்ருக ஆடுதலும்)

"ஒன்று உண்டு"

எங்கோ ஏதோ!

எங்கோ ஏதோ ஒன்று
இருந்து கொண்டு ஆட்டுதே!
இருந்து கொண்டு ஆட்டுதே!
உலகை.

எங்கோ ஏதோ!

எங்கோ ஏதோ ஒன்று
மறைந்து நின்று ஆட்டுதே!
மறைந்து நின்று ஆட்டுதே!

அம்மா வென்று!

அம்மா வென்று புவியில்
பிறந்த நாட்கள் முதலாக
பிறந்த நாட்கள் முதலாகக் குழந்தை

தத்தித் தவழ்ந்து எழுந்து நின்றும்
கைகளைக் காட்டிக் காட்டி யழைத்தும்
தளர்ந்து தளர்ந்து நடந்து வளர்ந்தும்
அம்மா அப்பா வென்றே அழைத்தும்
அளவில் அடங்கா அகன்றவிவ் வுலகில்

நம்போல் ஆகிடுமே! குழந்தை
நம்போல் ஆகிடுமே! அதன்பின்
ஆன்றோர் ஆகிடுமே! அதுவரை

கண்டு களித்த கணக்கில் அடங்கா

காட்சிகள் எத்தனையோ! இவ்வுலகில்
காட்சிகள் எத்தனையோ!

கண்ணைச் சிமிட்டும் நேரத்திற்குள்
கடுகி வந்திடுமே! புயலது
கடுகி வந்திடுமே! உடன்
கதிகலக்குங் கனத்த மழையுஞ்
சேர்ந்து பொழியுமே! அத்துடன்
அண்டம் வெடித்து போனற்போல
ஆட்டம் போட்டிடுமே! மின்னிடி
ஆட்டம் போட்டிடுமே!

அதன்பின்

எங்கும் வெள்ளம் எங்கும் வெள்ளம்
பொங்கி வழிந்திடுமே! எங்கும்
பொங்கி வழிந்திடுமே!

காடு கரம்பு மேடு பள்ளம்
நாடு வியக்கும் நதிகள் பலவும்
பெரிய குளங்கள் சிறிய ஓடைகள்

எங்கும் வெள்ளம் எங்கும் வெள்ளம்
நிறைந்தே ஓடுமே! எங்கும்
வழிந்தே ஓடுமே!

எங்கும் இன்பக் காட்சியை நல்கி
எழுந்தே வளர்ந்திடுமே! இயற்கை
வளர்ந்தே ஓங்கிடுமே!

இயற்கைக் காட்சிகள் செற்கைக் காட்சிகள்
மலையின் உன்னத மாண்புறு தோற்றங்கள்
கண்ணைக் கவரும் கானகக் காட்சிகள்
மனதை ஈர்க்கும் மலர்களின் மாட்சிகள்

எங்கும் இன்பம் இன்பம் என்றே
இருக்கக் காண்குவமே — காட்சிகள்
இருக்கக் காண்குவமே!

மனமதைச் சற்றே நிறுத்தி யாழ்ந்தால்
கனமது அற்ற எறும்பு முதலாய்
கனத்துப் பெருத்த யானை ஈருய்
ஜெகத்து வளருஞ் ஜீவனை யாழ்ந்தால்
மனமது மயங்கிச் சுழன்று ஆடிடுந்

தன்மை யாகிடுமே! ஆடிடுந்
தன்மை யாகிடுமே!

அத்துடன்

எண்ணி லடங்கா உயிர்கள் நிறைந்த
கண்ணி லடங்கா கடலைக் கண்டால்
எங்குங் குடைபோல் கவிழ்ந்து நின்று
கங்கு கரைதான் அற்றதே போன்று
வட்ட வடிவில் தோன்றிடு மந்த
இருண்ட வானைக் கண்டா லிந்த

மனமது கலங்கிடுமே! கண்டால்
கலங்கியே வாடிடுமே!

ஆனால் அந்த

நீல வானிலே நிகரில் லாத
வெண் கதிரோனும் செங்கதி ரோனும்
தோன்றி மறைந்தும் உலகைக் கண்டு
உறங்கச் செய்து விழிக்கச் செய்யும்
விந்தையை நினைந்தால் . நினைந்த கணமே
விந்தையை விளக்கும் அந்த ஒன்று
எங்கே எங்கே என்றே கேட்டால்

அது

எங்கோ ஏதோ ஒன்று
இருந்து கொண்டு ஆட்டுதே!
இருந்து கொண்டு ஆட்டுதே!

உலகை

எங்கோ ஏதோ ஒன்று
மறைந்து நின்று ஆட்டுதே!
மறைந்து நின்று ஆட்டுதே!

அந்த ஒன்றை நாம் நினைந்தே!
ஆழ்ந்து வணங்கிடுவோம்! வணங்கி
ஆடிப் பாடிடுவோம்!

எந்தப் பொழுதும் எங்கும் எதனுல்
எவ்விதத் துன்பம் நேர்ந்த போதும்
இங்கும் அங்கும் எங்கும் நிறைந்த
அந்த ஒன்றை அளவிலா ஒன்றை
வணங்கிப் போற்றிடுவோம்! இறையை
வணங்கிப் பாடிடுவோம்!

எங்கோ ஏதோ ஒன்று
இருந்து கொண்டு ஆட்டுதே!
இருந்து கொண்டு ஆட்டுதே!

அப்படி யாட்டும் அந்த இறையை
ஆடிப் பாடி வணங்கி நின்று

மகிழ்ந்து ஆடிடலாம்! வணங்கிப்
புகழ்ந்து பாடிடலாம்!

இவ்வாறு பாடியும், ஆடியும் வந்ததால் பொருள் வருவாய் நாடோடிகட்கு அதிகரித்தது. எனவே அனைவரும் மோகனாவின் நலத்தில் கண்ணுங் கருத்துமாயிருந்தனர். தோழி வாணி எப்பொழுதும்போல் மோகனாவுடன் அமர்ந்திருந்தாள்.

நாட்கள் பல சென்றன. சிறந்த நகரங்களிலெல்லாம் நற்புகழுடன் நடித்துப் பொற்குவியலைத் திரட்டித் தந்தாள்; நாடோடிகட்கு மோகனா. இவ்வாறு நகரங்களி லெல்லாம் சென்று பின்னர் இறுதியாக கோவையை நோக்கிய வண்ணம் செல்லலாயினர்; நாடோடிக் கூட்டத்தினர்.

நாடோடிக் கூட்டம் கோவை சென்று கொண்டிருந்தது. இவர்கள் செல்லும் வழியில் கோவையை யடுத்தாற்போல் பெருங்காடு ஒன்று, அதே காட்டில்தான் கிண்டாமணியின் கள்ளக்கூட்டத்தினரில்சிலர் இருந்தனர். இக்கள்வர் கூட்டத்தினர் அந்நாடோடிக் கூட்டத்தைக் காண்டலும், உடனே சென்று அக்கூட்டத்தை வளைத்துக் கொண்டனர். அவ்வமயம் கிண்டாமணியும் உடன் இருந்தான். இருதரப்பிலும் போர் மூண்டது. நாடோடிகளும் வன்மை படைத்தவர்கள். எனவே எதிர் நின்று அவர்களும் தாக்கினர். இங்ஙனம் இருதரப்பிலும் போர் மும்மரமாக நடந்து கொண்டிருக்கையில், ஆங்கு ஓர் இடத்தில் நின்று கொண்டிருந்த மோகனாவையும், தோழி வாணியை

யும் கண்டான் கிண்டாமணி. இதுதான் தக்க சமயமென எண்ணி, சில ஆட்களை ஏவி அவ்விரு பெண்களையும் தூக்கிவரச் சொல்லியவுடன் சைகை ஒன்று செய்தான். உடனே கிண்டாமணியின் ஆட்கள் அனைவரும் திபி திபென்ற சத்தத்துடன் இரு பெண்களையும் தூக்கிக் கொண்டு குகையை நோக்கி ஓடலானார்கள்.

மோகனவையும், தோழி வாணியையும் இழந்த நாடோடிக் கூட்டம் வந்த வழியே திரும்பிச் சென்று விட்டது.

## 18. மோகனவும் வாணியும் சிறைப் படுதல்—தப்புதல்.

கிண்டாமணியும் அவன் ஆட்களும் குகையை நோக்கி ஓடினரல்லவா! அக்குகையிலிருந்து செல்லும் சுரங்கத்தின் வழியாகத் தன் கொல்லைப்புறத்தில் உள்ள பங்களாவை அடைந்தான். இவ்விரு பெண்களையும் அங்கே கட்டித் தூக்கிச் செல்கின்றனர்.

கொல்லைப்புறத்தில் உள்ள மாளிகையை அடைந்ததும் இருபெண்களையும் தனித்தனி அறையில் விட்டு, தாளிட்டனர்.

இப்பால் சந்திரனும், சேகரனும் மாளிகையில் உறங்கச் சென்றவர்கள் ஏதோ சில ரகசியங்களைப்பற்றிப் பேசலானார்கள்.

சந்திரன்; சேகர்; நாம் அக்குகையில் இருந்து செல்வத்தை யெல்லாம் வாரிச் சென்றோமல்லவா?

சேகர்: ஆமாம் அதற்கென்ன?

சந்திரன்: அக்குகையை நாம் நன்கு ஆராய்ந்தோமா?

சேகர்: இல்லை.

சந்திரன்: நாம் பொருளை வாரிக்கொண்டு திரும்பி வந்தோமன்றோ! அவ்வமயம் யான் கடைசியில் வந்தேன். ஏதோ ஓர் சத்தம் கேட்டுத் திரும்பிக் குகையின் பக்கம் நோக்கலானேன்.

சேகர் : நோக்கும் போது......

சந்திரன் : ஒரு மூலையில் பளிச்சென்று வெளிச்சம் ஒன்று தோன்றி மறைந்தது. அது என்னவோ என்று இருந்து விட்டேன்.

சேகர் : உனக்குப் பிரமையப்பா!

சந்திரன் : இல்லை சேகர். உண்மையாகத்தான்.

சேகர் : அப்பொழுதே சொல்லியிருந்தால்......

சந்திரன் : அது என் குற்றந்தான். அதுபோகட்டும். இப்பொழுது அக்குகையை ஆராய்ந்து பார்க்கலாமா?

சேகர் : எதற்கப்பா? நமக்கோ வேறு வேலை நிரம்ப உண்டே.

சந்திரன் : அது கூடாது. நம் வாழ்க்கையில் சோர்வு என்பதே கூடாதன்றோ! எனவே நாம் இன்றே ஆராயப் புகுதல்தான் சாலச்சிறந்தது.

சேகர் : இவ்வளவு துணிந்துவிட்டாயா? மெச்சினேன் உன்வீரத்தை. அப்பொழுது காலையிலேயே நாம் நம் வேலையை ஆரம்பித்து விட்டாற்போகின்றது.

சந்திரன் : அங்ஙனமே ஆகட்டும்.

(பின் இருவரும் உறங்கி விடுகின்றனர்)

* * *

கிண்டாமணி தன் கொல்லைப் புறத்திலிருந்த மாளிகையில் சிறைவைக்கப்பட்டிருந்த மோகனுவிற்கும், வாணிக்கும் இரண்டிரண்டு ஆட்களைக் காவல் வைத்துவிட்டு, சென்று விடுகின்றான். தோழி வாணி பலே கெட்டிக்காரி. எனவே தனக்காக இருக்கும் இருகாவலர்களையும் அறையினுள்ளிருந்த வண்ணமாகவே அழைத்தாள். வாணி பேசிய மொழிகளைக் கேட்ட அக்காவலர்கள் கதவைத்திறந்து உள்ளே செல்கின்றனர். வாணி பாசாங்கு நடிப்பு நடித்து அவர்களின் விருப்பப்படித் தான் நடந்து கொளவதாகத் தெரிவிக்கின்றாள். இப்பாசாங்கு மொழிகளைக் கேட்ட அவர்கள் மயங்கலுற்றார்கள். எனவே தந்திரமாக சுரங்கத்தின் வழி எங்குள்ளதென்றும், எப்படிச் சொல்லலாமென்றும் கேட்டுத் தெரிந்து கொள்கின்றாள். உடனுக்குடன்

தான் வெளிச் சென்று வருவதாகத் தெரிவிக்கின்றாள். அவர்கள் தயங்கினர்.

பின்னர் மயங்கிய காரணத்தினால் விட்டு விடுகின்றனர். இதுதான் தக்கசமயமென்றெண்ணிய வாணி, சுரங்கத்தின் வழியைத் திறந்து கொண்டு வெகு வேகமாகச் சென்று கொண்டேயிருந்தாள். இதற்குள் பொழுதும் புலர்ந்தது.

*  *  *

சந்திரனும், சேகரனும் அதே சமயத்தில் அக்குகையை அடைந்து ஆராய்ந்தனர்.

குகையின் ஒரு சுவரில் மறை ஒன்றிருந்தது. அம் மறையைக்கண்ட சேகர் அதனைச் சுழற்றலானான். உடனே பாதாளச்சுரங்கத்தின் கதவு திறக்கப்படுகின்றது. சந்திரன் சுரங்கம் எதுவரையில் செல்கின்றது என்பதை ஆராயத் தானே செல்வதாகக் கூறுகின்றான். சேகரும் உடன்வர இசைகின்றான். சந்திரன் மறுத்தான். எனவே சேகர் குகையிலேயே மறைவாக நின்றுகொண்டிருந்தான். சந்திரன் கைத்துப்பாக்கியுடன் உள்ளே செல்லத் துணிந்தான்.

வாணியும் அதே சமயத்தில் அச்சுரங்கத்தினுள் வந்து கொண்டேயிருந்தாள். சந்திரனும், வாணியும் எதிர் நோக்கியவண்ணம் சென்றுகொண்டே இருக்கலாயினர். வாணி சென்று அதிக நேரம் ஆகவே, காவலாளிகள் தோட்டத்தில் சென்று பார்க்கலானார்கள். பார்த்தவுடன் திடுக்கிட்டுச் சுரங்கத்தின் வழியே வாணியைப் பின்பற்றலானார்கள்.

வாணி சென்றுகொண்டே யிருக்கின்றாள். நில்! அப்பால் செல்லாதே என்ற குரல் கேட்கிறது. வாணி திடுக்கிட்டு நின்றாள். அருகில் நெருங்கிய சந்திரன், வாணியென்றறிந்து என்ன வாணி? ஏன் இங்கு வந்தாய்? என்கிறான். வாணி நிகழ்ந்தவற்றைத் தெரிவித்து, மோகனை இருக்குமிடத்தையும் தெரிவித்து. மோகனைவைக் காப்பாற்ற இதுதான் தக்க சமயமென்கிறாள். சந்திரனும் வாணியை

அழைத்துச் சென்று சேகரிடம் செய்தியைத் தெரிவித்து வேண்டிய போலீஸாருடன் உடனே அம் மாளிகைக்கு வரும்படி கூறினன். சேகரும் வாணியும் காரில் அமர்ந்து கோவையை நோக்கலாயினர்.

சந்திரன் மீண்டும் குகையினுள் நுழைந்து சென்று கொண்டே யிருந்தான். வாணியைத் தேடிவந்த இரு காவலர்களும் தங்கள் கைக் கோல்களால் சந்திரனைத் தாக்க முயன்றனர், உடனே 'நிறுத்துங்கள் : இன்றேல் சுட்டு விடுவேன்'' என்ருன் சந்திரன். வழிக்காட்டப் பணிக்கின்ருன் சந்திரன். அவர்களிருவரும் வழிகாட்டப் பின் தொடர்ந்தான் சந்திரன்.

அவ்வேளையில்தான் கிண்டாமணி அப்பங்களாவை அடைந்தான். அடைந்தவன் முதலில் வாணியைச் சென்று பார்க்கின்ருன். வாணி இல்லை. ஆங்கிருந்த காவலரையுங் காணும். எனவே திடுக்கிடுகின்ருன். உடனுக்குடன் தோட்டத்தில் சென்று பார்க்கின்ருன். பாதாளச் சுரங்கத்தின் வழி திறக்கப்பட்டிருந்ததைக் கண்டு திக்கிட்டு ஓடி வந்து மோகனவின் அறையைப் பாதுகாத்து வந்த இரு காவலர்களையும் ஏவி சுரங்கத்தின் வழியே சென்று குகையுள் மட்டுமின்றி காடு முழுவதும் தேடப் பணிக்கிருன். அவ்விரு காவலரும் சென்று விடுகின்றனர்.

மாளிகையில் ஒரு நபர்கூட கிடையாது; கிண்டாமணியையும் மோகனவையுந் தவிர. கிண்டாமணி மோகனவை அடைய இச்சைகொண்டு சில ஆசை வார்த்தைகள் கூறி நெருங்கினன். இசையவில்லையேல் பலாத்காரம் செய்யவும் தீர்மானித்தான்.

அவ்வமயம் ஏவப்பட்ட இரு ஆட்களும் சுரங்கத்துள் சென்று கொண்டே யிருந்தனர், சிறிது நேரத்திற்குள் சந்திக்கும் சமயம் வாய்த்தது. இருசாரப்பினரும் சந்தித்தனர். வழிகாட்டி வந்த இரு காவலர்களும் எதிரில் வந்த இருவரையும் கண்ஜாடை செய்து, பின்னல் வரும் சந்திரனை ஒரே பாய்ச்சல் பாய்ந்து பிடிக்க சைகை செய்தனர். அவ்விரு காவலர்களும் சந்திரன்மீது சரேலென பாய்ந்தனர். பாய்ந்தவுடன் குண்டு வெடிக்கின்றது. ஒருவன்

மார்பில் குண்டு பட்டு இறக்கின்றான். பாய்ந்த வேகத்தில் சந்திரனின் கைத் துப்பாக்கியும் கீழே விழுந்து விடுகிறது. சுரங்கம் இருள் சூழ்ந்திருந்ததால் துப்பாக்கி இருந்த இடம் தெரியவில்லை. சந்திரனை காவலர் மூவரும் ஒன்று சேர்ந்து தாக்க முயன்றனர். சந்திரகுமார் மல்வீரன் அல்லவா? சளைக்காமல் எதிர் தாக்குதல் செய்தான். மூவரையும் தன் கைகளாலும், கால்களாலும் தூக்கி தூக்கிப் போட்டும், உதைத்துத் தள்ளியும், வீரப்போர் புரிந்தான்.

இவ்வாறு போர் புரிந்துகொண்டே சந்திரன் சுரங்கத்தின் வாயிலை அடைய முயன்றான். சந்திரன் முன்னால் ஓடுவான். இம்மூவரும் பின் தொடர்வார்கள். உடனே நிற்பான். மூவரையும் முதலில் ஒருவனைத் தூக்கி மற்ற இருவர்மேல் பந்துபோல் எறிவான். மூவரும் கீழே விழுந்து உருண்டு புரண்டு எழுவதற்குள் சந்திரன் ஓடுவான். இங்ஙனம் சநதிரன் சுரங்கததின் வாயிற்படியை அடைந்தான். அடைந்தவுடன் அங்கிருந்த மறையைத் திருகி விட்டான்; சுரங்கத்தின் கதவு மூடப்படுகின்றது. அம்மூவரும் உள்ளே அகப்பட்டுக்கொண்டனர். சந்திரன் மோகனா இருக்கும் அறையைத் தேடலானான்.

கிண்டாமணி ஏற்கெனவே மோகனாவைப் பலாத்காரம் செய்யச் சென்றானல்லவா! சென்றவன் மோகனாவைத் தன் வயமாக்க முதலில் ஏதேதோ தெரிவித்தான். மோகனா இணங்குவதாகக் காணப்படவில்லை. உடனே பலாத்காரமாக அணையச்சென்றான். மோகனா ஓடலானாள். அவ்வரக்கனும் விடாமல் ஓடி ஓடி நெருங்கலுற்றான். வாயிற்படி திறந்திருந்ததால் மோகனா அறையை விட்டு வெளியே தோடடத்தின் பக்கம் ஓடினாள். கிண்டாமணியும் பின்னே ஓடினான். மோகனா கீழே கிடந்த ஒரு மரக்கட்டையை எடுத்து கிண்டாமணியின் தலையில் ஓங்கி அடித்தாள். அடிபட்ட கிண்டாமணி மயங்கி கீழே வீழ்ந்தான். மோகனா வெகு வேகமாக சுவர் ஏறிக் குதித்தோடி மறைந்து விட்டாள்.

அந்தோ! பாவம். சந்திரன் வெகு வேகமாகத் தேடி வந்தான். என்றாலும் இயற்கை அவர்களைச் சந்திக்க விட

வில்லை. மோகனு வேறோர் பக்கம் சுவர் ஏறிக்குதித்து ஓடினுள். சந்திரன் மற்றோர் பக்கம் தேடிய வண்ணம் வந்தான். அடிபட்ட கிண்டாமணி எழுந்திருந்ததும் அங்கே தோன்றிய சந்திரன் "வணக்கம் கிண்டாமணி யாரே!" என்கின்றான். கிண்டாமணி, பார்த்தானே! இல்லையோ! உடனே சந்திரன்மேல் பாய்கின்றான். இரு வரும் ஒருவரை யொருவர் தாக்கிக்கொண்டனர். நல்ல குத்து; நல்ல உதை; இரு ஆண் சிங்கங்கள் போல் போரிட்டுக்கொண்டனர்.

இதற்குள், கிண்டாமணியின் ஆட்கள் சுரங்கத்திலிருந்து எங்ஙனமோ கதவைத் திறந்து கொண்டு ஓடி வரலாயினர். வந்ததும் சந்திரனுக்கும் கிண்டாமணிக்கும் பெருஞ்சண்டை நடப்பதைக் கண்டனர். கிண்டாமணி அவர்களை ஏவித்தாக்குமாறு பணித்தான். முன் சந்திரனால் உதைபட்ட அம் மூவரும் இப்பொழுதும் எதிர் நின்று போராடலாயினர். சந்திரன் கையில் கிடைத்த கோல் ஒன்றினைல் மூவரையும் அருகில் நெருங்க வொட்டாமல் சுழற்றி, சுழற்றி அடித்த வண்ணமாகவே யிருந்தான்.

கிண்டாமணி வாயிற்படியை அடைந்து யாராவது வருகின்றார்களா என்று நோக்கினான். நோக்குமளவில், தூரத்தில் போலீஸ் லாரி வரக்கண்டான், உடனே திடுக்கிட்டு சுரங்கத்தில் நுழைந்து கதவை மூடிவிட்டு குகையைநோக்கி ஓடலானான். குகையை அடைந்தான் கிண்டாமணி. அப்போதுதான் அவன் ஆட்களுள் சிலர் அங்கு வந்தனர். அவர்களை அப்படியே திருப்பி வேறெங்காவது சென்று விடும்படி கட்டளையிட்டு இவனும் ஓர் குதிரையின் மீதேறி எங்கேயோ விரைந்து சென்று விடுகின்றான், கிண்டாமணியின் ஆட்களை அங்கு வந்த போலீஸ் படை வளைத்துக் கொள்கின்றது. கிண்டாமணி தப்பி ஓடிவிட்டான்.

சேகர், தோழி வாணி இருவரும் போலீஸ் படையுடன் கிண்டாமணியின் பங்களாவினுள் நுழைந்தனர். உடனே சந்திரன் அம்மூன்றுகாவலருடன் சண்டையிடும் இடத்தை அடைந்தனர். போலீசார் அம் மூவரையும் கைது

செய்து விலங்கிட்டனர். சந்திரன் மகிழ்ந்தான். மோகனை வைத்தேடினர். மோகனவைக் காணோம், ஏற்கெனவே மோகனா ஓடிவிட்டாளல்லவா! ஓடியவள் கோவையின் பக்கத்திலிருந்த ஒரு குக்கிராமத்தில், ஏழைக் குடியானவன் ஒருவன் வீட்டில் ஆதரிக்கப்பட்டு வந்தாள். நிற்க,

## 19. கிண்டாமணியின் கடிதமும் அவன் முடிவும்.

சந்திரகுமார், சேகர், வாணி ஆகிய அனைவரும் மிக மிக வருத்தத்துடன் இல்லந் திரும்பினர். கிண்டாமணி கொலை, கொள்ளை, பெண்களைக் கடத்தல் ஆகிய குற்றங்களைத் தன் கொள்ளைக கூட்டத்தின் உதவியால் நடத்தி வருவதும், அதனல் நாட்டின் பல இடங்களில் பொது மக்களுக்குத் தொல்லை விளைந்ததையும் அறிந்த சர்க்கார் உடனே அக் கொள்ளைக் கூட்டத்தலைவனை கிண்டாமணியை உயிருடன் பிடிக்கும்படி மாகாண போலீஸ் அதிகாரிகட்கு உத்திரவிடப்பட்டது. அவனைக் கைது செய்வதில் பொதுமக்கள் உதவி புரிய வேண்டுமென்றும் கேட்டுக்கொள்ளப் பட்டிருந்தது. போலீசார் அனைவரும் கிண்டாமணியைப் பிடிக்கும் முயற்சியில் ஈடுபடுகின்றனர். கிண்டாமணியோ சிறிது அஞ்சிய நிலையில் மறைந்து வாழ்ந்தான்.

வெளி நாடுகட்கனுப்பிய கள்வர் கூட்டமும் திரும்பி வந்தபாடில்லை. எஞ்சிய கள்வர்களும் போலீசாரால் பிடிக்கப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டு விடுகின்றனர். மேலும் போலீஸ் தன்னைப் பிடிக்கும் முயற்சியில் ஈடுபட்டிருப்பதையும் அறிகின்ருன்.

கிண்டாமணி நாடெங்கும் தனக்குப் பெரும் பகையைச் சேர்த்துக்கொண்டதால் மனங் கலங்கலுற்ருன். பின் ஒருவாறு எண்ணமிடலானன். வக்கீல் நீலகண்டன், இன்ஸ்பெக்டர் கஞ்சன், கிண்டாமணி ஆக மூவரும் சேர்ந்து ஒரு யோசனை செய்தனர். அதாவது சேகரை எப்படியாவது தம் வயமாக்கிக் கொள்வது என்றும், பின்

நயவஞ்சகமாகச் சேகரை ஒழித்துக் கட்டுவதென்றும் முடிவு செய்தனர்.

*    *    *    *

மறுநாள் காலை கடிதம் ஒன்று கைவரப் பெறுகின்றான் சேகர். அது கிண்டாமணி வரைந்த கடிதம். அக்கடிதம் பின் கண்டவாறு எழுதப்பட்டிருந்தது :—

சேகர்,

உனக்கு யான் கடிதம் வரைவது வியப்பாக இருக்கலாம். ஆயினும் இருவர் நலனையும் கருதி இக் கடிதம் வரைகின்றேன். என்னால் உனக்குப் பல இடையூறுகள் நேர்ந்தன. அவற்றை உன் பெருங்குணத்தால் பொறுத்துக்கொண்டனை. உன் பெருந்தன்மையை எண்ணி என் மகள் "மேனகா"வை உனக்கே மணம் புரிவிக்க விரும்புகின்றேன். அன்றியும் நீ இம் மணத்திற்கு இசைந்தால் என் சொத்து முழுவதையும் உனக்கே அளிக்க முடிவு செய்துள்ளேன், வலிய வரும் ஸ்ரீதேவியை உதைத்துத் தள்ளப்படாதென்னும் உலகவசனத்தை உனக்கு ஞாபகப் படுத்துகின்றேன். இத் திருமணம் நிறைவேறினால் நாம் இருவரும் என்றும் உறவினராக வாழலாம். இது விஷயமாய்க் கலந்து பேச நீ விரும்பினால் உன் வீட்டிலேயே சந்தித்துப் பேசலாம். நான் வரத்தயார். உன் பதிலை ஆவலுடன் எதிர் நோக்குகின்றேன்.

இங்ஙனம்,
கிண்டாமணி.

கடிதத்தைப் படித்தபின் அதைச் சந்திரனிடம் காண்பிக்கின்றான் சேகரன். அவனுடன் சூழ்ந்து மறுநாள் இரவு 11 மணிக்கு வந்து சந்திக்கும்படி அன்றே கடிதம் வரைந்தனன். கடிதம் வரப்பெற்ற கிண்டாமணி பெருமகிழ்ச்சியோடு சேகரைச் சந்திக்கப் புறப்பட்டான்.

இதற்குள் சேகர் கிண்டாமணியின் கடிதச் செய்தியையும், அவனைக் கைது செய்ய வாய்த்திருக்கும் சந்தர்ப்பத்தைக் குறித்தும் பிரதாபரிடம் டிரங்க்காலில் பேசுகின்றான்.

பிரதமர் உடனே கோவை ஜில்லா போலீஸ் அதிகாரிக்குத் தெரியப்படுத்திவிட்டு அவர்க்கும் உணர்த்தாமல் தம்காரில் புறப்பட்டு விட்டார்.

பிரதமர், சந்திரன், கோவை போலீஸ் அதிகாரி உட்பட அனைவரும் சேகரின் மாளிகையினுள் இருந்த ஒரு அறையில் மறைந்திருந்தனர். அவ் வறையை யடுத்தாற்போல் இருந்த கூடத்தில் கிண்டாமணியைச் சந்திக்க ஏற்பாடு செய்திருந்தான். இரவு மணி 11-க்கு கிண்டாமணி தன் சகாக்களுடன் காரில் வந்து இறங்கினான். சேகரும் வரவேற்ற வண்ணமாக அமர்ந்தான்.

கிண்டாமணி : சேகர்! முதலாவதாக ஒரு வேண்டுகோள்.

சேகர் : என்ன வேண்டுகோள்?

கிண்டாமணி : நம் எண்ணம் ஈடேற முதற்கண் உன் சிநேகிதன் சந்திரனைத் தீர்த்துவிட வேண்டும்.

சேகர் : உம்...ம் பிறகு.

கிண்டாமணி : பிறகு, கடிதத்தில் கண்டபடி அனைத்தும் நடைபெறும்.

சேகர் : சரி. என் வேண்டுகோள் ஒன்று.

கிண்டாமணி : (மயங்கியவனாய்) என்ன உன் வேண்டுகோள்?

சேகர் : தாங்கள் இதுவரை செய்துவந்த திருட்டுத் தீய செயல்கள், அதனால் ஈட்டிய பொருட்கள், அவைகள் இருக்குமிடங்கள், அனைத்தையும் தெரிவித்தல் வேண்டும். உமக்கு உதவியாக இருப்பவர் இன்னார் இன்னார் என்றும் சொல்லிவிட்டால், உங்கள் கொள்கையின்படி யான் நடக்கிறேன்.

கிண்டாமணியும் தான் அதுவரை செய்து வந்த சதிச் செயல்கள் அனைத்தையும் ஒன்றுவிடாமற் கூறினான். தன் பொருட்கள் இன்னும் மூன்று குகைகளில் உள்ளன வென்றும், தெரிவித்து விடுகின்றான்.

வக்கீல் நீலகண்டன், இன்ஸ்பெக்டர் கஞ்சன், நீதிபதி ஆகியோர் கிண்டாமணிக்காக நின்று உதவி செய்து வந்

தை உள்ளது உள்ளபடியே உரைத்தனர். [இதற்குள் உள்ளிருந்தே பிரதமர் ஏற்கெனவே அனுப்பப்பட்டிருந்த புகைப்படங்களையும், மனுக்களையும், அப்பொழுது நிகழ்ந்தது அனைத்தையும் ஒத்திட்டுப் பார்த்து கிண்டாமணி பெருங்கொள்ளைக்கூட்டத் தலைவன் என்று தெளிகின்றார். மற்ற மூவரும் செய்துவந்த துரோகச் செயல்களையும் குறித்துக் கொண்டார்.]

கிண்டாமணி : இப்பொழுது என் சொற்படி செயல் புரிகின்றாயா?

சேகர் : அதற்கென்ன? இப்பொழுதே!

இன்ஸ்பெக்டர் ; ஆரம்பிக்கலாமா நாச வேலையை.

சேகர் : தாராளமாக.

நீதிபதி : எங்கே சந்திரன்?

சேகர் : இன்னும் சிறிது நேரத்திற்குள் இங்கே தோன்றுவான்.

வக்கீல் : நல்ல சமயந்தான் சேகர் நம் திட்டத்திற்கு!

சேகர் : ஆம். நல்ல சமயந்தான். உங்கள் நாச காலத்திற்கும் இது நல்ல சமயந்தான். இதோ தோன்று கின்றான பாருங்கள் சந்திரன்.

என்று சொல்லிக் கொண்டிருந்தபோதே பிரதமர் காட்சியளிக்கின்றார் சந்திரனுடனும், போலீஸாருடனும். உடனே நால்வரும் விலங்கிடப்படுகின்றனர். கிண்டா மணியின் பொருட்கள் அனைத்தையும் அவன் குறிப் பிட்டிருந்த இடங்களுக்குச் சென்று எடுத்து வந்தனர்.

கிண்டாமணியின் மீது கொலைக் குற்றம், கொள்ளைக் குற்றம் சாட்டப் பெற்றும்; நீதிபதி, வக்கீல், நீலகண்டன், இன்ஸ்பெக்டர் கஞ்சன் ஆகிய மூவரும் கிண்டாமணிக்குத் துணைபுரிந்ததாகவும் குற்றம் சாட்டப் பெற்றும் வழக்கு தனிநீதி மன்றத்தில் விசாரிக்கப்பட்டது. வழக்கு முடிவில் நீதிபதி, கிணடாமணிக்கு மரண தண்டனையும் மற்ற மூவர்க்கும் ஆயுள் தண்டனையும் விதித்தார்.

தீர்ப்பின்படி கொடியன் கிண்டாமணி தூக்கிடப் பட்டான். மற்றையோர் ஆயுட் கைதிகளாயினர்.

*   *   *

உயர்திரு பிரதமர் தொட்டியம் குமாரசாமி ரெட்டியார் அவர்கள் சந்திரகுமாருக்கும், சேகரனுக்கும் 'நம் நாட்டு மணிகள்" என்ற பட்டப்பெயரைச் சூட்டினர். கிடைக்கப்பெற்ற செல்வத்தைக்கொண்டு, ஆங்காங்கு கல்லூரிகள் பல கட்டினர். பள்ளிகள் பல திறக்கப்பட்டன, ஏழை மாணவர்கட்கென்று இலவச விடுதிகள் பல நிறுவப் பட்டன. இவை அனைத்தையும் கண் காணிக்கும் அறக்காப்பாளர்களாக சந்திரனையும் சேகரனையும் அரசாங்கம் நியமித்தது.

## 20. நண்பர்கள் நாகநாடு அடைதல்.

நாட்கள் பல ஓடின. ஏற்கெனவே அயல் நாட்டு வியாபாரத்திற்குச் செல்வதென நாள் ஒன்று குறிப்பிட்டிருந்தார்களல்லவா! அக்குறிப்பிட்ட நாளும் நெருங்கியது.

சேகரன் சந்திரனை அழைக்கின்றான். சந்திரன் இசைகின்றான். ஆனால் மனம் மோகனாவை நாடுகின்றது. பின் ஒருவாறு தேறியவனாய், மோகனாவைத்தேட வாணியிடம் கட்டளையிட்டு உடன் செல்லத் தயாரானான், சேகர் தன் தகப்பனார் மாணிக்கனாரிடம் மில்நிர்வாகத்தை ஒப்புவித்துவிட்டு ஏராளமான மில் ஜவுளி மூட்டைகளை ஏற்றிக்கொண்டு குறித்த நாளில் தன் தோழன் சந்திரகுமாருடன் புறப்பட்டான். கப்பல் புறப்பட்டுச் சென்றுகொண்டிருந்தது; மேற்குத் திசையை நோக்கி,

கப்பல் ஒரு தீவை அடைகின்றது. அதே தீவில்தான் கிண்டாமணியின் ஆட்களும் கொல்லப்பட்டிருக்கின்றனர். சந்திரனின் தங்கை கமலாசனி அதே தீவிற்குள் தான் வசித்து வந்தாள்; மிலேச்சர் தலைவனிடம்.

கப்பல் அத்தீவை அடைந்த சிறிது நேரத்திற்கெல்லாம் மிலேச்சர்கள் அக் கப்பலைவந்து சூழ்ந்தனர், சந்திரனும் சேகரனும் தங்கள் கைத்துப்பாக்கிகளால் வானை நோக்கிச் சுட்டனர். உடனே அம்மிலேச்சர்கள் அஞ்சி விலகினார்கள். சந்திரனும் சேகரனும் அவர்களுடன் பேசி, அவர்களுடைய தலைவன் இருக்குமிடத்தை நாடலா

னார்கள். அனைவரும் சென்று தலைவன் முன் நிற்கலாயினர்.

தலைவன் உயர்ந்த ஓர் ஆசனத்தில் அமர்ந்திருந்தான். அணியணியாக மாதர் பலர் நிற்கலாயினர் ஒருபக்கம், மற்றொரு பக்கம் ஏராளமான பிண நாற்றம். மக்களைக் கொலை செய்து மாமிசங்களைப் பாகம் செய்கின்றனர் இன்னொரு பக்கம். பெரும் சாடிகளில் கள் வேறு வைக்கப்பட்டிருந்தது. இவற்றையெல்லாங் கண்டு சகியாதவனாய் சந்திரன் அம்மிலேச்சர் தலைவன் முன்பாக சென்று நிற்கலானான்; நண்பன் சேகரனுடன். கூடச் சென்றிருந்த வீரர்களனைவரும் அணியணியாகப் பக்கத்தே நின்றனர்; தங்கள் தங்கள் கைத்துப்பாக்கிகளுடன்.

மிலேச்சர் தலைவன் : உங்கட்கு யாது வேண்டும்? மாதர் வேண்டுமா? கள் வேண்டுமா? அல்லது உண்டு கொழுக்க ஊன் வேண்டுமா?

சேகர் : நீங்கள் வள்ளுவர் பிறந்த நாட்டில் பிறந்து அவர் வரைந்த அறங்கள் பலவற்றை உணர்ந்திருந்தால் இவ்வாறு தெரிவிக்க மாட்டீர். நீங்கள் ஒன்றுமே அறியாமல், தனித்தீவில் இருந்துகொண்டு, கடலில் சென்று கொண்டிருக்கும் கப்பல்களையெல்லாம் கொள்ளையடித்து வருபவர்களைத் தின்பவர்களான மிலேச்சர்களாயிற்றே! அதனாற்றான் இம்மாதிரி கேட்கின்றீர்.

மிலேச்சர் தலைவன் : என்ன? உம்முடைய கருத்தென்ன? இவ்விடயங்களைப்பற்றி. இவைகளை உபயோகிப்பதால் என்ன கெடுதி? நீங்கள் ஏன் அவ்வாறு கருதுகின்றீர்கள்?

சந்திரன் : உமக்கு ஒன்றும் தெரியாதா? நீரென்ன தன் உடல் கொழுப்பதற்கு தன் உயிரைப்போன்று பிற உயிர்களைக் கருதாமல், பிற உயிர்களைக் கொன்று தின்பதால் வரும் பாபத்தை அறியிர். நீங்கள் எங்ஙனம் அருளை அடைய முடியும்? அருளை அடையாது ஆண்டவனை அடைவது எங்ஙனம்? ஊன் உண்ணுதலும் உயிர்களைக் கொல்லுதலும் கூடாது.

மிலேச்சர் தலைவன் : ஊன் உண்பவர்க்கும் கொலை புரிபவர்க்கும் அருள் உள்ளம் ஏற்படாது என்பது எவ்வாறு பொருந்தும்?

சந்திரன் : நன்று கேட்டீர். பொருளைக் காவாமல் தீய வழிகளில் தன் மனத்தைச் செலுத்தியவர்களிடம் பொருள் எவ்வாறு நில்லாதோ அவ்வாறே பிற உயிர்களைக் கொன்று தின்பவரிடம் அருள் இருக்காது. வள்ளுவனார்,

"படை கொண்டார் நெஞ்சம்போல் நன்றூக்காது ஒன்றன்
உடல் சுவை யுண்டார் மனம்"

என்று கூறி யிருத்தலைக் காண்க. மனிதர்களையே கொன்று தின்னும் நீங்கள் எப்படி இரக்கமுள்ளவர்களாகத் திகழ்வீர்கள்? எப்படி அருள் உமக்குக் கிட்டும்.

மிலேச்சர் தலைவன் ; அருள்! இரக்கம்! என்பதெல்லாம் எமக்கு எதற்கப்பா! தேவையில்லை, இருக்கும் வரையில் உண்டு கொழுத்தால் போதுமானது. அன்றியும், அருள் என்பதன் விளக்கம் யாது?

சேகர் : உமக்கு அருள் என்பது இன்னது என்றே தெரியாதா? அருள் என்பது பிற உயிர்களைக் கொல்லாமலும், வதைக்காமலும் இருத்தலுடன் அவற்றின்பால் அன்புடன் பரிவு காட்டுவதுதான் அருள் எனப்படும். அவ்வாறிருக்க நீங்கள் பிற உயிரை நீக்கி, அவ்வுயிரின் ஊனை உண்பது அறமாகாதையா! பிற உயிர்களைக் கொன்றுண்ணும் உம்மைப் போன்றவர்கள் என்றும் நீங்காத இடருழப்பர் என்பதில் ஐயமில்லை.

மற்றும் உம்மைப்போன்ற ஓர் உயிரின் ஊனை உம் உடலில் ஏற்படும் புண் ஒன்றைப் பார்ப்பீரேயாகில், அப்புண் போன்றுதான், அவ் வூனும் அமையுமையா. இதை எண்ணாத நீங்கள் எங்கிருந்து ஊன் உண்ணமல் இருப்பீர்கள்?

மிலேச்சர் தலைவன் :—என்ன? புண்ணு? ஆம். நம் உடலில் ஏற்பட்ட புண்ணை நோக்கினுல் நமக்கே அருவருப்புத்தான் ஏற்படுகின்றது. அங்ஙனமேதான் பிறஉயிர்களின்

ஊனும் காட்சி யளிக்கின்றது. மேலும். நீங்கள் பார்த்தால் ஒரு ஶாஸ்திரியாக நல்லவர்கள் போலக் காணப்படுகின்றீர்கள். ஊனை உண்ணுமல் இருப்பதனுல் உண்டாகும் பயன் யாது?

சந்திரன்:—யாது பயனு? கேளும் உரைக்கின்றேன். யாகங்கள் பல செய்ய வேண்டாமையா. மழித்தலும் நீட்டலும் வேண்டாமையா. ஆயிரம் யாகங்கள் செய்து பெறுமொன்றை ஓர் உயிரைக் கொல்லாமலும், அவ்வூனைப் புசியாமலும் உலகம் பழித்ததை ஒழித்து உண்மையாக நடந்தாற் போதுமையா. உமக்கு அப்பொருள், அச்செயல் முடிவுறுமையா.

மிலேச்சர் தலைவன்:—உம்.........ம். பிறகு,

சேகரன்:—பிறகு,

"கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிருந்தொழும்"

ஐயா தொழும். அதாவது, பிற உயிர்களைக் கொல்லாமலும், கொன்ற உயிரின் ஊனைத் தின்னுமலும் எவன் ஒருவன் உள்ளானே, அப் பெருந்தகையோனை, உலகமே—உலகில் உள்ள உயிர்கள் அனைத்துமே கைகூப்பித் தொழும்" என்பதில் சந்தேகம் வேண்டாம்.

மிலேச்சர் தலைவன்:— ஊனை நீக்கினுல் நன்மை பயக்கும் போல்தான் தெரிகின்றது. சரிதான். கொல்லாமையை மேற்கொண்டால் மேலும் என்ன நன்மை பயக்கும்?

சந்திரன்:—பிற உயிர்களைக் கொல்வதால் தீவினைகள் தன்னிழல் போல என்றும் சுற்றிக்கொண்டே தானிருக்கும் எனச் சொல்லத் தேவையில்லை. கொல்லாமை மேற்கொண்டால் பிற அறவினைகள் பலவற்றைச் செய்யத் தேவையில்லை. எல்லா வகைப் பயன்களையும் கொல்லாமையால் அடையப்பெறலாம்.

"நல்லாறெனப்படுவது யாதெனின்; யாதொன்றும்
கொல்லாமை சூழும் நெறி"

என்றபடி நல்லான் என்ற நற்பெயரை எடுக்க வேண்டு மாயின் பிற உயிர்களைக் கொல்லாமல் இருந்தாலே போது மையா போதும். மற்றும் எவன் ஒருவன் கொல்லாமையை மேற்கொண்டு ஒழுகுகின்றானோ அவன்மீது எமன் ஒரு நாளும் செல்லான். அவ்வாறு சென்றாலும் சிறிது அஞ்சிய நிலையில்தான் செல்லவேண்டும். எனவே அச் சான்றோரின் வாழ்நாள் நீடிக்கும். அவன் இன்பகரமான வாழ்க்கையை நடாத்த முடியும் என்பதில் வியப்பில்லை.

என்று பற்பல விதமாக நண்பர்களிருவரும் ஆற்றிய சொற்பொழிவைக்கேட்ட, மிலேச்சர் தலைவனும், மற்ற மிலேச்சர்களும் விழித்தகண் விழித்தபடியே, திறந்த வாய் திறந்தபடியே, அசைவற்று நிற்கலாயினர்.

மிலேச்சர் தலைவன்:—உங்கள் அறிவுரையினால் மாக்க ளாய்த் திகழ்ந்த நாங்கள் மக்களாய்த் திகழலானோம். இனிமேல் யாங்களும் என்றுமே கனவிலுங் கூட தீண்ட மாட்டோம் ஊனை. எப்பொழுதும், எவ்வுயிரையும் எங்கள் உயிரைப்போல் பாவிப்போம். மறந்தோம் இன் றோடு மாய்ப்பதை. அழித்தோம் இன்றோடு அழிப்பதை. உதறித் தள்ளினோம். இன்றோடு ஊனை, நிறுத்தினோம் இன்றோடு கொல்வதை.

இவ்வாறு மிலேச்சர் தலைவனாகிய நாகர்களின் தலைவன் கூற மற்றவர்களும் இனிமேல் புலால் உண்ணப் போவ தில்லை யெனவும், மேற்கொண்ட தொழிலாகிய கொலையை நிறுத்தி விடுவதாகவும் கூறிச் சத்தியம் செய்தார்கள். நண் பர்கள் மகிழ்ந்தனர். இங்ஙனமாகவே கட்குடியையும், "கட்காதல் கொண்டொழுகுவார் ஒளியிழப்பர்" என் பதையும், "எஞ்ஞான்றும் நஞ்சுண்பார் கள்ளுண்பவர்" என்பதையும் பலவித சான்றுகளுடன் விளக்கவே, கள்ளை யும் நிறுத்தி, கட்பாண்டங்களையும் உடைக்கலாயினர் மிலேச்சர்களாகிய நாகர்கள். இவ்வாறான அறப் பண்பு களைக் கூறிய இரு நண்பர்களையும் மற்ற வீரர்களையும் மிலேச்சர்கள் போற்றிப் புகழ்ந்து கொண்டாடலானார்கள். நாகர் தலைவன் அவர்களைத் தங்கள் விருந்தினராகப் பல நாட்கள் தங்கிச் செல்லுமாறு கேட்டுக் கொள்ளலானான்.

# 21. சேகரன் கமலாசனி சந்திப்பு

அது முதற்கொண்டு அத்தீவு எங்கு பார்த்தாலும் பிணநாற்றம் நீங்கி, எங்கு பார்க்கினும் அழகொளி வீசத் தொடங்கியது. இங்ஙனம் எத்தனையோ சீர் திருத்தங்கள் செய்யலாயினர்; நம் நண்பர்கள். இதையெல்லாம் கண்ணுற்ற நாகர்தலைவன் மகிழலானான்.

நாகர் தீவில் நாட்கள்தோறும் நனிசிறந்த செயல்கள் பல செய்து, ஞாலத்தின் மக்கள் நாடாத அந்தத் தீவும், நாளும் மக்கள் நாடி நற்பயனுறும் நாடாகச் செய்தனர்; அந்த "நம் நாட்டு மணிகள்". மக்களைக் கொன்று தின்று வந்த மாக்களை மக்களாக்கி மாநிலமெங்கும் புகழ்நிலையில் நிறுவினர்; "நம் நாட்டு மணிகள்". அன்பென்னுந் துணைகொண்டு அருள் என்னும் பொருள்கொண்டு அவனி மக்களைக் கொன்று தின்று வந்த அம்மிலேச்சர்தீவை-அத்தீவின் மக்களை அஹிம்சா தர்மத்தில் நாட்டமுறச் செய்தனர்; "நம் நாட்டு மணிகள்". கொன்றுண்ணுந் தொழிலைக் கொல்லச் செய்து, கள்ளுண்ணலைக் கடிந்து, உயர்ந்த, நீதி நூலாகிய திருக்குறள் கூறும் அறநெறிதனை பின்பற்றச் செய்து, அந்த மிலேச்சர்கள், மக்களாக அவனியெங்கும் வாழும் மக்கள் பின்பற்றும் நற் செயல்களைப் பின்பற்றி வாழ எண்ணும் மக்களாகச் செய்து, அத் தீவினர் அனைவரும் கோவை நண்பர்களைப் புகழ்ந்து பாடியாடும் நிலையை எய்தினர்; நாளும் பல அறங்கள் செய்யும் நம், "நம் நாட்டு மணிகள்". கள் நிறைந்த பானைகள் கடிந்தெறியப்பட்டு மறைக்கப்பட்டன. பிணநாற்றமெங் ஙணும் நீங்க கிருமிகளைப் போக்கும் பலவகை மணம் நிறைந்த பொருட்கள் எங்கும் தூவப்பட்டன,

இங்ஙனம், கொலைத் தொழிலையே—கொன்றுண்பதையே—கள்ளுண்பதையே குறியாகக் கொண்ட மிலேச்சர் மக்கள் அவைகளை நினைத்தாலே பாபம் என்ற வண்ணம் திகழ்ந்தனர். பேய் பிசாசுகள் கும்மாளம் போட்டுக் கூத்தாடிய மிலேச்சர் (நாகர்) நாட்டில் குன்றாத தன்மையதாய்-என்றும் விளங்கத் தக்கதாய்-உயர்ந்த நிலையை அடையத்தக்கதாய்—திருமகளும், கலைமகளும் சென்றமர்ந்

தனர். பள்ளிகள் பல எழுந்தன. கோவை வீரர்களுள் பலர் ஆசிரியர்களாயினர். கல்வி வளர்ந்தது. கலை ஓங்கியது. அன்பினும் குழந்தையாம் அருளும் அன்றுடம் சிறிது சிறிதாக அரும்பித் தழைக்கத் தொடங்கியது. அந் நாகர் நாட்டு மக்கள் அனைவர் மனத்திலும் இன்பமே குடி கொண்டது. இங்ஙனம், "அறம், பொருள், இன்பம்" ஆகிய மூவகைப் பொருள்கொண்டு—வள்ளுவன் காட்டிய அவ் வழிகொண்டு வளமெல்லாம் பெற்று அந் நாட்டு மக்கள் வாழும் நல்லதொரு எண்ணங்கொண்டு மாக்களாக வாழாமல் மக்களாக வாழும்படிச் செய்தனர்; நம் கோவை வாழ் "நம் நாட்டு மணிகள்."

"நம் நாட்டு மணிகள்" என்று பட்டம் பெற்ற நம் கோவை நண்பர்கள் நாகர் தீவிலேயே தங்கியிருத்தல் கூடுமா? மற்ற இடங்களுக்குச் சென்று இதைப்போல் அறச் செயல்கள் பலவற்றைப் புரிதல் வேண்டாமா? எனவே நண்பர்கள் புறப்பட ஒருசில நாட்களே இருந்தன.

ஒரு நாள் மிலேச்சர் தலைவன் பக்கத்தே இருந்த கானகமொன்றில் சென்று 'வனபோஜனம்" விருந்து நடத்த ஏற்பாடு செய்கின்றான். அதில் சந்திரனை "வள்ளுவரும் வள்ளலாரும்" என்ற தலைப்பில் பேசும்படி சேகரன் முதல் அனைவரும் கேட்டுக் கொள்ளுகின்றனர். அவ்வாறு அன்று வனத்தில் நாகர் நாட்டு மக்களுள் முக்கியமானவர்கள் எல்லோரும் சென்றனர், எங்ஙனுமே கண்டிராததொரு நல்லவிருந்து அன்று அங்கு அளிக்கப்பட்டது. இதைக் கண்ட கோவை வீரர்கள் மாமிசம், கள் முதலியன இல்லாததொரு நல்ல—சிறந்த உணவு அன்று பரிமாறப் பட்டதை யுணர்ந்து தங்கள் முயற்சியின் பலனையும் இயற்கையின் செயலையும் புகழ்ந்தனர்.

விருந்து முடிந்தது. கூட்டம் கூடினர். சந்திர குமாரும் தனக்களித்த, "வள்ளுவரும் வள்ளலாரும்" என்ற பொருளை விளங்க வைத்திட எழுந்தான். இயற்கையில் நாட்டங்கொண்ட சேகரன், தன் கேமராவுடனும் கைத் துப்பாக்கியுடனும் எழுந்து, நண்பனிடம் கண்ணால் பேசி அப்பால் நகர்ந்தான், குறிப்புணர்ந்த நாகர் தலைவன் அங்

கிருந்த குதிரையொன்றினை சேகரனுக்களித்து உடன் சிலரைச் செல்லும்படி உத்தரவிட்டான். "அவர்கள் வேண்டாம். நான்மட்டும் சென்று வருகின்றேன்" என்று குதிரையின்மீது அமர்ந்தான்; சேகரன். அதுவும் காற்றாய்ப் பறந்து சென்று ஒருபக்கத்தில் மறைகின்றது.

பரியின் மீதில் வேகமாய்ச் சென்று கொண்டிருந்த சேகரன் குறுக்கிட்ட சிற்றாறு ஒன்றினைக் காண்டலும் குதிரையைச் சட்டென நிறுத்தினான், பாலம் ஏதாவது இருக்கின்றதாஎன்று இப்படியும்அப்படியுமாகத் திரும்பிப் பார்த்தான். பாலமும் இல்லை. அதனைக் கடக்கப் படகில் செல்வதைத் தவிர வேறு வழியில்லை. குதிரையை அங் கிருந்த மரத்தில் கட்டிய சேகரன் கரையோரமாகவே சற்று நடமாடியவண்ணமிருந்தான். அவ்வமயம் நட்டாற்றில் ஒருபடகு தென்பட்டது, அந்தப் படகினைச் செலுத்தி வருமாறு கை ஜாடையால் பேசினான். அந்தப் படகில் பெண்கள் நால்வரும் சிறுவன் ஒருவனும் அமர்ந்திருப்பதாகத் தென்பட்டது. மறுகரை சென்று அவர்களை விட்டபின் திரும்பி வருவதாக அவர்களுள் ஒரு பெண் தெரிவித்தாள், அந்தப் பெண்கள் சேகரனைப் பார்த்த வண்ணம் சிரித்தனர். இதனைக் கண்ட சேகரன் ஆகட்டும் என்று அலைபாயும் எண்ணங்களுடன் நடமாடினான்...திடீரென அந்தப் பெண்கள் குய்யோ முறையோவெனக் கூக்குரலிட்டுக் கத்தியழுதனர். என்னவென்று சட்டெனத் திரும்பிப் பார்த்தான் சேகரன். அதில் இருந்த சிறுவன் எப்படியோ நதியில் விழுந்து வெள்ளத்தால் அடித்துச் செல்லப்படுவதைக் கண்டான். இதற்குள் அந்தப் பெண்களுள் ஒரு இளம் பெண் துணிகளை நன்கு வரிந்து கட்டிக்கொண்டு அச் சிறுவனை மீட்க அந்த வெள்ளாற்றில் குதித்து விட்டாள். அந்தோ! அந்தப் பெண்ணும் சிறுவனின் நிலையை அடைந்தாள். இறுதியில் இரண்டு உயிர்களும் உயிருக்கு மன்றாடின; வெள்ளாற்றினில். மற்ற மூன்று பெண்களும் அழுது கதறுவதைத் தவிர வேறொன்றும் செய்திலர். தாமதித்தால் ஆபத்தாகும் என்று ஆடைகளைக் கழற்றியெறிந்து "தபீல்" என வாளை மீன்போல் பாய்ந்தான் சேகரன்; அந்த வெள்ளாற்றிலே! கன்னியை

யும், சிறுவனையும் கனவேகத்தில் மூழ்கடிக்கச் செய்தும், நீர் குடிக்கச் செய்வதுமாக ஓடியது வெள்ளம். இருவரும் திக்குமுக்காடும் சமயம். மூர்ச்சையற்று-கண்கள் உழன்று கைகால்கள் சோர்வுற்று தெய்வமே! என்று கருதும் நிலையை அடைந்தனர். சேகரனும் தன் முழு சக்தியையும் உபயோகித்து இவர்களை நெருங்குகின்றான். வெள்ளம் அவர்களை இன்னும் சற்று தூரத்தில் அடித்துச் செல்கின்றது. எப்படியோ நீச்சமடித்து, ஆற்றோடு போராடி சிறுவனைக் கைப்பற்றினான். படகு செலுத்தி வந்த பெண்களும் இவர்களோடு கூடவே படகைச் செலுத்திவந்தனர். அந்தச் சிறுவனைப் பந்துபோல் தூக்கிப் படகினுள் விழுமாறு எறிந்தான் சேகரன். சிறுவன் தப்பினான். ஆனால், அந்தப் பெண்......எப்படியோ அவளையும்சென்று பிடித்து விட்டான். இதற்குள் மூர்ச்சையாகி விட்டாள்; அந்தப் பெண்ணும். கடவுள் செயலால் கரைசேர்த்தான்; அக் கன்னியை. நன்றாகக் காற்று படும்படி வீசினான். பெண்களைக் கொண்டு அவ்விருவர்க்கும் வேறு ஆடைகள் அணிவிக்க விடுத்தான். சற்றே மூச்சு வந்தது, இருவரும் இப் பக்கமும் அப்பக்கமும் புரண்டனர். இந்தச் சமயத்தில் அந்தப் பெண்களிடம் விடைபெற்று அந்தக் கரைக்குச் செல்லப் படகில் அமர்ந்து படகைச் செலுத்தலானான்; சேகரன்.

மூர்ச்சை தெளிந்தெழுந்த சிறுவனும் அக்கா! அக்கா! என்று கட்டியழுதான். சட்டென எழுந்து உட்கார்ந்த அந்தப் பெண்ணணங்கும், தம்பி! தம்பி! என்று தன் மார்போடு கட்டியணைத்து முத்தமிட்டாள். பின், "எங்களைக் காப்பாற்றியவர் யாரம்மா?" என்று மற்ற பெண்களைக் கேட்டாள். அதோ அக்கரையில் இருக்கும் அந்த வீரன்தான் தாயே! என்றனர். அவள் காணும்போதே அவ்வீரன் மறைந்து விடுகின்றான். "பார்த்தீர்களா! அவரை நீங்கள் கேலி செய்தீர்களே! "குதிரையில் வந்தவர் குறுக்கே வந்த ஆற்றைத் தாண்ட கோட்டை கட்டுகின்றார்", என்று கும்மாளச் சிரிப்புச் சிரித்து ஏளனம் செய்தீர்களே! இப்பொழுது யார் வந்து காப்பாற்றினீர்கள்? அதனாலே யாரையும் கேலி செய்தல் தவறு...... போடுங்கள் தவடைமேல்......

சிறுவன் : உம்...ம்...புத்தி ! புத்தி ! என்று போட்டுக் கொள்ளுங்கள்......உம்...ம்.

உடன் அங்கிருந்த சொர்ணம் முதல் அனைவரும் தங்கள் தவறை உணர்ந்து தவடைமேல் புத்தி ! புத்தி யென்று போட்டுக் கொண்டனர்.

*          *          *          *

சற்று நேரத்திற்கெல்லாம் இவர்கள் அனைவரும் கானகத்துள் நுழைதலுற்றனர். வழியில் வானளாவிய மாமரமொன்று நின்றது, அதில் பழுத்த கனிகளின் மணம் இவர்களைக் கவர்ந்தது. உடன்,

சிறுவன் ; அக்கா ! இந்த மரத்தின்மேலேறி பழத்தைப் பறித்துச் சாப்பிடலாமா ! அக்கா !

அவள் : உம்...ம். சொர்ணம் ..ஏறுங்கள்...

என்றவுடன் அனைவரும் சிறுவனுடன் மாமரத்தின் மீது ஏறினர். மரத்தில் ஏறியவர்கள் பாதி மரத்தில் சென்று அமர்ந்தனர். கனிகளைப் பறித்துண்டனர். அவ்வமயம் புலியொன்று ஹூர்!ஹூர்!என்ற சத்தத்தை எழுப்பி மரத்தை வட்டமிட்டதைக் கண்டு நடுக்கமுற்ருன் சிறுவன். மற்றவர்களும் மனம் கலங்கினர். அக்கா ! அக்கா ! அதோ சிங்கம்...இன்றைக்கு நாம் செத்தோம், என்ருன் சிறுவன். பயப்படாதே புலியும் சிங்கமும் சண்டைபோட்டு ஓடுங் காட்சியைப் பார் ! என்ருள்; அந்த நங்கை ! விரைவில் அவ்விரண்டும் மறைந்தன. மற்றவர்களும் இக்காட்சியைக் கண்டு சிரித்தனர். இந்தச் சமயம் சிரிக்கவும், துன்பப்படவும் அவர்கள் நிலை இருந்தது, உடனுக்குடன் மரத்தினின்றுங் கீழே இறங்க முற்பட்டனர். ஆனுல் கரடி ஒன்று மரத்தினடியில் வந்து வாசனைப் பிடித்து மரத்தின் மேல் ஏறத் தொடங்கியது. ஏ கரடி ! உன்னை நான் சாப்பிட்டு விடுவேன் ! என்ருன் சிறுவன். ஆனுல் அவன் தமக்கையும் மற்றவரும் பதறிக் கதறினர். உடன் கதறியழுதான் சிறுவனும். நெருங்கி விட்டது கரடியும். அக்கா! என்றலறி தமக்கையின்மீது சாய்ந்தான் சிறுவன். தம்பியைத் தூக்கிய வண்ணம் கிளைக்குக் கிளை தாவினுள் அந் நங்கை. மற்றவர்களைக் காணும். எங்கோ சென்று

கிளைகளுள் கிளைகளாகி விட்டார்கள்; மற்ற பெண்கள். அந்தப் பாழாய்ப்போன கரடியும் இந்தக் கன்னியைத்தான் பிடிக்கப் பின் பற்றியது. கன்னியும் கதறியழும் நேரம்; கரடியும் தாவிப் பிடிக்கும் சமயம்; டமால் என்ற குண்டு சத்தம் கேட்கின்றது. குண்டடிபட்ட கரடியும் கதறிக் கீழே சாய்ந்தது. இதனைக் கண்ட அந்தப் பெண் மகிழ்ந்தாள். மற்ற பெண்களும் அப்போதுதான் வெளிப்பட்டனர். "ஏய்! சொர்ணு! இரு! இரு! அப்பாவிடம் சொல்லி உன்னைக் கவனிக்கச் சொல்லுகிறேன்" என்ருன் தம்பி! அதெல்லாம் கூடாது என்ருள் அவன் தமக்கை, பின்னே! "ஆபத்தில் இனிமேல் பதுங்கவில்லை!" என்று தலைமேல் போட்டுக் கொள்ளச் சொல் அக்கா! என்ருன் சிறுவன். உம்...ம். நடக்கட்டும் என்ருள் அவள்! உடன் சொர்ணம் முதல் மற்ற இருவரும் இனிமேல் "ஆபத்தில் பதுங்க மாட்டோம்" என்றும், புத்தி! புத்தி! என்றும் போட்டுக் கொண்டனர். மீண்டும் கனிகளை உண்டனர். கீழே இறங்கிச் சற்றே நடந்து சென்றனர். 'நில்' என்ற ஒலி வந்துற்றது. யாதெனத் திரும்பினுன் சிறுவன். உடனே, நீங்களா மாமா? என்ருன். "அக்கா! அக்கா! படாகர் வருகின்ருன் அக்கா!" என்ருன்... ஆ! என்ற வண்ணம் நின்ருள் அக்கன்னி.

படாகர்: கமலாசனி! எங்கே போறிங்க!

கமலாசனி: உங்களைத் தேடிகிட்டுதான்...மூஞ்சைப் பாருங்க?...மொந்த மூஞ்சியும், குறடாப் பற்களும்... பாருங்கடி......இந்த அவலட்சணத்தைத்தான் கட்டிக் கொள்ள வேண்டுமாம்!

சொர்ணம்: கமலாசனி! ராஜாங்கத்தை இவர்தான் ஆளப் போகிருராம்...சீ! ஓடிப்போ! இங்கெங்கு வந்தாய்? சிங்கப்பல்லா! கிட்ட நெருங்காதே! நெருங்கினுல் நாங்கள் மூவரும் உன்னைச் சாப்பாட்டுக்குச் சட்ணி பண்ணிடுவோம்.

கமலாசனி: சொர்ணுகர்! புத்தி! போட்டுக்கொள் தலைமேல்! அந்த மாதிரி சொல்லலாமா!

படாகர்: என் அருமைத் தங்கமே! அப்படிச் சொல்! ஒரு வார்த்தை சொல் கண்ணே! மாமா! உன்னை மணந்து கொள்கின்றேன் என்று.........

சொர்ணம் நாய் போல் அவன் மேல் வீழ்ந்து வசை மாரி பொழிந்தாள். அவ்வளவு ஆயிற்ரே! என்று தன் இடுப்பில் செருகியிருந்த கத்தியையெடுத்துக் குத்த ஓடினான்; சொர்ணத்தை...அந்த ஒரு ஆபத்தான நேரத்தில் மற்றொரு குண்டு வெடிக்கின்றது. வெடித்த அந்த மாயக் குண்டு அந்த படாகரின் கையில் ஊடுருவிச் செல்கின்றது. ஐயோ! அம்மா! என்று கீழே சாய்ந்து மூர்ச்சையானான் படாகர். உடனே அந்தச் சிறுவன் ஓடி,

பேபே மாமா பேபே!
காதல் வெறியால் கடியவந்த
பேபே மாமா பேபே!

பேபே மாமா பேபே!
கடிந்து பேசிய கன்னியைத் தாக்க
பேபே மாமா பேபே!

பேபே மாமா பேபே!
கையை. யிழந்த கள்ளமாமா
பேபே மாமா பேபே!

என்று பாடிய வண்ணம் அந்தப் படாகரைச் சுற்றிச் சுற்றிப் பாடிய வண்ணம் நர்த்தனமாடினான், இதனைக் கண்டு கைகொட்டிக் கட்டுக் கடங்கா சிரிப்பு சிரித்தனர் அந்நங்கையர். அவ்வமயம் குதிரைகளின் காலடிச் சத்தங் கேட்டு யாரெனத் திரும்பினாள் கமலாசனி. உடனே, கண்ணா! தம்பி! அதோ அப்பா! வந்து விட்டார்; என்றாள். அங்கு நாகர் தலைவனும் சிலரும் காட்சியளிக்கின்றனர்.

நாகர் தலைவன்: மகளே கமலா! கண்மணி கண்ணகர்! இந்தப் படாகர் இங்கு ஏன் வந்தான்.........இதென்ன இவன் கையில் குண்டு அடிப்பட்டிருக்கிறது.

சொர்ணாகர்: இவர், காதல் பேசி கற்பழிக்க வந்தார். கருணாமூர்த்தியின் கருணையால் வெட்ட வந்த கையையும்

இழந்தார்.......(இடையில், பேபே மாமா பேபே! என்று நர்த்தன மாடினுன்; சிறுவன் கண்ணுகர்)

நாகர் தலைவன்: கண்மணி கமலா! இந்தக் காட்டில் இவர்களை நம்பி நீ வெளி வரலாமா? விருந்திற்குத்தானே உன்னை வரச்சொல்லியிருந்தேன், அங்கு வராமல் காட்டின் அழகையா காணச்சொன்னேன்,.........அதோ பார்! அந்தச் சிங்கமும் புலியும் போராடி வருவதை...... அடடே! வெடிகுண்டு வேறு வெடிக்கிறதே! புலி வீழ்ந்தது......சிங்கம் ஓடுவதைப்பார்......இத்தகையப் பயங்கரக் காட்டில் வரலாமா கமலா? கண்ணுகர்! அக்காவுக்கு நீ சொல்லக்கூடாது...ஏ சொர்ணம்! இப்படி யெல்லாம் அழைத்து வரலாமா! கொடிய மிருகங்கள் வாழுமிடங்களுக்கு அழைத்து வரலாமா? ஏ படாகர்! உன்னைச் சமையல் வேலையைக் கவனியென்று விட்டு வந்தால் இங்கு காதல் நாடகமா நடிக்க வந்து விட்டாய்? சீ ஓடிப்போ! என் முகத்தில் விழிக்காதே! கண்ணு! குண்டு எந்தப் பக்கமிருந்து வெடித்தது தெரியுமா உனக்கு?

கண்ணுகர்: ஓ! நன்ருய்த் தெரியுமே! அதோ அந்த மரத்திலிருந்துதான் வெடித்தது......அனைவரும் அங்கே செல்கின்றனர்.

* * *

"அசையாதீர்கள்! அப்படியே நில்லுங்கள்!" என்ற குரல் தொனித்தது. உடனே நாகர் தலைவன் முதல் அனைவரும் அப்படியே நின்று மரத்தின்மேல் பார்த்தனர். பளிச்சென ஒரு வெளிச்சம் தோன்றியது. கலகல வெனச் சிரித்த வண்ணம் முகமூடியணிந்த ஒருவன் கீழே இறங்கி வந்தான்.

நாகர் தலைவன்: ஏ முகமூடி அணிந்த வீரா! யார் நீ?

அவன்: நான் யார் என்பது இருக்கட்டும்... இந்தப் பெண்களை அப்பால் போகச் சொல்லுங்கள்...

[அங்கிருந்த பெண்கள் அனைவரும் அப்பாற்சென்று மறைகின்றனர். அவனும் முகமூடியைக் கழற்றினுன்.... அடடே! வேறு யாருமில்லை நம் சேகரன்தான் என்ருன் நாகர்தலைவன்]

சேகரன்: பெண்களை இப்படித்தான் காட்டில் அலைய விடுவதோ?

கண்ணகர்: (சிறுவன்) நீங்கள் ஏன் இப்படிக் காட்டில் அலையிறீங்க?

சேகரன்: ...ஆ... நானு... இயற்கையைக் கண்டு களிக்க...

கண்ணகர்: அப்படித்தான் எங்க அக்காவும் வந்தாங்க.

நாகர்தலைவன்: கண்ணு...மாமாவை அப்படியெல்லாம் சொல்லாதே!... அதுபோகட்டும் நீர்தான் அந்தப் புலியைச் சுட்டீரா?

சேகரன்: ஆம்! அந்தப் புலியை மட்டுமில்லை...அந்தப் படாகரின் கையைப் போக்கியதும் என் துப்பாக்கியே... உன் செல்வியைக் கொல்லச் சென்ற அந்தக் கரடியைக் கொன்றதும் இந்தத் துப்பாக்கியே! அம்மட்டுமா! ஆற்றிற்கிரையாகும் நேரத்தில் நான் வராமல் இருந்திருந்தால் இவர்களின் கதி அதோகதிதான்.

ஹா!...கமலா!... என்ற வண்ணம் நாகர் தலைவன் பெண்கள் இருக்குமிடத்திற்கு ஓடினான்....அங்கு சென்றவுடன் ஆற்றில் நடந்த அனைத்தையும் சொர்ணம் தெரிவித்தாள். தக்க சமயத்தில் காப்பாற்றிய சேகரனை வணங்கி நன்றி தெரிவிக்கும்படி நாகர் தலைவன் தன் மகளையும் மகனையும் மற்றவரையும் கேட்டுக்கொண்டான். கமலாசனி வந்தாள்...கண்டான் சேகரன்...

"கண்ணோடு கண்ணிணை நோக்கொக்கின்;
வாய்ச் சொற்கள்
என்ன பயனுமில" என்னும்

பாவிற்கு இலக்காயினர். "வணக்கம்" என்று தமக்கையும் தம்பியுமாக நன்றி செலுத்தினர், "இதுதான் தன் எதிர்கால இன்ப வாழ்க்கையின் இன்பப் பேரழைப்பு" என்று சேகரன் எண்ணும் வகையில் சூழ்நிலை தவழ்ந்தது அங்கே!

சேகரன்: கூட்டம் முடிந்ததா?

நாகர் தலைவன்: ஆம்...எல்லோரும் வீடடிற்குப் போகலாம்...புறப்படுங்கள் சீக்கிரம்...கண்ணு! அக்கா வோடு புறப்படு சீக்கிரம்......

கண்ணுகர்: மாமா!

நாகர்தலைவன்: எல்லோருந்தான்.

சேகரன்: படே ஆள் தான் போலிருக்கிறது.....

நாகர்தலைவன்: அதற்கென்ன குறைவு...அதோ காலைச்சூரியன் மாலையை உண்டு பண்ணுகின்ருன். புறப் படுங்கள்...சேகர்! உன் உதவிக்கு மிக்க நன்றியப்பா!

சேகரன்: நன்றிக்குரிய பெரிய காரியம் ஒன்றும் சாதித்து விடவில்லையே!
அனைவரும் இன்புடன் இல்லம் நாடலாயினர்.

* * *

இரண்டொரு நாட்களாகத் தன் நண்பன் சேகரனின் மனம் எதனையோ நாடி அல்லலுறும் தன்மையதாய் இருந்த தனைக் கண்ணுற்ற சந்திரகுமார் சேகரனை அதைப்பற்றிக் கேட்க முயன்ருன். ஆனுல் எப்படி கேட்பது என்றும் ஐயுற்ருன். என்றும் எங்கும் எப்பொழுதும் பிரியாதிருந்த சேகரன் தன்னை விட்டுப் பிரிய எத்தனிப்பதும் அதில் வெற்றி யடையாவிட்டால் சற்றே மனம் கலங்கி யிருத் தலையும் உணர்ந்தான். இதே நிலையை யுண்டாக்கி அன்று மாலையும் எங்கேயோ வெளியே கிளம்ப எத்தனித்தான்...

சந்திரன்: சேகர்!...சேகர்! இங்கேவா!

சேகரன்: (தன் மனத்திற்குள்......எப்படிப் பார்த் திருப்பான்... அவனை யறியாமல் புறப்பட்டேன்... கண்டு விட்டானே... இனி சொல்லிவிட வேண்டியதுதான்...) சந்திரா...அந்தக் கடற்கரைப் பக்கமாகச் சென்று வருகின் றேன்...விடை கொடு...

சந்திரன்: சேகர்! நான் வரக்கூடாதா? வந்தால் உனக்கு ஆகவேண்டிய நற்செயல் ஆகாமற் போயிடுமா? சொல் சேகர்! உன் உள்ளத்தினை இங்குள்ள ஏதாவது

ஒரு உன்னதக் கிளியிடத்தில் பறிகொடுத்து விட்டாயா? நானும் கேள்விப்பட்டேன்...(பாடுகின்றான்)

சந்திரன்: அன்பான தோழனே! அகிலம் புகழும் [வீரனே
என்றுமிலா ஏக்கம் இன்று வந்ததேதடா?

வையகத்தின் மக்கள் வாழ வந்த நண்பனே.
பையபைய வந்த அந்த மயக்கம் ஏதடா!
(அன்பான)

சேகரன்: இன்பந் தவழுதே எங்கும் பொங்கி [வழியுதே
என் நண்ப! காவினிலே தென்றல் வீசுதே!

கடற்கரை யோரமாய் அமைந்த அந்தக் காவிலே
சுடர்வீசிப் பொன்னான மலர்கள் மலரும் நேரமே
மணம் எங்கும் வீசிடவே தென்றற் காற்றுஞ்சேர்ந்திடவே
குணமதில் குன்றுமண இன்பக் காற்று வீசுதே!
(இன்பம்)

சந்திரன்:

காதல் வேட்டையா? கருத்தின்ப பாட்டையா?
கனிவாய் திறந்து பதில் சொல்லும் நண்பனே!

கடற்காற்றை அடையவா? காதலின்பம் பெருகவா?
இன்ப மணம் அடையவா? இன்பக் குயிலைக் காணவா?
(காதல்)

இயற்கையின் எழில்வீசும் இன்பக்காற்றை அடையவா?
இயலின்பத் தோகை மயிலான அணங்கை நாடியா?
சொல்லும் வகை யறியாது சுந்தரனே விழிப்பதேன்?
(காதல்)

சேகரன்:

இயற்கையின் எழிலதனால் என்வாழ்வில் நண்பனே!
இயற்கை மணம் வீசியே என் மனதைக் கவர்ந்ததே!

புதுமணம் வீசியே ஓர் பொன்னான மலருமே
இனிமையான காவினிலே என் மனதைக் கவர்ந்ததே !
(இயற்கை)

இனிதான-கருத்தான—இன்ப வாழ்வின் மலரதே
என் நண்ப-என் வாழ்வின் மலரதுமே ஆகுமே!
என் அன்ப-இம்மயக்கந் தவிர வேறொன்றில்லையே!
(இயற்கை)

சந்திரன்: புத்துலக வீரனே! புகழ்சார்ந்த நண்
[பனே!
பொன் மலரையுலகிலே புகுந்தெடுக்க வழியிதே.

புன்னகை தவழ்ந்திடும் பொன்னான மலராயின்
என்னதான் வந்தாலும் எதிர்கொள்ளச் செய்திடுவாய்.
பொன்னுலக வாழ்விதிலே பொறுப்பான உள்ளமொடு
இன்ப மணம் வீசுமாயின் இனிய மலரைத் தேர்ந்தெடு
துன்பந்தரும் மலராயின் தூரமாக விலக்கிடு.
(புத்துலக)

சேகரன்:

காதலின்பந் தந்திடுவாள் கருத்தாக வாழ்ந்திடுவாள்
நாதமெங்கும் முழங்கியே நற்பணிகள் புரிந்திடுவாள்
இத்தகைய மலரைத் தேர்ந்தெடுத்தால் என்ன நண்பனே?
எத்திசையும் புகழ்நண்ப! சென்றுவர விடைகொடு!

சந்திரன்: அன்பான தோழனே அகிலம் புகழும்
[தீரனே
அன்பான வாழ்வில் வந்த மயக்கம் நீங்கியே
இன்பாகச் சென்று கலந்து மீள்கவெற்றியே
(அன்பான)

சேகரன்: தோழா! உனக்கு எல்லாம் தெரியுமா?

சந்திரன். என் உடல் உன்னைப் பிரிந்திருந்தாலும் என் உயிர் உன்னைப் பின் பற்றித்தான் இருக்கும். சேகர்!

உள்ளதைச் சொல்! "நீ மறைக்கவேண்டும்" என்று எண்ணுவதை நான் நன்கறிவேன்...கடற்கரைப் பக்கம் காற்று வாங்கப் போகின்றாயா? அல்லது கடற்கரைப் பூங் காவில் உள்ள நாகர் தலைவனின் மகளைக் காதலிக்கப் போகின்றாயா? இரண்டில் உண்மையானதைச் சொல்... சேகர்...

சேகர்: சந்திர்...சந்திர்...என்னை மன்னித்து விடு. இதுவரை எங்கும் பறி கொடுக்காமல் இருந்த என் உள் ளத்தை இத்தீவின் தலைவனின் மகள் கமலாகரிடம் பறி கொடுத்து விட்டேன். இது உண்மை...உன்னிடம் சொல்ல அஞ்சினேன். அதனால்தான் இரண்டொரு நாட்களாக உன்னிடம் சொல்லாமலேயே அங்குச் சென்று வந்தேன்.

சந்திரன்: பெயர்...கமலாகர்!...

சேகரன்: ஆம் தோழா! அவளைப் பார்த்தால் உன் தங்கையைப் பார்க்கவே வேண்டியதில்லை. ஒரே ஒரு வித் தியாசந்தான். இவள் இந்த நாட்டு உடையை அணிந்து காட்சி யளிக்கின்றாள்......அவ்வளவுதான்.

சந்திரன்: சேகர்! உன் விருப்பம்போல் சென்றுவா! ஆனால் சற்று எச்சரிக்கையாகவே நடந்து கொள்...நாகர் நாட்டு நங்கையவள். நஞ்சே அமிர்தமானால் நல்லதுதான், நஞ்சு நஞ்சாக இராமல் வாழ்வில் என்றும் அமிர்தமாகவே இருந்தால் நெருங்கு.. இன்றேல்...நெருங்காதே!

சேகரன்; தோழ! அவள் நம் நாட்டு இளங்கொடி யென்றுதான் எனக்குத் தோன்றுகிறது. உன்னைப் பார்த் தால் அவளைப் பார்க்கவே வேண்டியதில்லை......

சந்திரன்: அப்பொழுது அங்கு ஏன் போகின்றாய்? இங்கேயே இருந்து என்னையே பார்த்துக் கொண்டிரு.

(இருவரும் கைகொட்டிச் சிரிக்கலுற்றனர்)

சரி! சரி! நேரமாகி விட்டது. மேலும் இன்று பௌர் ணமி! நல்லநாள்...சென்றுவா! நான் கடற் கரைக்குச் சென்று வருகின்றேன்...

வெற்றியோடு வா!

ச—9

நாகர் (மிலேச்சர்) தலைவனால் அளிக்கப்பட்ட புரவியில் அமர்ந்த சேகரன், சிங்காரமாகச் சென்று, அந்தக் கடற்கரைப் பூங்காவினை அடைந்தான். சென்றவன் பூங்காவினுள் நுழையாமல் ஆங்கிருந்த மரமொன்றில் அமர்ந்து பூங்காவில் யாது நிகழ்கின்றதென்பதைப் பார்க்கலானான்.

அங்கே...கண்ணா! கண்ணா! என்றழைத்தவண்ணம் கமலாசனி தன் தம்பியைத் தேடிவந்தாள். பூஞ்செடியில் சென்று மறைந்திருந்த கண்ணனும் வெளிப்பட்டு அக்கா! நம் மாமன் இன்னும் வரவில்லையே! என்றான்.

கமலாசனி: இன்று கட்டாயம் இங்கு வருவார்.

கண்ணாகர்: எப்படியக்கா தெரியும் உங்களுக்கு...

கமலாசனி: நம் தோழி சொர்ணாகரிடம் சொல்லி இருந்தாராம்...அவள்கூட அதோ அந்த மரத்தின் பக்கமாகச் சென்றிருக்கின்றாள்...

கண்ணாகர்: அக்கா! அந்த மாமன் ஏன் அந்த மரத்தின்மேல் வந்து உட்கார்ந்து கொண்டு நம்மையே முறைத்துப் பார்த்தபடி இருக்கிறார்.

கமலாசனி: அதுவா...அது...அது...

கண்ணாகர்: நான் சொல்லட்டுமா...அக்கா!...உன்னைக் கலியாணம் பண்ணிக்க வலை வீச எத்தனிக்கிறார் அந்த மாமா! அதுதானே அக்கா!

கமலாசனி: இல்லை!...இல்லை...அன்றைக்கு நமக்கு ஆபத்து ஏற்பட்டபோது நம்மைக் காப்பாற்றியது போல இங்கேதாவது ஏற்பட்டால் காப்பாற்ற வருகின்றார். அவ்வளவுதான்...

கண்ணாகர்: அப்படியாயின் இங்கு ஏன் வராமல் அந்த மரத்திலேயே உட்கார்ந்து கொண்டிருக்கிறார்...

கமலாசனி: நாம் வரச் சொன்னால்தானே அவர் இங்கு வர முடியும்...

கண்ணாகர்: இப்பொழுது வந்தால் நான் சென்று அழைக்கட்டுமா!

கமலாசனி. வேண்டாம் கண்ணு! அந்த வேலையைச் சொர்ணம் பார்த்துக் கொள்வாள்.

கண்ணுகர்: அக்கா! அக்கா! ஒரு பாட்டுப் பாடுங்களேன்...

கமலாசனி; பாட்டா! எனக்குப் பாடத் தெரியாதே.

[சிறுவன் கண்ணைத் துடைத்து அழுத வண்ணம் அப்பால் ஓடி நின்று...அழுதான். இதே சமயத்தில் மரத்தில் இருந்த சேகரனையுங் கண்டாள் கமலாசனி.] உடன்

கமலாசனி: கண்ணு! அன்புதவழ் கண்ணு! அங்கே மறையாதே! இங்கே வா! என்னோடு பேசவா! ஓடாதே! என் அருகில் அன்பாய் ஓடி வா! கண்ணு! அன்பு தவழ் கண்ணு! ஓடி வா!

(பாடுகின்றாள்)

## கண்ணா ஓடிவா !

அன்பு தவழ் கண்ணா நீ அன்பாய் ஓடிவா !
அன்புப் புன்னகையோடு ஆடிப் பாட வா (அன்பு)
புவிபுகழ் சோலையிலே பொன்னா ஓடிவா !
கவிபுகழ் காவினிலே கண்ணா ஆடவா (அன்பு)

இயல் இசை நாடக இன்பத் தமிழால்
நயமா யிக்கா நல்கும் நல்ல கனியின்
சுவை கண்டு சொப்பன லோகம் போலவே
நகை கொண்டு நடமாட நாடி ஓடி வா ! (அன்பு)

மல்லிகை முல்லை ரோஜா மண மலர்களும்
நல்லியல் போடு மணம் எங்கும் வீசிடும்
பொங்கு மின்ப வெள்ளமெனும் அன்பால் கண்ணா
தங்கி நாமின்புறவே தாவி ஓடிவா ! (அன்பு)

இப்பாட்டைப் பாடி முடித்தாள். உடனே மாங்கனி யொன்று அங்கு கிடைத்தது. அதனை எடுத்தோடி வந்த சிறுவன் தன் தமக்கையை உண்ண வேண்டினன். அவள் தம்பியைச் சாப்பிடக் கட்டளையிட்டாள். இதனைக் கண்ட சிறுவன், அக்கா! அந்தக் கனியை அந்த மாமாவுக்குக் கொடு என்று கூறி அப்பால் ஓடி மறைந்தான் சிறுவன். கனியை வெடுக்காய் வீசி யெறிந்தாள் அந்தக் கன்னி. மேலே சென்ற கனி கீழே விழவில்லை. மாறாக அம் மரத்தி லிருந்து ஒரு வாலிபன் கமலாசனியின் பக்கமாகத் தொப் பென்று குதித்தான். இருந்தாலும் இவ்வளவு துணிச்சல் கூடாது' என்று ஓடி அங்கிருந்த மரத்தின் பக்கமாக மறைந்தாள் அவள். பின் பற்றிய சேகரனும், அன்பே! என் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட பண்பே! கனி ரசத்தேனே! சேற்றில் பிறந்த செந்தாமரையே! என் உள்ளத்தை உன் வயமாக்கிக் கொண்ட உன்னத மலரே! என்றான்.

கமலாசனி: மலராவது! மாணிக்கமாவது! நான் நாகர் தலைவன் மகள்...என்னைக் கனவிலும் நெருங்க வேண்டாம்.

சேகரன்: புவியென்னும் பொற்சோலையிலே, கவி புகழ் ஆரணங்கே! நாகரது தீவினிலே, நாகரது தலைவ னுக்கு நல்லதொரு மகளாக வந்த என் வஞ்சிளங்கொடியே! நான் நாடி வந்ததைக் கண்டு அதற்குத் தக்க பதிலளி யாயோ! நாகர் கொடி யென்றாலும் எம் நாட்டு இளங் கொடி யென்றெண்ணிடத்தான் தோன்றுகிறது. மற்றும் நேற்றிரவு என் கனவுலகிலே நீ தோன்றினாய்.....அங்கே ......ஞாலத்தின் கதிரவனும் நன்றாகக் கீழ்த் திசையில் தோன்றும் வேளை, காலை வேளையிலே காலைக் கடன் களையே முடித்துவிட்டு, அன்பாகி, அருளாகி அவனியின் தாயான நம் அன்னையை நான், நன்றாக உருகிப்பாடும் வேளை, நயமாக நீயுமேதான் அங்கே தோன்ற, மேற்றிசை வானில் ஏதோ வெளிச்சம் தோன்ற, அந்தவொரு ஜோதி யினைக் கண்ட நீயும் என் பக்கல் சேர, இருவருமே சேர்ந்து அச் சோதியினை வணங்கிப் பாட, அப்போது அச்சோதி

நம்மைக்கண்டு, அவனிபுகழ் வாழ்வுடனே, வாழ்வீர் காண்" என்று, ஆசியதை நல்கி மறைந்ததங்கே...... அப்பொழுதே நம் வாழ்க்கை தொடங்கியதென்றின்புற்ற போது, சட்டெனவே என் தோழன் எழுப்பி விட்டான்.

கமலாசனி: உண்மையிலா!...நீர் கண்ட கனவு அப்படியிருக்காது. நான் சொல்லட்டுமா?

சேகரன்: சொல்! சொல்!

கமலாசனி: நன்றாகக் காதலித்த நங்கையொடு நீர் தாமும் வாழுங்காலே, வானிலே பறக்குந்தட்டில் வந்த வொரு பொற்கொடியைக்கண்டு, காதலித்த கன்னியைக் கை நழுவவிட்டு, பறக்குந்தட்டு பருவக் கன்னியோடு பறந் திருப்பீர்.

அவ்வளவுதான்...இருக்கும்...தாங்கள் கண்ட கனவு.

சேகரன்: இல்லை...கமலாகர்...முதல் கண்ட கனவு உண்மையே! உண்மையில் உன்னையான் காதலிக்கின் றேன்.

கமலாசனி: தங்கள் எண்ணம் இளமையின் எழுச்சி!

சேகரன்: இல்லை! அது வாழ்க்கை யின்ப வளர்ச்சி!

கமலாசனி: கன்னியைக் கவரும் சூழ்ச்சி!

சேகரன்: இல்லை நம் எதிர்கால இன்ப வாழ்வின் மாட்சி! கண்ணே! உன் முழுப்பெயர்.........சொல்ல மாட்டாயா?...

கமலாசனி: தங்கள் பெயர்?

சேகரன்: உன் பெயரைச் சொல் முன்னர். பின்னர் என் பெயர்.

கமலாசனி: என் முழுப்பெயர் கமலாசனி!

சேகரன்: ஆகா!...கமலாசனி! சந்திரகுமார்...உன் தங்கை...கமலாசனி. கண்ணே! உன் அண்ணன் சந்திரனின் தோழன் சேகரனும் நான்தான். உன் அண்ணனும் இங்கு வந்திருக்கிறன்.

கமலாசனி: என்ன! நாம் இருப்பது கனவுலகா? அல்லது நினைவுலகா?

சேகரன்: கமலாசனி! அன்புத்தோழன் சந்திரனின் தங்கையே! நாங்கள் இங்கு வந்து தங்கியிருப்பது தெரியாதா?

கமலாசனி; நாகர் தலைவனின்...உத்திரவு...அண்ணு எங்கே இருக்கிருர்.

[அதற்குள் அந்தப் பக்கமாகச் சென்ற சந்திரனைக் கண்ட சேகரன்,...சந்திரா! உன் தங்கை கமலாசனி... என்ருன். திரும்பிப் பார்த்தான் சந்திரன்...தன் தங்கையைக் கண்டு தாவி ஓடிவந்தான். ஆகா! அனைவர் உள்ளத்திலும் இன்பமாறி பொழிந்தது]

சந்திரன்: கமாலா! இங்கு எப்படியம்மா வந்தாய்?

கமலாசனி: எல்லாம் கிண்டாமணியின் சூழ்ச்சி தான். [என்று அன்றுவரை நிகழ்ந்ததைக் கூறலுற்ருள்]

சந்திரன்: நம்மையெல்லாம் ஒன்ருய்ச் சேர்த்த அந்த இறைவனை வணங்கலாம் வாருங்கள்.

சேகரன்: சந்திர்—நான் எண்ணியதையே பெற்றேன்.

சந்திரன்: அது உன் மனப்படியில்லை—அந்த இயற்கையின் எழில்தான் அதற்கும் காரணம்—

கமலாசனி: அண்ணு!—அதோ—சிற்றப்பா (நாகர் தலைவன்) கூட வருகின்ருர்.

நாகர் தலைவன்: கமலா! ஏன் அழுதுக் கொண்டிருக்கின்ருய்—சந்திரா! சேகர்! இங்கேன் வந்தீர்கள்?

சந்திரன்: கமலா என் தங்கை!—

கமலாசனி: ஆம் சிற்றப்பா! இவர்தான் என் அண்ணு!

கண்ணுகர்: (சிறுவன்): சந்திரா அண்ணு! இந்த சேகர் மாமா ரொம்ப பொல்லாதவரா இருக்கிருர்—இன்றைக்கு நான்கு நாட்களா இந்த தோட்டத்திற்கே அக்காவைப்பார்க்க வந்து கொண்டிருக்கார்—போக்கிரி மாமா—

நாகர்தலைவன்: மாமாவை அப்படியெல்லாம் சொல்லி டாதே! கமலாசனி ஏன் அழுகின்ருய். எல்லோரும் ஒன்று கூடியபின் மகிழ்வதா அல்லது அழுவதா! எல்லாம் சுபமே முடியும்—சரி நேரமாகி விட்டது. எல்லாரும் சாப் பிடலாம் வாருங்கள். கமலா! இன்று உணவு பரிமாறுதல் உன்வேலை. (மகிழ்ந்தான் சேகரன்-சிரித்தான் சந்திரன்... சிலந்தான் சிறுவன்) ஏன் கண்ணு—அக்கா வேலை செய் யக்கூடாதா?

ஆம்—ம்.

கமலாசனி ஓடோடியும் வந்து அந்தத் தம்பியைத் தூக்கி வாரி முத்தமிட்டு எவ்வளவு அன்படா கண்ணு உனக்கு!—என்று கண்ணனைத் தூக்கிய வண்ணம் முன்சென்ருள்.

சேகரன் முதல் அனைவரும் மகிழ்ந்தவர்களாய்ப் பின் தொடர்ந்தனர்,

## 22. நண்பர்கள் கோவை திரும்புதல்

நாகர் தலைவன் வளர்த்து வந்த கன்னிகை கமலாசனி சேகரனையே தன் கணவனுக அடைய வேண்டுமென்னும் பேரன்பினுல் அத் தலைவன் பாற்சென்று தன் விருப்பத் தைத் தெரிவிக்கலானுள். நாகர் தலைவன் வளர்ப்புப் பெண்ணல்லவா கமலாசினி. எனவே இசைகின்ருன்.

இணைபிரியா நண்பர்களிருவரும் தங்கள் நாடு செல்ல விழைகின்றனர். விடையுங் கேட்கலாயினர். தங்கள் நாடு திரும்ப விடை கேட்ட நண்பர்களிருவரையும் அழைக் கின்ருன்; நாகர் தலைவன். கன்னிகை கமலாசினியை சேகருக்குப் பரிசாக அளிக்கலுற்ருன். இதைக் கண்ட சந்திரன் உள்ளூர உவப்படைந்தான். சந்திரனுக்கும் வேண்டிய பரிசுகளை வழங்கினுன், இவ்விரு நண்பர்களும் தாங்கள் கொண்டு வந்திருந்த மில் துணிகள் அனைத்தை யும் நாகர்களுக்கு வழங்கி விட்டனர்.

நாகர் தலைவனும் தாங்கள் அதற்குமுன் கொள்ளை யடித்து வைத்திருந்த பொருட்களில் ஏராளமானவற்றை கப்பலில் ஏற்றி அம்மூவரையும் வழியனுப்பினான். அக்கா சென்ற கப்பலையே சிறுவனும் தன் உப்பரிகையினின்றும் கண் கொட்டாமல் பார்த்தவண்ணமிருந்தான்.

கப்பலும் நம் நாட்டின் கீழ்க் கரையை அடைந்தது. பின்னர் அனைவரும் ஆனந்தப் பள்ளுகள் பல பாடிய வண்ணம் கோவையை அடைந்தனர்.

நாடெங்கும் இவ்வீரர்கள் மிலேச்சர் தீவை அடைந்ததைப் பற்றியும், ஏராளமான பொருட்களுடன் திரும்பியதைப் பற்றியும் பத்திரிகையுலகில் பரப்பப்படுகின்றது.

நாடெங்கும் தன்மகள் கமலாசினியைத் தேடிய தனபாலும், தமிழரசியும் மாமா கருணாநிதியும் அப்போதுதான் கோவையை அடைகின்றனர். சந்திரன் அவன் நண்பன் சேகரன், சேகரனின் மனத்தைப் பறித்த காதலி கமலாசினி ஆக அனைவரும் கோவையில் உள்ள இல்லத்தை அடையலாயினர். மாணிக்கனார் எதிர் கொண்டழைக்கலானார். இதற்குள் அங்கு அப்பொழுதுதான் வந்த சந்திரனின் பெற்றோர்களும் மாமா கருணாநிதியும் ஆங்கு சேகரின் பக்கத்தில் நின்று கொண்டிருந்த காரிகையைக் கண்ணுறக் கண்டார்கள்.

காண்டலும் உவகை பூக்க மகளே! என்று ஓடினார் தந்தை தனபால். அப்பா! என்றலறினாள் நங்கை கமலாசினி, தாயார் மகளைக் கண்டதும் ஆனந்தக் கண்ணீர் அளவின்றி சொரிந்தனள், மாமா கருணாநிதி மகிழ்ந்தனர். மாணிக்கனார் இறைவனின் செயலை எண்ணிப் புகழ்ந்தார்.

தங்கை கமலாசினி காணாமற் போனவுடன் தந்தி தரவில்லையென்று பெற்றோர் மீது பேராத்திரங் கொண்டான்; சந்திரன். இறுதியாக எல்லாவகைச் செய்திகளும் கிண்டாமணியின் கையாட்களால் மறைக்கப்பட்டு விட்டன; என்பதை யுணர்ந்த பின் அமைதி கொண்டான்.

# 23. திருமணங்கள்

சந்திரனுக்குச் சேகரன் நண்பனுக்கு நண்பனாகவும், மைத்துனனுக்கு மைத்துனனாகவும் திகழலானான்.

நம்பி சேகரனுக்கும் நங்கை கமலாசினிக்கும் குறித்த நாள் ஒன்றில் மணம் நடத்தத் தீர்மானிக்கின்றனர்.

சேகரன் தடுக்கின்றான்; சந்திரனுக்கு மணம் ஆன பின்தான் மணம்புரிந்து கொள்ளுவதாக. சந்திரனுடைய வேண்டுகோளுக் கிணங்கி ஒருவாறு இணங்குகின்றான் சேகரன்.

நாகர் தலைவனும், கமலாசனியின் அன்பிற்குரிய தம்பியான கண்ணனும் திருமண வைபவ இதழ் கண்டு கோவைக்குப் புறப்படுகின்றனர். நாடெங்கும் மணச் செய்தி பரப்பப்படுகின்றது. குறித்த நாளில் திருமணம் சிறப்பாக நடைபெறுகின்றது. தம்பி கண்ணன் பெரு மிதங் கொண்டான். அனைவரும் இன்புறுகின்றனர், இன்பக் கடலில் மூழ்கித் திளைத்தனர் இன்பகரமான இளந் தம்பதிகள்!

கிண்டாமணியின் சிறையினின்றும் ஓடிய மோகனா கோவையை யடுத்த ஒரு குக் கிராமத்தில் உறைந்து வந்தா ளல்லவா!

மோகனா அப்பொழுதுதான், கோவை திரும்பி யுள் ளான் சந்திரன் என்று பத்திரிகை வாயிலாகப் படித்தறிந் தாள். உடனே கோவையை நோக்கிப் புறப்பட்டாள்.

ஏற்கெனவே திருமணத்திற்குச் சென்றிருந்த இளங் கோவன் சந்திரனிடம் தங்கையின் செய்தியைத் தெரி விக்க, இருவரும் புறப்படுகின்றனர் தேடுவதற்காக. ம்ணம் புரிந்த சந்திரனின் மைத்துனன் சேகரனும் உடன் வரத் தயாரானான். சந்திரன் தடுத்தான். பயனில்லை. உடனே மூவரும் புறப்படலாயினர் மோகனாவைத் தேட.

சென்னையிலிருந்து புறப்பட்ட மோகனாவின் தந்தை அம்பிகாபதி அப்பொழுதுதான் கோவையை நாடிய வண் ணம் இருந்தார்.

கோவையிலிருந்து சந்திரன், சேகரன், இளங்கோவன் ஆக மூவருமாகப் புறப்பட்டார்களல்லவா? இங்ஙனம் இரண்டு கார்களும் எதிர் நோக்கியவண்ணம் விரைவாய்ச் சென்றுகொண்டிருந்தன,

குறுக்கே ஒரு சிற்ருறு. அவ்வாற்றின்மேல் பாலம் போடப்பட்டிருந்தது. அச் சமயத்தில்தான் அப் பாலத்தின் மேல் சென்றுகொண்டிருந்தாள் மோகன. அவர்களின் இரண்டு கார்களும் எதிர்ப்படலாயின. தந்தை அம்பிகாபதியின் கார் மோகனவின் பக்கல் நெருங்கிக்கொண்டிருந்தது. காதலன் சந்திரனும் எதிரில் ஒருகாரில் வந்துகொண்டே யிருக்கலாஞன். தன் மகளைக் கண்ட தந்தை அம்பிகாபதி, மகளே! மோகன!! என்ற குரலுடன் சடக் என்று ப்ரேக் போட்டுக் காரை நிறுத்தலாஞர். இதைக் கேட்ட மோகனவுக்குக் காதில் நாராசம் காய்ச்சி விடுவது போன்றிருந்தது.

கண்டாள் தந்தையை. யோசித்தாள். மீண்டும் தன்னை அழைத்துப் போய் எப்படியாவது நல்லப்பனுக்கே தன்னை மணம் செய்து வைத்து விடுவார் என்று எண்ணியதும் தந்தை அருகில் நெருங்குவதற்குள், இறப்பதே மேல் என்றெண்ணி வெள்ளப் பெருக்கெடுத்து ஓடிய அவ்வாற்றிலே பாய்ந்தாள். இதைக் கண்டார் அம்பிகாபதி. உள்ளம் பதறலாஞர். கத்திஞர் மகளே! மகளே! என்று. பாவம் பெரியவர்—என் செய்வார்? இந் நிகழ்ச்சியைச் சந்திரன் கண்டான். உடனே உள்ளம் துடி துடிக்க காரை நிறுத்தி, மோகன குதித்த இடத்தினருகாமையிலேயே குதிக்கலாஞன். சேகரனும் உடன் பாய்ந்தான் அவ்வெள்ளாற்றிலே. இளங்கோவன் தந்தையைத் தூற்றியவாறே கரைமேல் இருந்துகொண்டு கதறலாஞன். அம்பிகாபதியும் உள்ளங் குமுறலாஞர்.

எத்தனையோ இன்னல்கட்கெல்லாம் உள்ளாகிய சந்திரனும் சேகரனும் அவ் வெள்ளாற்றினில் அடித்துச் செல்லப்பட்ட இளங் கன்னிகையை எங்ஙனமோ கரை சேர்த்தனர். மோகன மூர்ச்சையடைந்தனள். களைப்பினுல் சந்திரனும் மூர்ச்சையடைந்தனன். உடனுக்குடன் சேக

ரனும் இளங்கோவனும் தங்கள் காரில் சந்திரனையும், தந்தையின் காரில் மோகனாவையும் எடுத்துச் சென்றனர் ; வைத்தியசாலைக்கு.

மோகனாவைப் பிடிவாதமாக சென்னைக்கு எடுத்துச் சென்றார் தந்தை அம்பிகாபதி. சந்திரன் கோவைக்கு எடுத்துச் செல்லப்படுகின்றான். சென்னை சென்ற அம்பிகாபதி மகளுக்குச் சிகிச்சை செய்து வீட்டிற்கழைத்துச் சென்று தன் மனையாளிடம் நிகழ்ந்தனவற்றைத் தெரிவிக்கலானார். அம்மம்மையாரும் சந்திரனின் வீரத்தையும், நண்பனையே தன் உயிராகக் கொண்ட சேகரனையும் புகழலானாள்.

கோவை சென்ற சந்திரன் சிகிச்சை பெற்ற பின்னர், அக்காரிகை யாரெனக் கேட்கலானான்; இளங்கோவனை. உண்மையறிந்த சந்திரன் உள்ளங் கொதிப்படைந்தான். அதே சமயத்தில் இயற்கையையும் போற்றினான். இதற்குள் இளங்கோவன் ஒரு நல்ல நாளைக் குறிப்பிட்டு, அக்குறித்த நாளில் சென்னையில் நாட்டின் நலனைக் கருதிய வகையில் சொற்பொழிவு மன்ற விழா ஒன்று நடைபெறப் போகின்றதென்றும், அதற்கு அந் நண்பர்கள் வரவேண்டுமென்றும் கேட்டுக் கொள்ளுகின்றான், இசைந்தான் சந்திரன். உள்ள உவப்படைந்தான் சேகரன்.

விடைபெற்ற இளங்கோவன் நேரே திருச்சி சென்று, உள்ள விஷயத்தைத் தெரிவித்து, சிற்றப்பாவை அழைத்துக் கொண்டு சென்னை சேர்ந்தான்.

* * *

தங்கள் தங்களுக்காகப் போடப்பட்ட நாற்காலிகளில் அனைவரும் அமர்கின்றனர். மோகனா தலை குனிந்த வண்ணம் முகம் சோர்ந்தவளாய் நிற்கலானாள். சிற்றப்பா சிவானந்தமும், அண்ணா இளங்கோவனும் மோகனாவைச் சந்திரனுக்கே மணம் முடிக்கவேண்டி சாதிக்கலாயினர்.

பெற்றோர்கள் மறுக்க, சந்திரன் செய்து வந்த, அளவிறந்த பல வீரச் செயல்களையும், தற்போது நாட்டில் நிலைபெற்ற புகழ் அடைந்துள்ளதையும் பற்றி எடுத்

துரைக்கலாயினர். இவைகளை யெல்லாம் கேட்டு வந்த பெற்ருேர்கள் இசைந்தனர். கேட்கவா வேண்டும் மோகனுவின் இன்பத்திற்கு. காலமும் ஓடியது; சொற்பொழிவு மன்றமே மண மன்றமாகத் திகழ்கின்றது.

நாடெங்கும் திருமணச் செய்தி பரப்பப்படுகின்றது இதைக் கண்ணுற்ற சந்திரனின் ஆனந்தத்திற்கு அளவேயில்லை. சேகரனும் கமலாசினியும் மகிழ்ந்தனர்.

அனைவரும் சென்னையை அடைகின்றனர். சந்திரனின் பெற்ருேர்களும் வந்து சேர்ந்தனர். மாமா கருணுநிதியும் வந்தடைந்தார். அனைவரும் ஆனந்தக் கடலிலாழ அத் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. அறிஞர்கள் புகழ்ந்தனர். பரிசுகள் பல குவிந்தன,

நாடெங்கணுமிருந்து வாழ்த்துச் செய்திகள் வந்தன, இன்பத் திருமணம் இசையுடன் நிகழ்ந்தது. இத் திருமண நினைவாக சேகரன் நாடெங்கும் உள்ள பள்ளிகளில் திருக்குறள் நூல்களை மாணவர்கட்கு அளிக்கலுற்ருன். இங்ஙனம் அனைவரும் இன்பக்கடலிலாழ இன்பத் திருமணம் இன்பமாக நடைபெற்றது.

"இளநங்கை மோகனுவும், இளங்காதலன் சந்திரனும்; சந்திரனின் நண்பன் சேகரனும், தங்கை கமலாசினியும் இல்லறக் கடலிலே இன்பப் படகில் அமர்ந்திருக்க, மைத்துனன் இளங்கோவன் ஒரு பக்கமும், தோழி வாணி ஒரு பக்கமும் இருந்து வாழ்க்கைப் படகைச் செலுத்த, இன்ப வாழ்வை இசையுடன் நடத்தலானுர்கள் இளந் தம்பதிகள்."

135

வாழ்க இயற்கையின் அருள்பெற்று அனைவரும்!

வாழ்க தமிழ்! வாழ்க தமிழ் நாடு!!

வாழ்க வையகம்!!!

